கழக வெளியீடு : ௯௫௫

# கழகத் தமிழ்க் கோவை

## மலர் - ௩

### எட்டாம் வகுப்பிற்கு உரியது

[1958 ஆம் ஆண்டு புதிய பாடத் திட்டப்படி அமைக்கப்பெற்றது]

க. அ. இராமசாமிப்புலவர்.
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.



தொகுத்தோர் :
கழகக் கல்வியறிஞர் குழுவினர்

[Approved by the Madras Text-Book Committee,
for class use, vide page 21 of the
Fort St. George Gazette, dated 13-5-1959.]

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1

# பதிப்புரை

அரசியலார் 1958 இல் வெளியிட்ட பாடத்திட்டத்தின்படி எட்டாம் வகுப்பிற்குரிய செய்யுட் பகுதியும், உரை நடைப் பகுதியும் சேர்த்துக் கோக்கப்பட்டுக் "கழகத் தமிழ்க் கோவை" என்னும் பெயருடன் முதல் முறையாக எமது கழகத்திலிருந்து புதுமையாக வெளிவருகிறது இது.

கழகம் இதற்கு முன்னும் கழகத் தமிழ்ப் பொழில், கழகத் தமிழ்ச் சோலை முதலிய பல தொகை நூல்கள் மாணவர்கட்குத் தகுதியாக அரசியலார் வகுத்த திட்டத்தின்படி பல ஆண்டுகளாகப் பதித்து வெளியிட்டு வந்துள்ளது. மாணவர் அறிவை வளர்ப்பதுவே கழகத்தின் நோக்கமாகும்.

இக் கோவையில், எட்டாம் வகுப்பு மாணவர்க்குத் தகுதியான வாழ்த்து, அறவுரை, கதைப் பகுதி, பல்சுவை என்ற பகுதிகளாகப் பல அறிஞர்களால் தேர்ந்து எடுத்துக் கோக்கப்பட்டுள்ளன. கூடுதல், குறைதல் இன்றி அரசியலார் வகுத்த திட்டத்தின்படியே அமைத்திருக்கின்றோம். உரைநடைப் பாடங்களும் இனிய எளிய பகுதியாக ஆய்ந்து அத்துறையில் வல்ல அறிஞர்களின் கட்டுரைகளையே பொறுக்கி எடுத்துக் கொடுத்திருக்கிறோம்.

செய்யுட்பகுதி ஒவ்வொன்றுக்கும் உரிய ஆசிரியர் வரலாறு, அருஞ்சொற்பொருள், இன்றியமையா இலக்கணக் குறிப்பு, தேர்வு வினாக்கள் எழுதி இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளன. உரைநடைப் பாடங்கட்கும் அவ்வாறே ஆசிரியர் குறிப்பும், அருஞ்சொற்பொருளும், வினாக்களும் எழுதப்பட்டுள்ளன.

வருங்கால மாணவரின் தமிழ் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ற முறையில் சொற்சுவை பொருட்சுவை யமைந்த செய்யுட்களும், உலகியல் அறிவு பெருகுவதற்குரிய உரை நடைகளும் இக் கோவையில் அமைந்திருப்பதால் இதனை மாணவர் உலகம் வரவேற்கும் என்பது ஒருதலை. ஆசிரியர்களும் மாணவர் முன்னேற்றம் கருதும் பிற அறிஞரும், இதற்கு ஆதரவு தருவார் என்பதிற் சிறிதும் ஐயம் இல்லை. இதனைக் கற்ற மாணவர்கள் கடவுட்பற்று, நீதிநெறி, அறிவு, ஒழுக்கம் ஆகிய நற்பண்புகள் வாய்ந்து விளங்குவார்கள் என நம்புகின்றோம்.

செய்யுட் பகுதியிலும் உரைநடைப் பகுதியிலும் உள்ள பாடப் பகுதிகளைச் சேர்த்துக்கொள்ள இசைவுதந்த உரிமைப் பெரியோர் ஒவ்வொருவருக்கும் தனித்தனி எமது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

சென்னை மாநிலப் பள்ளித் தலைமையாசிரியர்களும் தமிழ் ஆசிரியர்களும் எமது கழகத் தமிழ்க் கோவையை ஆய்ந்து வாங்கி மாணவர்களுக்குக் கற்பித்து நற்பயன் விளைக்குமாறு வேண்டுகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

## செய்யுட் பகுதி

கழகத் தமிழ்க் கோவை

## உரைநடைப் பகுதி

உள்ளுறை

# நன்றி


அடியிற் குறித்த உரைநடை, செய்யுட் பகுதிகளை இந்நூலில் சேர்த்துக்கொள்ள இசைவளித்த அவற்றின் உரிமையாளர்கட்குக் கழகத்தின் நன்றி என்றென்றும் உரியது.

பெற்றோர்ப் பேணல் (உரைநடை)<br>
தமிழ் நாடு (செய்யுள்) —(திரு. வி. கலியாணசுந்தர முதலியார்)<br>
உரிமையாளர், சாது அச்சுக்கூடம், சென்னை

தம்பிக்கு-கடிதம் :— டாக்டர், திரு. மு. வரதராசனார் அவர்கள்

திருக்காளத்திக் காட்சி :—திருமதி. தி. நீலாம்பிகை யம்மையார்

ஒரு வணிகனுங் குறளியும் :<br>
—(மறைத்திரு, மறைமலையடிகளார்)<br>
மறைமலையடிகள் விருப்ப ஆவணச் செயற்குழு

சமையற் கலை :—(திருவாட்டி பத்மாசினி, B.Sc., D.S.S.)<br>
ஆசிரியர், கலைக்கதிர், கோயமுத்தூர்

நல்ல மரமும் நச்சு மரமும் :<br>
—திரு. டாக்டர், ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்

தென்னையின் செல்வம் :<br>
—(திரு. P. A. முஹம்மது இப்ராஹீம் அவர்கள்)<br>
இயக்குநர், சென்னை அரசாங்கப் பயிர்த்தொழில் துறை, சென்னை

நான் கண்ட ஜப்பான் :<br>
—(திரு. சு. இராமசுவாமி நாயுடு அவர்கள்)<br>
வெள்ளையன் பதிப்புக் கழகம், இராமநாதபுரம்

# தேசீய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப சிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதித ரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே

# நாட்டு வணக்கம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸ்ஸாவையும் வங்காளத்தையும் உள்ளக்கிளர்ச்சி யடையச் செய்கிறது.

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன; இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு,

வெற்றி, வெற்றி, வெற்றி!

# செய்யுட் பகுதி

## க. வாழ்த்து

### 1. கடவுள் வாழ்த்து

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென்(று) அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

—மாணிக்கவாசகர்.

### 2. தமிழ்த்தாய் வாழ்த்து

பாலொடு தேனும் பழச்சுவையும் போன்றினிமை
சாலச் சிறந்த தமிழன்னை—நீல
மணிமிடற்றோன் பெற்ற மடவரல்பொற் பாத
அணிமலரே நல்ல அரண்.

—பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியார்.

### 3. தமிழ் நாடு

யாதும்மூர் எவருங்கேளிர் என்றுணர்ந்த நாடு
எவ்வுயிர்க்கும் அன்புசெய்க என்றிசைத்த நாடு
ஒதுகுலந் தெய்வமொன்றே என்றுகொண்ட நாடு
ஒக்குமுயிர் பிறப்பென்னும் ஒருமைகண்ட நாடு
நாதன்அன்பு நீதிஇன்பு நட்பென்ற நாடு
நாமார்க்குங் குடியல்லோம் என்றிருந்த நாடு
தீதில்லா மொழிவளர்க்கத் தெளிவுபெற்ற நாடு
செந்தண்மை விருந்தளிக்குந் தெய்வத்தமிழ் நாடே.

—திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.

# உ. அறவுரை

## 1. திருக்குறள்

அறத்துப்பால்

வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. (1)

விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது. (2)

இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு. (3)

சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு. (4)

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். (5)

யல

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவது எவன். (6)

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். (7)

சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. (8)

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது. (9)

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. (10)

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. (11)

இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். (12)

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். (13)

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது. (14)

கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுஒரீஇ அல்ல செயின். (15)

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு. (16)

எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து. (17)

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. (18)

அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து. (19)

அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். (20)

ஒப்புரவி னல்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. (21)

வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. (22)

இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள. (23)

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. (24)

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில். (25)

வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின். (26)

### துறவறவியல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள். (27)

வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும். (28)

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின். (29)

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல். (30)

தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். (31)

நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். (32)

நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்
பெருமை யுடைத்துஇவ் வுலகு. (33)

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய். (34)

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன். (35)

## பொருட்பால்

### அரசியல்

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம். (36)

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு. (37)

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். (38)

கல்லா வொருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். (39)

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர். (40)

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது. (41)

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. (42)

எவ்வ துறைவது உலகம் உலகத்தோடு
அவ்வ துறைவது அறிவு. (43)

தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. (44)

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். (45)

ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார். (46)

நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டு அவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. (47)

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். (48)

ஆகாறு அளவிட்டி தாயினுங் கேடில்லை
போகாறு அகலாக் கடை. (49)

அருவினை என்ப உளவோ கருவியான்
காலம் அறிந்து செயின். (50)

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. (51)

அஞ்சாமை யல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின். (52)

அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. (53)

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. (54)

அச்ச முடையார்க்கு அரணில்லை ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்னது உடைத்து.

கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

உரமொருவற்கு உள்ள வெறுக்கை அஃ தில்லார்
மரம்மக்க ளாதலே வேறு.

தாளாண்மை என்னுந் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னுஞ் செருக்கு.

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

### அங்கவியல்

அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன். (62)

ஈன்றாள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. (63)

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற. (64)

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். (65)

விழுப்புண் படாத நாள்எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து. (66)

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. (67)

ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல். (68)

பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின். (69)

சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன்று )ல். (70)

## ஒழிபியல்

புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை. (71)

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. (72)

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. (73)

அணிஅன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்
பிணிஅன்றோ பீடு நடை. (74)

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. (75)

இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும். (76)

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். (77)

இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும். (78)

தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான். (79)

அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான். (80)

—திருவள்ளுவர்.

## 2. நாலடியார்

### பொறையுடைமை

வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்ரு ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்
ஆற்றுந் துணையும் பொறுக்க பொருஅுயின்
தூற்ருதே தூர விடல். (1)

### குல உயர்வு

நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொரு ளொன்ரே தவங்கல்வி யாள்வினை
என்றிவற்ருன் ஆகுங் குலம். (2)

### மானம்

கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணு திறக்கும்—இடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மானம் மழுங்க வரின். (3)

### சுற்றந்தழால்

அழன்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழன்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்-பழுமரம்போல்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன். (4)

### ஈயாமை

துய்த்துக் கழியான் துறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியும் மடவோனை—வைத்த
பொருளும் அவனை நகுமே; உலகத்து
அருளும் அவனை நகும். (5)

—சமணமுனிவர்.

## 3. நீதிநெறி விளக்கம்

### கல்வியின் சிறப்பு

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்று
உற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை. (1)

### பிறர் நன்மதிப்புறல்

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல். (2)

### செல்வரின் ஈகைப்பயன்

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா—ஆங்கதுகொண்டு
ஊரும் எறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று. (3)

### கருமங் கண்ணாயினார் செயல்

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். (4)

### தெய்வம் இவரெனல்

குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்—அறவோர்க்கு
அடிகளே தெய்வம் அனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை. (5)

—குமரகுருபரர்.

## ௩. தொடர்நிலைச் செய்யுள்

### 1. ஆசிய ஜோதி

கருணைக்கடல்

"வாழும் உயிரினை வாங்கிவிடல்—இந்த
மண்ணில் எவர்க்கும் எளிதாகும்;
வீழும் உடலை எழுப்புதலோ—ஒரு
வேந்தன் நினைக்கினும் ஆகாதையா! (1)

யாரும் விரும்புவ தின்னுயிராம்—அவர்
என்றுமே காப்பதும் அன்னதேயாம்;
பாரில் எறும்பும் உயிர்பிழைக்கப்—படும்
பாடு முழுதும் அறிந்திலீரோ? (2)

நேரிய உள்ளம் இரங்கிடுமேல்—இந்த
நீள்நிலம் முற்றுமே ஆண்டிடலாம்;
பாரினில் மாரி பொழிந்திடவே—வயல்
பக்குவ மாவ தறிந்திலீரோ? (3)

ஆட்டின் கழுத்தை அறுத்துப் பொசுக்கிநீர்
ஆக்கிய யாகத் தவியுணவை
ஈட்டும் கருணை இறையவர் கைகளில்
ஏந்திப் புசிப்பரோ? கூறுமையா! (4)

காடு மலையெலாம் மேய்ந்துவந்து—ஆடுதன்
கன்று வருந்திடப் பாலையெல்லாம்
தேடிஉம் மக்களை ஊட்டுவதும்—ஒரு
தீய செயலென எண்ணினீரோ? (5)

மேடையில் நீங்களும் மூடிப் படுத்திட
மெல்லிய கம்பளி தானளித்து,
வாடையி லாடிக் கொடுகுவதும்—அதன்
வஞ்சகச் செய்கையோ? சொல்லுமையா! (6)

மண்ணில் வளர்ந்திடும் புல்லை யுண்ணும்—வான
மாரி பொழிந்திடும் நீரையுண்ணும்!
எண்ணிநீர் செய்யும் உதவியென்னும்?—இதை
ஏனோ உணர்ந்திலீர் மானிடரே? (7)

மன்னுயி ரெல்லாம் உலகில்—ஒருதாயின்
மக்களென் றுண்மை யறிந்திலீரோ ?
தன்னுயிர் போற்றிப் பெரும்பழி செய்வது
சண்டாளர் கண்ட நெறியலவோ ? (8)

தாயென நம்பி வரும்உயிரை—யாக
சாலை நடுவில் கிடத்திஒரு
பேயெனக் கீறிப் பிளப்பதனுல்—என்ன
பேரும் பெருமையும் பெற்றீரையா ? (9)

கன்று பசுவை மறந்திடினும்—செய்த
கருமங்கள் உம்மை விடுமோ ஐயா !
கொன்று பழிதேட வேண்டாமையா !—இனிக்
கொல்லா விரதம்மேற் கொள்ளுமையா ! (10)

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

## 2. நளவெண்பா

### சுயம்வர காண்டம்

*[ஒருநாள் நளன் தன் பூஞ்சோலைக்குப் போனுன். அங்கேயுள்ள பொய்கையில் ஓர் அழகிய அன்னப்புள்ளைக் கண்டான்.]*

நீணிறத்தால் சோலை நிறம்பெயர நீடியதன்
தாணிறத்தால் பொய்கைத் தலம்சிவப்ப—மாணிறத்தான்
முன்னப்புள் தோன்றும் முளரித் தலைவைகும்
அன்னப்புள் தோன்றிற்றே ஆங்கு. (1)

*[அன்னப்பறவையைப் பணிப்பெண்கள் பிடித்துத் தந்தனர். அஃது அரசனைக் கண்டு நடுங்கியது. அவன் ஆறுதல் கூறுகின்றுன்.]*

அஞ்சல் மடஅனமே உன்றன் அணிநடையும்
வஞ்சி அனையார் மணிநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகாண் என்றுன் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன். (2)

செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனிஅன்னம்—வெய்ய
அடுமாற்றம் இல்லா அரசன்சொல் கேட்டுத்
தடுமாற்றம் தீர்ந்ததே தான். (3)

*[தெளிந்த அன்னம் நளனுக்குத் தன்னால் ஆன நன்மை செய்ய விரும்பித் தமயந்தியைப்பற்றிக் கூறுகிறது.]*

திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே உன்றன்
இசைமுகந்த தோளுக் கிசைவாள்—வசையில்
தமையந்தி என்றோதும் தையலாள் மென்தோள்
அமையந்தி என்றோர் அணங்கு. (4)

நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை அரசு. (5)

*[அன்னம் கூறிய தமயந்தியின்மேல் நளன் காதல்கொண்டு, அவ்வன்னத்தையே தூதாகத் தமயந்தியிடம் விடுத்து, அதனைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கிறான்.]*

இவ்வளவில் செல்லுங்கொல் இவ்வளவில் காணுங்கொல்
இவ்வளவில் காதல் இயம்புங்கொல்—இவ்வளவில்
மீளுங்கொல் என்றுரையா விம்மினான் மும்மதம்நின்று
ஆளுங்கொல் யானை அரசு. (6)

*[அன்னம் தமயந்தியை அடைந்தது.]*

மன்னன் விடுத்த வடிவில் திகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி அருகணைய—நன்னுதலும்
தன்னுடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
என்னுடல் சொல்லென்றாள் ஈங்கு. (7)

*[அன்னம் நளனைப்பற்றிக் கூறுகிறது.]*

செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் மங்கையர்கள்
தம்மனத்தை வாங்கும் தடந்தோளான்—மெய்ம்மை
நளன்என்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்
உளன்என்பான் வேந்தன் உனக்கு. (8)

அறங்கிடந்த நெஞ்சும் அருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்தோள் வலியும்—திறங்கிடந்த
செங்கண்மால் அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு. (9)

[தமயந்திக்கும் நளன்மேற் காதல் உண்டாகியது.]

வாவி உறையும் மடஅனமே என்னுடைய
ஆவி உவந்தளித்தாய் ஆதியால்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி என்றுரைத்தாள்
பார்வேந்தன் பாவை பதைத்து. (10)

[அன்னம் நளனிடம் திரும்பியது. தமயந்தி நளனை எண்ணி மெலிந்தாள். வீமன் தன் மகளான தமயந்தியின் மெலிவை அறிந்து திருமணம் செய்ய விரும்பினான்.]

கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப் பைங்கால்
மருங்குலவ வார்முரசம் ஆர்ப்ப—நெருங்கு
புரிவளை நின்றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற
வரிவளைக்கை நல்லாள் மனை. (11)

பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதல்மேல்
நீரரும்பத் தன்பேதை நின்றாளைப்—பாராக்
குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளும் மணம். (12)

[தமயந்தி சுயம்வரத்திற்கு மன்னர் பலரும், நளனும் வந்தனர்.]

மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிசைக்கும்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி—நாமத்தால்
பாவேய்ந்த செந்தமிழாம் என்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம். (13)

புள்ளுறையும் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமும் இனிதுறைந்தார்—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்தன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு. (14)

[இரவு வருதல்.]

வையம் பகலிழப்ப வானம் ஒளியிழப்பப்
பொய்கையும் நீள்கழியும் புள்ளிழப்பப்—பையவே
செவ்வாய அன்றில் துணையிழப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு. (15)

[இரவு நீங்குதல்.]

வில்லி கணையிழப்ப வெண்மதியம் சீரிழப்பத்
தொல்லை இருள்கிழியத் தோன்றினான்—வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று. (16)

[தமயந்தி சுயம்வர மண்டபம் வருதல்.]

மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னம் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று. (17)

[அங்கே வானவர் நால்வர் நளனுருவில் வந்திருந்தனர்.]

காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாய்ச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணாநின்று
ஊசலா டுற்றாள் உளம். (18)

[தமயந்தி நளனை அறிதல்.]

கண்ணிமைத்த லால்அடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே அன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு. (19)

[மாலை சூட்டல்.]

விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகல் ஞாலம் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். (20)

—புகழேந்திப்புலவர்.

## 3. திருவிளையாடற் புராணம்

*[மதுரையைக் குலேச பாண்டியன் என்ற புலமைமிக்க மன்னன் அரசாண்டு வந்தான். கபிலருடைய நண்பரான இடைக்காடர் சிறந்த நூலொன்றைப் பாடிக்கொண்டு வந்து அவன்முன் ஒருநாள் படித்துக் காட்டினர்.]*

இடைக்காடர் நூல்பாடி வருதல்

கழிந்தபெருங் கேள்வியினு னெனக்கேட்டு
முழுதுணர்ந்த கபிலன் தன்பாற்
பொழிந்தபெருங் காதன்மிகு கேண்மையினுன்
இடைக்காட்டுப் புலவன் தென்சொல்
மொழிந்தரசன் றனைக்காண்டு மெனத்தொடுத்த
பனுவலொடு மூரித் தீந்தேன்
வழிந்தொழுகு தாரானைக் கண்டுதொடுத்
துரைப்பனுவல் வாசித் தானுல். (1)

இடைக்காடர் வெகுண்டு சிவன்கோயிலுக்குச் ல்

வழுக்காத சொற்சுவையும் பொருட்சுவையும்
பகிர்ந்தருந்த வல்லோ னுள்ளத்
தழுக்காற்றுற் சிரம்துளக்கா னகமகிழ்ச்சி
சிறிதுமுகத் தலர்ந்து காட்டான்
எழுக்காயுந் திணிதோளா னென்றுமுரை
யான்வாளா விருந்தா னுய்ந்த
குழுக்காதல் நண்புடையான் றனைமானம்
புறந்தள்ளக் கோயில் புக்கான். (2)

இடைக்காடர் சிவபெருமானிடம் முறையிடல்

சந்நிதியில் வீழ்ந்தெழுந்து தமிழறியும்
பெருமானே தன்னைச் சார்ந்தோர்
நன்னிதியே திருவால வாயுடைய
நாயகனே நகுதார் வேம்பன்
பொன்னிதிபோ லளவிறந்த கல்வியுமிக்
குளனென்று புகலக் கேட்டுச்
சொன்னிறையுங் கவிதொடுத்தேன் அவமதித்தான்
சிறிதுமுடி துளக்கா னுகி. (3)

பரிவாயின் மொழிதொடுத்து வருணித்தோர்க்
 ககமகிழ்ந்தோர் பயனு நல்கா
விரிவாய தடங்கடலே நெடுங்கழியே
 யடுங்கான விலங்கே புள்ளே
பொரிவாய பராரைமர நிரையேவான்
 றொடுகுடுமிப் பொருப்பே வெம்பும்
எரிவாய கொடுஞ்சுரமே யெனவிவற்றே
 ரஃறிணையொத் திருந்தா னெந்தாய். (4)

இடைக்காடர் ஊர்நீங்குதல்

என்னையிகழ்ந் தனனோசொல் வடிவாய்நின்
 இடம்பிரியா விமையப் பாவை
தன்னையுஞ்சொற் பொருளான வுன்னையுமே
 யிகழ்ந்தனனென் றனக்கியா தென்று
முன்னைமொழிந் திடைக்காடன் தணியாத
 முனிவீர்ப்ப முந்திச் சென்றான்
அன்னவுரை திருச்செவியி னூறுபா
 டெனவுறைப்ப அருளின் மூர்த்தி. (5)

சிவபெருமான் தன் கோயிலைவி வேறிடம் சேர்தல்

போனஇடைக் காடனுக்குங் கபிலனுக்கும்
 அகத்துவகை பொலியு மாற்றான்
ஞானமய மாகியதன் னிலிங்கவுரு
 மறைத்துமையாம் நங்கை யோடும்
வானவர்தம் பிரானெழுந்து புறம்போய்த்தன்
 கோயிலினோர் வடபால் வையை
ஆனநதித் தென்பாலோ ராலயங்கண்
 டங்கணினி தமர்ந்தான் மன்னோ. (6)

சங்கப் புலவரும்

சங்கவான் தமிழ்த்தெய்வப் புலவோரும்
 உடனெழுந்து சைல வேந்தன்
மங்கைநா யகன்போன வழிபோயங்கு
 இருந்தாரவ் வழிநாள் வைகற்

கங்குல்வாய் புலரவரும் வைகறையிற்
பள்ளியுணர் காலத் தெய்தி
அங்கணு யகனடியார் சேவிப்பார்
இலிங்கவுரு வங்குக் காணுர். (7)

செய்தியறிந்த அரசன் வருந்திச் சிவபெருமானைத் தொழல்

வழுதியரி யணையிலிருந் தடியிறவீழ்
பழுமரம்போன் மண்மேல் யாக்கை
பழுதுறவீழ்ந் துயிரொடுங்க அறிவொடுங்கி
மட்பாவை படிந்தாங் கொல்லைப்
பொழுதுகிடந் தறிவுசிறி தியங்கவெழுந்
தஞ்சலிக்கைப் போது கூப்பி
அழுதிருகண் ணீர்வெள்ளத் தாழ்ந்தடியேன்
என்பிழைத்தேன் அண்ணு லண்ணுல். (8)

கொலையினையோ ரவுணர்புரம் நொடிவரையிற்
பொடியாகக் குனித்த மேருச்
சிலையினையோ பழையசிவ புரத்தினையோ
அருவிமணி தெறிக்கும் வெள்ளி
மலையினையோ தம்மைமறந் துனைநினைப்பார்
மனத்தினையோ வாழ்த்தும் வேதத்
தலையினையோ எங்குற்ருய் எங்குற்ருய்
என்றென்று தளரு மெல்லை. (9)

இறைவன் கோயில்கொண்டிருக்கும் இடத்தை
அரசற்குச் சிலர் கூறுதல்

சிலர்வந்து மன்னுவோ ரதிசயங்கண்
டனம்வையைத் தென்சா ராக
அலர்வந்தோன் படைத்தநாண் முதலொருகா
லமுங்கண்ட தன்று கேள்வித்
தலைவந்த புலவரொடும் ஆலவா
யுடையபிரான் தானே செம்பொன்
மலைவந்த வல்லியொடும் வந்திறைகொண்
டுறைகின்ருன் மாதோ வென்ருர். (10)

அரசன் ஆங்குச்சென்று சிவபெருமானைக் கண்டுபோற்றுதல்

அவ்வுரைதன் செவிநுழைந்து புகுந்தீர்ப்ப
எழுந்தரசன் அச்சத் தாழ்ந்து
தெவ்வர்முடித் தொகையிட றுங் கழற்காலான்
நடந்தேகிச் செழுநீர் வையை
கௌவைநெடுந் திரைக்கரத்தாற் கடிமலர்தூஉய்ப்
பணியத்தென் கரைமேல் வந்து
மௌவலிள முகைமூரன் மாதினொடும்
இருக்கின்ற மணியைக் கண்டான். (11)

கள்ளேறு கடுக்கைநறுஞ் சடையானே
போற்றிபெருங் கருணை போற்றி
வெள்ளேறு கொடியுயர்த்த விடையானே
போற்றியருள் விகிர்தா போற்றி
புள்ளேறு கொடியுயர்த்த புனிதனயன்
றேருத புனிதா போற்றி
வள்ளேறு சிறுகுழவி மதிநுதலங்
கயற்கண்ணி மணாள போற்றி. (12)

பாதமல ரிணைபோற்றி பன்னிரண்டு
கையானைப் பயந்தாய் போற்றி
வேதமுடி கடந்தபர ஞானத்தி
லானந்த விளைவே போற்றி
போதவடி வாய்நால்வர்க் கசைவிறந்து
நிறைந்தபரம் பொருளே போற்றி
மாதவள நீறணிந்த மன்னுவங்
கயற்கண்ணி மணாள போற்றி. (13)

வேறு

சிவபெருமான் அரசற்குக் கூறல்

தென்னவ னின்ன வண்ண மேத்தினுன் செம்பொற் கூடல்
மன்னவன் கேட்டா காய வாணியால் வையை நாட
உன்னது சோத்தம் நாங்கேட் டுவந்தன மினிய தாயிற்று
இன்னமொன் றுளது கேட்டி யென்றனை னருளிச்செய்வான்.

ஓங்குதண் பணைசூழ் நீப வனத்தைநீத் தொருபோ தேனும்
நீங்குவ மல்லேம் கண்டா யாயினும் நீயும் வேறு
தீங்குளை யல்லை காடன் செய்யுளை யிகழ்த லாலே
ஆங்கவ னிடத்தியாம் வைத்த அருளினுல் வந்தே மென்ன.

அரசன் குற்றம் பொறுத்தருள வேண்டுதல்

பெண்ணினைப் பாகங் கொண்ட பெருந்தகைப் பரம யோகி
விண்ணிடை மொழிந்த மாற்றம் மீனவன் கேட்டு வானோர்
புண்ணிய சிறியோர் குற்றம் பொறுப்பது பெருமை யன்றோ
எண்ணிய பெரியோர்க் கென்ன ஏத்தின னிறைஞ்சி னனே.

சிவபெருமான் புலவருடன் மதுரை மீளல்

அடிபணிந் தேத்தி னனை யருள்சுரந் தசையும் மின்னுக்
கொடியணி மனையிற் போக்கிக் கோமள வல்லி யோடும்
உடனுறை புலவ ரோடும் ஒல்லைதன் கோயில் புக்கான்
வடதிரு வால வாயில் வந்துவீற் றிருந்த வள்ளல். (17)

இடைக்காடரை ஏனைய புலவர்களோடு மன்னன்
அரண்மனைக்கு அழைத்துச் செல்லல்

மின்மதிச் சடையி னன்பி னடந்துபோய் விடைகொண் டேகும்
மன்னவன் தன்னைப் பாடி வந்தவன் தன்னை மாட்சித்
தன்மைசால் சங்க வாணர் தம்மொடுங் கொடுபோ யென்றும்
பொன்மகள் காணிகொண்ட புரிசைசூழ் கோயில் புக்கான்.

இடைக்காடர் நூலைப் படிக்கச்சொல்லிக் கேட்டு
மன்னன் மகிழ்ந்து பிழை பொறுக்குமாறு வேண்டல்

சிங்கமான் சுமந்த பொன்னஞ் சேக்கைமே லிருந்து வெள்ளைக்
கொங்கவிழ் தாமந் தூசு குளிர்மணி யாரந் தாங்கி
மங்கள முழவ மார்ப்ப மறையவ ராக்கங் கூற
நங்கையர் பல்லாண் டேத்த நன்மொழிப் பனுவல் கேட்டு.

புண்ணியப் புலவீர் யானிப் போழ்திடைக் காட னர்க்குப்
பண்ணிய குற்ற மெல்லாம் பொறுக்கெனப் பரவித் தாழ்ந்தான்
நுண்ணிய கேள்வி யோரும் மன்னநீ நுவன்ற சொல்லாந்
தண்ணிய வமுதா லெங்கள் கோபத்தீ தணிந்த தென்ன. (20)

இன்னமு மால வாயெம் மிறையவன் கருணை நோக்காற்
பன்னரும் புகழ்மை குன்றுப் பாக்கிய முனக்குண் டாக
என்னநல் லாக்கங் கூறி யேகிஞ ராக வந்தத்
தென்னவன் குலேசன் செய்த தவமுருத் திரிந்தா லென்ன.

அரிமர்த்தன பாண்டியன் மகனுக வந்து தோன்றல்

எரிமருத் தவனி முன்னு மெண்வகை மூர்த்தி யன்பு
புரிமருத் துவனைச் சூழ்ந்த பொருபழி துடைத்தோன் சோதி
விரிமருத் துடல்வான் றிங்கண் மிலேந்தவ னருளின் வந்தான்
அரிமருத் தனனுந் தென்னன் அடலரிக் குருளை யன்னுன். (22)

—பரஞ்சோதி முனிவர்

## 4. குசேலோபாக்கியானம்

குசேலன் கண்ணனைக் கண்டது

எண்ணனைக் கிலங்கு மார்பம்
 ஈந்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம்
 வலமிடம் உறக்கொண் டானை
மண்ணனைத் தும்பு ரக்கும்
 வாசுதே வனைம ணக்கும்
கண்ணனைத் துளவத் தாமக்
 கண்ணனைக் கண்ணிற் கண்டான்.

கண்ணன் குசேலனை வணங்கித் தழுவிக்கொள்ளுதல்

காண்டலும் உவகை பூத்துக்
 கால்விசை கொடுந டந்தான்
ஆண்டகை யவனுங் கண்ணுற்று
 அணையுடைத் தெழுநீத் தம்போல்
நீண்டபூம் பள்ளி நீத்து
 நிலவுபே ரன்பு பொங்கப்
பூண்டமா தவன்முன் சென்று
 பொன்னடி வணங்கி ஞனல்.

நல்லார்சொல் விரும்புவதும்
நல்லாரைக் காண்பதுவும்
நல்லார்க்கொன்று உதவுவதும்
நல்லாரைப் புகழ்வதுவும்
நல்லார்நன்று என்றுரைப்ப
நவிற்றியஇவ் வெலாம்அடங்க
நல்லார்நட்பு என்றும்உறல்
நன்றன்றே ? நான்மறையோய்! (8)

பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளான் ஆயிடினும்
என்னுள்ளான் ஆவனவன் இருந்தவர்தம் நட்பிலனேல் ?
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லான் ஆயிடினும்
என்னில்லான் ஆவனவன் இருந்தவர்தம் நட்புளனேல் ? (9)

பேயோடு பழகுறினும் பிரிவதரி தரிதென்று
தூயோர்கள் மொழிவரால், தூயோரும் புகழ்தூயோர்
ஆயோர்கள் பெருநட்பை அருந்தவத்தால் பெறலன்றி
ஏயோ!எண் மையிற்கிடைப்பின் இகழ்வாரோ இகழ்வில்லார்!

முத்திக்கு வித்தாகும் முழுதுணர்ந்தோர் பெருநட்பே
தித்திக்கும் நாடோறும், தேவர்பெறற் கருந்திருவும்
சித்திக்கும் படிஅருளும் செப்பரிதால் ; அதுநிற்க
எத்திக்கும் புகழும்நினக் கியல்மணம்நன் காயிற்றே ? (11)

கண்ணன் இல்லற நலன் வினவுதல்

நின்னுடைய மனைக்கிழத்தி நிரம்புபெரு நீர்மையளே ?
மன்னுடைய சொற்காத்துச் சோர்விலா மாண்பினளே ?
தன்னுடைய உயிராநின் தனைப்பேணும் தன்மையளே ?
உன்னுடைய வருவாய்க்குத் தக்கசெல வுஞுற்றுவளே ? (12)

பைங்குதலை வாய்மைந்தர் பலர்பிறக்க வேண்டுமே!
எங்குமரும் புகழுடையாய்! எத்தனைமைந் தர்கள்பிறந்தார் ?
அங்கவரைப் பேரவையோர் அணிதரச்செய் செயலனைத்தும்
சிங்கலறப் புரிந்தனையோ? செய்தனையோ உபநயனம்? (13)

இவர்தந்தை என்னேற்றன்! என்றறிஞர் உரைக்கும்வகை
இவர்கின்ற மனத்தினராய் இருங்கலைகற் றுணர்வாரே!
உவர்கொண்ட கடலாடை புடையுடுத்த உலகமெலாம்
உவர்கொண்ட குணமெவர்க்குண் டெனமொழிய உயர்வாரே?

—வல்லூர் தேவராசப்பிள்ளை.

## 5. பெரியபுராணம்

### (மெய்ப்பொருள் நாயனார் புராணம்)

#### மெய்ப்பொருள் நாயனார் இயல்பு

சேதிநன் னாட்டு நீடு
திருக்கோவ லூரில் மன்னி
மாதொரு பாகர் அன்பின்
வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை
விளங்கிட மேன்மை பூண்டு,
காதலால் ஈசர்க் கன்பர்
கருத்தறிந் தேவல் செய்வார். (1)

#### நாயனாரின் அரசியல் திறம்

அரசியல் நெறியின் வந்த
அறநெறி வழாமல் காத்து
வரைநெடுந் தோளால் வென்று
மாற்றலர் முனைகள் மாற்றி,
உரைதிறம் பாத நீதி
ஓங்குநீர் மையினில் மிக்கார் ;
திரைசெய்நீர்ச் சடையான் அன்பர்
வேடமே சிந்தை செய்வார். (2)

#### நாயனாரின் இறையன்பு

மங்கையைப் பாக மாக
வைத்தவர் மன்னும் கோயில்
எங்கணும் பூசை நீடி
ஏழிசைப் பாடல் ஆடல்
பொங்கிய சிறப்பின் மல்கப்
போற்றுதல் புரிந்து வாழ்வார் ;
தங்கள்நா யகருக் கன்பர்
தாளலால் சார்பொன் றில்லார். (3)

அடியார்களிடத்து அன்பு புரிதல்

தேடிய மாடும் நீடு
செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க்கு
ஆவன ஆகும், என்று
நாடிய மனத்தி னோடு
நாயன்மார் அணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக்
குறைவறக் கொடுத்து வந்தார். (4)

பகைவரை வெல்லுதல்

இன்னவா றொழுகும் நாளில்
இகல்திறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லும்
ஆசையால் அமர்மேற் கொண்டு,
பொன்னணி ஓடை யானை
பொருபரி காலாள் மற்றும்
பன்முறை இழந்து, தோற்றுப்
பரிபவப் பட்டுப் போனான். (5)

முத்திநாதன் சூழ்ச்சி

இப்படி இழந்த மாற்றான்
இகலினால் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தர் சீலம்
அறிந்துவெண் ணீறு சாத்தும்
அப்பெரு வேடம் கொண்டே
அற்றத்தில் வெல்வா னாகச்
செப்பரு நிலைமை எண்ணித்
திருக்கோவ லூரில் சேர்வான். (6)

முத்திநாதன் சிவவேடந்தாங்கி வருதல்

மெய்யெலாம் நீறு பூசி
வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினில் படைக ரந்த
புத்தகக் கவளி ஏந்தி,

மைபொதி விளக்கே என்ன
மனத்தினுள் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு
புகுந்தனன் முத்தி நாதன். (7)

முத்திநாதன் அரண்மனைவாயிலை அடைதல்

மாதவ வேடம் கொண்ட
வன்கணன் மாடந் தோறும்
கோதைசூழ் அளக பாரக்
குழைக்கொடி ஆட மீது
சோதிவெண் கொடிகள் ஆடும்
சுடர்நெடு மறுகில் போகிச்
சேதியர் பெருமான் கோயில்
திருமணி வாயில் சேர்ந்தான். (8)

தத்தன் தடுத்தல்

கடையுடைக் காவ லாளர்
கைதொழு தேற நின்றே;
உடையவர் தாமே வந்தார்
உள்ளெழுந் தருளும்! என்னத்
தடைபல புக்க பின்பு
தனித்தடை நின்ற தத்தன்,
இடைதெரிந் தருள வேண்டும்;
துயில்கொளும் இறைவன், என்றான். (9)

முத்திநாதன் நாயனார் துயிலும் இடத்தை அடைதல்

என்றவன் கூறக் கேட்டே,
யானவற் குறுதி கூற
நின்றிடு நீயும், என்றே
அவனையும் நீக்கிப் புக்குப்
பொன்றிகழ் பள்ளிக் கட்டில்
புரவலன் துயில, மாடே
மன்றலங் குழல்மென் சாயல்
மாதேவி இருப்பக் கண்டான். (10)

முத்திநாதனை நாயனுர் வணங்குதல்

கண்டுசென் றணையும் போது
கதுமென எழுந்து தேவி
வண்டலர் மாலை யானை
எழுப்பிட, உணர்ந்து மன்னர்
அண்டர்நா யகனுர் தொண்டர்
ஆமெனக் குவித்த செங்கை
கொண்டெழுந் தெதிரே சென்று,
கொள்கையின் வணங்கி நின்று. (11)

நாயனுர் வினவும் முத்திநாதன் விடையும்

மங்கலம் பெருக மற்றென்
வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்றது
என்கொலோ ? என்று கூற,
உங்கள்நா யகனுர் முன்னம்
உரைத்தஆ கமநூல் மண்மேல்
எங்குமில் லாத தொன்று
கொடுவந்தேன் இயம்ப, என்றுன். (12)

தனியிடத்தில் ஆகமநூல் கூற விரும்புதல்

பேறெனக் கிதன்மேல் உண்டோ ?
பிரான்அருள் செய்த இந்த
மாறிலா கமத்தை வாசித்து
அருள்செய வேண்டும், என்ன,
நாறுபூங் கோதை மாது
தவிரவே நானும் நீயும்
வேறிடத் திருக்க வேண்டும்,
என்றவன் விளம்ப, வேந்தன். (13)

நாயனுர் தனித்திருந்து ஆகமநூல் கேட்க விரும்புதல்

திருமகள் என்ன நின்ற
தேவியார் தம்மை நோக்கிப்
பரிவுடன் விரையு அந்தப்
புரத்திடைப் போக ஏவித்

தருதவ வேடத் தானைத்
தவிசின்மேல் இருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி,
இனியருள் செய்யும், என்றார். (14)

முத்திநாதன் நாயனாரை வாளால் எறிதல்

கைத்தலத் திருந்த வஞ்சக்
கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தகம் அவிழ்ப்பான் போன்று
புரிந்தவர் வணங்கும் போதில்
பத்திரம் வாங்கித் தான்முன்
நினைந்தஅப் பரிசே செய்ய,
மெய்த்தவ வேட மேமெய்ப்
பொருள், எனத் தொழுது வென்றார். (15)

தத்தன் முத்திநாதனைக் கொல்ல முயன்றபோது நாயனார் தடுத்தல்

மறைத்தவன் புகுந்த போதே
மனமங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கண் கூடி
வாளினால் எறிய லுற்றான்;
நிறைத்த செங்குருதி சோர
வீழ்கின்றார் நீண்ட கையால்
தறைப்படும் அளவில், தத்தா!
நமர்! எனத் தடுத்து வீழ்ந்தார். (16)

ஊருக்கு எல்லையில் முத்திநாதனைக் கொண்டுபோய் விடச்செய்தல்

வேதனை எய்தி வீழ்ந்த
வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனும் தத்தன் தானும்
தலையினால் வணங்கித் தாங்கி,
யாதுநான் செய்கேன்! என்ன,
எம்பிரான் அடியார் போக
மீதிடை விலக்கா வண்ணம்
கொண்டுபோய் விடுநீ, என்றார். (17)

முத்திநாதனைப் பிறர் கொல்லாதவாறு தத்தன் தடுத்தல்

அத்திறம் அறிந்தார் எல்லாம்
அரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் தன்னைக் கொல்வோம் !
எனப்புடை சூழ்ந்த போது
தத்தனும் அவரை எல்லாம்
தடுத்துடன் கொண்டு போவான்,
இத்தவன் போகப் பெற்றது
இறைவன தாணை, என்முன். (18)

முத்திநாதனை இடையூறின்றி விடுத்துத் தத்தன் திரும்புதல்

அவ்வழி அவர்கள் எல்லாம்
அஞ்சியே அகல நீங்கச்
செவ்விய நெறியில் தத்தன்
திருநகர் கடந்து போந்து
கைவடி நெடுவாள் ஏந்தி
ஆளுருக் கானஞ் சேர
வெவ்வினைக் கொடியோன் தன்னை
விட்டபின் மீண்டு போந்தான். (19)

தத்தன் நாயனுரை அடைதல்

மற்றவன் கொண்டு போன
வஞ்சனை வேடத் தான்மேல்
செற்றவர் தம்மை நீக்கித்
தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச்
சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவர் முன்பு சென்முன்
கோமகன் குறிப்பில் நின்முன். (20)

தத்தன் செய்த உதவி அறிந்து நாயனுர் மகிழ்தல்

சென்றடி வணங்கி நின்று,
செய்தவ வேடம் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி
விட்டனன், என்று கூற,

இன்றெனக் கையன் செய்தது
யார்செய்ய வல்லார் ! என்று
நின்றவன் தன்னை நோக்கி
நிறைபெறுங் கருணை கூர்ந்தார். (21)

நாயனார்

இயல் ஆயத் தார்க்கும்
அழிவுறும் காத லார்க்கும்
விரவிய செய்கை எல்லாம்
விளம்புவார் ; விதியி னாலே
பரவிய திருநீற் றன்பு
பாதுகாத் துய்ப்பீர், என்று
புரவலர் மன்றுள் ஆடும்
பூங்கழல் சிந்தை செய்தார். (22)

நாயனார் சிவனடி சேர்தல்

தொண்டனார்க் கிமையப் பாவை
துணைவனார் அவர்முன் தம்மைக்
கண்டவா றெதிரே நின்று
காட்சிதந் தருளி, மிக்க
அண்டவா னவர்கட் கெட்டா
அருட்கழல் நீழல் சேரக்
கொண்டவா இடைய ருமல்
கும்பிடும் கொள்கை ஈந்தார். (23)

—சேக்கிழார்

## 6. மணிமேகலை

பாத்திரம் பெற்ற காதை

மணிமே கலாதெய்வம் நீங்கிய பின்னர்
மணிபல் லவத்திடை மணிமே கலைதான்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையும்
தண்மலர்ப் பொய்கையும் தாழ்ந்தனள் நோக்கிக்
காவதந் திரியக் கடவுட் கோலத்துத்

தீவ திலகை செவ்வனந் தோன்றிக்
கலங்கவிழ் மகளிரின் வந்தீங் கெய்திய
இலங்குதொடி நல்லாய் யார்நீ என்றலும்
எப்பிறப் பகத்துள் யார்நீ யென்றது
10. பொற்கொடி யன்னாய் பொருந்திக் கேளாய்
போய பிறவியில் பூமியங் கிழவன்
இராகுலன் மனையான் இலக்குமி யென்பேர்
ஆய பிறவியில் ஆடலங் கணிகை
மாதவி யீன்ற மணிமே கலையான்
15. என்பெயர்த் தெய்வம் ஈங்கெனைக் கொணரவிம்
மன்பெரும் பீடிகை என்பிறப் புணர்ந்தேன்
ஈங்கென் வரவிதீங் கெய்திய பயனிது
பூங்கொடி யன்னாய் யார்நீ யென்றலும்
ஆயிழை தன்பிறப் பறிந்தமை யறிந்த
20. தீவ திலகை செவ்வனம் உரைக்கும்
ஈங்கிதன் அயலகத் திரத்தின தீவத்து
ஓங்குயர் சமந்தத் துச்சி மீமிசை
அறவியங் கிழவோன் அடியிணை யாகிய
பிறவி என்னும் பெருங்கடல் விடூஉம்
25. அறவி நாவாய் ஆங்குள தாதலின்
தொழுதுவலங் கொண்டு வந்தேன் ஈங்குப்
பழுதில் காட்சியிந் நன்மணிப் பீடிகை
தேவர்கோன் ஏவலிற் காவல் பூண்டேன்.
தீவ திலகை என்பெய ரிதுகேள்
30. தரும தலைவன் தலைமையின் உரைத்த
பெருமைசால் நல்லறம் பிறழா நோன்பினர்
கண்டுகை தொழுவோர் கண்டதற் பின்னர்
பண்டைப் பிறவியர் ஆகுவர் பைந்தொடி
அரியர் உலகத் தாங்கவர்க் கறமொழி
35. உரிய துலகத் தொருதலை யாக
ஆங்ஙன மாகிய அணியிழை இதுகேள்
ஈங்கிப் பெரும்பெயர்ப் பீடிகை முன்னது
மாமலர்க் குவளையும் நெய்தலும் மயங்கிய
கோமுகி என்னுங் கொழுநீ ரிலஞ்சி

40. இருதிள வேனிலில் எரிகதி ரிடபத்து
ஒருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையின்
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்
ஆபுத் திரன்கை யமுத சுரபியெனும்
45. மாபெரும் பாத்திரம் மடக்கொடி கேளாய்
அந்நா ளிந்நாள் அப்பொழு திப்பொழுது
நின்னுங்கு வருவது போலும் நேரிழை
ஆங்கதிற் பெய்த ஆருயிர் மருந்து
வாங்குநர் கையகம் வருத்துதல் அல்லது
50. தான்தொலை வில்லாத் தகைமைய தாகும்
நறுமலர்க் கோதை நின்னூ ராங்கண்
அறவணன் தன்பாற் கேட்குவை யிதன்திறம்
என்றவள் உரைத்தலும் இளங்கொடி விரும்பி
மன்பெரும் பீடிகை தொழுதனள் வணங்கித்
55. தீவ திலகை தன்னொடுங் கூடிக்
கோமுகி வலஞ்செய்து கொள்கையின் நிற்றலும்
எழுந்துவலம் புரிந்த இளங்கொடி செங்கையில்
தொழுதகை மரபிற் பாத்திரம் புகுதலும்
பாத்திரம் பெற்ற பைந்தொடி மடவாள்.

—சீத்தலைச்சாத்தனார்.

## ச. பல்சுவை

## 1. வருணனை

மருதநிலம்

தண்டலை மயில்கள் ஆடத்
தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக்
குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை எழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட
மருதம்வீற் றிருக்கும் மாதோ. (1)

—கம்பர்.

தென்றல்

பொங்கரி னுழைந்து வாவி
புகுந்துபங் கயந்து ழாவிப்
பைங்கடி மயிலை முல்லை
மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கூட் டுண்டு
குளிர்ந்துமெல் லென்று தென்றல்.
அங்கங்கே கலைகள் தேரும்
அறிவன்போ லியங்கு மன்றே (2)

—பரஞ்சோதி முனிவர்.

## 2. சீட்டுக்கவி

ஏடாயி ரங்கோடி எழுதாமல் நன்மனத்
தெழுதிப் படித்தவிரகன்,
இமசேது பரியந்தம் எதிரிலாக் கவிவீர
ராகவன் விடுக்கும்ஓலை,
சேடாதி பன்சிரம் அசைத்திடும் புகழ்பெற்ற
திரிபதகை குலசேகரன்
தென்பாலை சேலம் புரந்துதா கந்தீர்த்த
செழியன்எதிர்கொண்டுகாண்க.

பாடாத கந்தருவம், எறியாத கந்துகம்,
பற்றிக்கொ லாதகோணம்,
பறவாத கொக்கனற் பண்ணுத கோடை, வெம்
படையில்தொ டாதகுந்தம்,
சூடாத பாடலம், பூவாத மாவொடு,
தொடுத்துமுடி யாதசடிலம்,
சொன்னசொல் சொல்லாத கிள்ளையொன் றெங்கும்
துதிக்கவர விடவேண்டுமே. (1)

—அந்தகக்கவி வீரராகவ முதலியார்

## 3. சிலேடை

### நெல்லைச் சிலேடை வெண்பா

கோலமுறு வாவிகளுங் கொங்கார் நெடும்பொழிலும்
நீலமணி வானந்தோய் நெல்லையே—பாலுறவேய்த்
தோளியுட ஞடிஞன் ருெந்தோ மெனமுன்பு
காளியுட ஞடிஞன் காப்பு. (1)

—வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

### சிவனுக்கும் தேங்காய்க்கும்

கல்லா லடியுறலால் கண்மூன் றிருப்பதனுல்
எல்லோரும் பூசைக் கெடுத்திடலால்—வல்லோடு
கொள்ளுகையால் கங்கா குலமுத்து சாமிமன்ளு
கள்ளிதழி யானிகர்தேங் காய். (2)

—அழகிய சொக்கநாத பிள்ளை.

## 4. சிறுபிரபந்தம்

### திருக்கருவைக் கலித்துறை யந்தாதி

நாயினுந் தீய பிறவியெல் லாஞ்சென்று நான்பிறந்து
மாயினுந் தேவர் பதவியில் வாழினும் வஞ்சமில்லாத்
தாயினும் அன்புடை ஒப்பனை பாகநின் தாளிணைக்கீழ்
மேயினும் அன்பொன்று மேஅடி யேன்பெற வேண்டுவதே.

—அதிவீரராமபாண்டியன்.

### திருஈங்கோய்மலை எழுபது

ஓங்கிப் பரந்தெழுந்த ஒள்ளிலவத் தண்போதைத்
தூங்குவதோர் கொள்ளி எனக்கடுவன்—மூங்கில்
தழையிறுத்துக் கொண்டோச்சும் ஈங்கோயே சங்கக்
குழையிறுத்த காதுடையான் குன்று. (2)

கல்லாக் குரங்கு பளிங்கில் கனிகாட்ட
எல்லாக் குரங்கும் உடன் ஈண்டி—வல்லே
இருந்துகிராற் கற்கிளைக்கும் ஈங்கோயே மேனிப்
பொருந்தஅராப் பூண்டான் பொருப்பு. (3)

—நக்கீரதேவநாயனார்.

### அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்

#### வருகைப்பருவம்

பொன்னே வருக மூவுலகும்
பூத்தாய் வருக நாயேனைப்
புரந்தாய் வருக வழுதியர்கோன்
புதல்வி வருக முகிற்கிளைய
மின்னே வருக மெய்ஞ்ஞான
விளக்கே வருக மறைநான்கின்
விரிவே வருக பேரின்ப
விளைவே வருக மிகுங்கருணை
அன்னே வருக அகநெகுவார்க்
கனியே வருக அலர்மடவார்க்
கரசே வருக உரைப்பருஞ்சீர்
அம்மேவருக அழற் கரத்து
மன்னோர் உடலம் பகிர்ந்தஇள
மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட
மானே வருக வருகவே. (4)

—மகாவித்துவான், மீனாட்சி சுந்தரம்பிள்ளை.

### திருவெங்கைக் கலம்பகம்

மறம்

விற்ற தார்கலை பாதி யோடுவ
னத்தி லேயழ விட்டதார்
வெஞ்சி றைப்புக விட்ட தார்துகி
லுரிய விட்டுவிழித்ததார்
உற்ற தாரமும் வேண்டு மென்றினி
மன்னர் பெண்கொள லொண்ணுமோ
உமிய டாமண மென்ற வாய்கிழித்
தோலை காற்றிலு ருட்டடா.
வெற்றி யாகிய முத்தி தந்தருள்
வெங்கை மாநகர் வேடர்யாம்
விமல ரானவர் எமைய டுத்தினி
தெங்கண் மிச்சின்மி சைந்தபின்
பெற்ற வேலர்த மக்கு யாமொரு
பெண்வ ளர்ப்பினி லீந்தனம்
பெற்ற பிள்ளைகொ டுப்ப ரோவிதென்
பேய்பி டித்திடு தூதரே. (5)

—சிவப்பிரகாச சுவாமிகள்.

## 5. வழிபாட்டுப் பாடல்

திருவேஎன் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதீ மிக்க
உருவேஎன் உறவேஎன் ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவேஎன் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமரர் ஏறே. (1)

—அப்பர் தேவாரம்.

பானினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய

தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (2)

—திருவாசகம்

## பாரதம்

அருமறை முதல்வனை ஆழி மாயனைக்
கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்
திருமகள் தலைவனைத் தேவ தேவனை
இருபத முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம். (3)

—வில்லிபுத்தூர் ஆழ்வார்

## தேம்பாவணி

அறக்கடல் நீயே அருட்கடல் நீயே
அருங்கரு ணாகரன் நீயே
திறக்கடல் நீயே திருக்கடல் நீயே
திருந்துளம் ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே நிகர்கடந் துலகில்
நிலையுநீ உயிருநீ நிலைநான்
பெறக்கடல் நீயே தாயுநீ எனக்குப்
பிதாவுநீ அனைத்துநீ யன்றோ. (4)

—வீரமாமுனிவர்.

## சீறாப்புராணம்

ஞானவா ரிதியை, நபிகளுக் கரசை,
நானில மேல்சுவ டுருத
வானமா மணியை, இருநிதித் தருவை,
மரபுகட் கொருதனிச் சுடரை,
மோனமா தவர்கள் தொழுநவ மணியை,
மூவுல கனைத்துமோ ருலகில்
கோனியல் புரிய வருமுகம் மதுவைக்
குணமுடன் என்றுகாண் குவனோ? (5)

—உமறுப்புலவர்.

# உரைநடைப் பகுதி

## க. வள்ளற் கோமான், டாக்டர், அழகப்பச்செட்டியார் வரலாறு

[கழகப்புலவர், திரு. ப. இராமநாதபிள்ளை]

நகரத்தாரின் பெருமுயற்சியால் அவர்தம் நாடு பொன்னுடைகத் திகழ்கின்றது. அந்நாட்டின்கண் நிலவளம், நீர் வளம், கலைவளம், கடவுள்நிலை வளம், கைத்தொழில் வளம், வாணிகவளம், கொடைவளம் அனைத்தும் ஒருங்கு திகழ்கின்றன. "காடு கெடுத்து நாடாக்கிக், குளம்தொட்டு வளம்படுத்தினர்" எனச் சங்க நூல்களிற் படிக்கின்றோம். இந்நாளில் நகரத்தார் நாட்டின்கண் அவ்வுண்மையினை நேரிற் காண்கின்றோம். அத்தகைய சிறந்த நாட்டினுள் கோட்டையூர் என்பது ஓர் ஊர்.

பெரும்பாலும் நகரத்தார் தனவணிகர் என்று அழைக்கப்படுவர். அவர்கள் காலினும், கலத்தினும், வானூர்தியினும் உலகத்தின் எல்லாப் பக்கங்களிலும் சென்று வாணிகம் புரிந்து பொருளீட்டும் மரபினர். அம்மரபில் கோட்டையூரின்கண் திருவாளர், கே. சி. ஏ. எஸ். இராமநாதன் செட்டியாரும் அவர்தம் கற்பிற் சிறந்த மனைவியாரும் செய்த அருந்தவத்தால் 1909-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் ஆறும் நாள் நம் வள்ளற்கோமான் டாக்டர் அழகப்பச் செட்டியார் பிறந்தனர்.

பள்ளிப் படிப்பினை உள்ளூரிலேயே நன்கு கற்றனர். சென்னைக் கோநகர்க்குக் கல்லூரிப் படிப்பின்பொருட்டு வந்தனர். அரசினர் கல்லூரியிற் சேர்ந்து பயின்றனர். ஒருசாலை மாணவரும் உடன்பயில் மாணவரும் இவர்தம் அன்பாலும் பண்பாலும் பெருவிருப்பங்கொள்ளும்படி பயின்று வந்தனர். அந்நாளிலேயே தம் செலவினைச்

சிக்கனப்படுத்தி மிஞ்சியதை ஏழை மாணவர்கட்கு மன முவந்து கொடுத்து உதவினர். தம் இருபத்தோராம் வயதில் எம். ஏ. பட்டம் பெற்றனர். பின் இலண்டன் மாநகரிலுள்ள "மிடில் டெம்பிள் கல்லூரி"யில் பயின்று பாரிஸ்ட்டர் பட்டம் பெற்றனர். அங்கிருந்த காலத்தில் வான்பொறியூர்தி ஓட்டும் திறமைபெற்றுச் சான்றிதழும் பெற்றனர்.

கலையிலும் வழக்கறிஞர் நிலையிலும் மிகச் சிறந்திருந்தா ராயினும் அவருடைய உள்ளம் தொழில் துறையிலேயே மிக்குச் செல்வதாயிற்று. அதனால் பலவேறு தொழில்களில் முதன்மையராகவிருந்தனர். கொச்சியின்கண் நூற்பு ஆலையும் நெசவு ஆலையுமாகிய பெருந் தொழிலினை உண்டாக்கினர். அவற்றிற்குப் பெருமுதலும் வைத்தனர். "அழகப்பா டெக்ஸ்டைல்ஸ் (கொச்சி) லிமிட்டெட்" எனப் பெயர் அமைத்தனர்; அதற்கு ஆட்சிப் பொறுப்பாளரும் ஆயினர். 'ஆரோன் நூற்பு நெசவு மில்ஸ் லிமிட்டெட்' ஆல்வாயிலுள்ள 'அஷோக் டெக்ஸ்டைல்ஸ் லிமிட்டெட்' முதலியவற்றிற்கு ஆட்சியாளருமாயிருந்தனர். தொழில்களைச் செம்மையுறப் புரிந்தனர்; விரும்பியபடி பெரும்பொருள் திரட்டினர். முயற்சி திருவினையாக்குமல்லவா?

பலவேறு தொழில் நிலையங்களுக்கு இயக்குநர் (டைரக்டர்) ஆகப் பல ஆண்டுகள் இருந்தனர். அத்தொழில் நிலையங்களைத் தம்முடைய உரிமைத் தொழில் நிலையங்கள் போலவே நினைத்து உழைத்தனர். அவைகளும் ஓங்கி வளர்ந்து சிறந்தன. இவர் எந்த நாளும் நந்தமிழ்த் தென்னாடு தொழில் துறையில் ஓங்கி வளரவேண்டும் என்னும் உண்மையான எண்ணம் உடையவர். அதனால் சென்னைப் பல்கலைக் கழகத்திற்குத் தொழிற் கல்வியின் பொருட்டு ஐந்து நூறாயிரம் ரூபா வழங்கினர். அதுபோல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கும் தொழிற் கல்வியின் பொருட்டு ஐந்து நூறாயிரம் ரூபா வழங்கினர்.

தமிழின் மாட்டுள்ள உண்மையன்பினால் தமிழ் எங்கணும் பயிலப்பட்டு எல்லார்க்கும் இன்பங் கொடுக்க

வேண்டும் என எண்ணினர். திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியர் நிலையொன்று ஏற்படுத்தச் செய்தனர். அந்நிலை என்றும் நிலைத்திருத்தல் வேண்டி ஒரு நூறாயிர ரூபா வழங்கினர். கொச்சிப் பள்ளிச் சிறுவர்களின் பகலுணவின் பொருட்டு ஒன்றரை நூறாயிர ரூபா உதவினர். கொச்சி அரசினர் தொழிற்றுறை உறுப்பினராகவு மிருந்து தொண்டு செய்தனர். சென்னைச் சேவாசதனத்தில் அருமை மகளார் திருப்பெயரால் 'உமையாள் விடுதி' என ஒன்று ஏற்படுத்த எழுபத்தையாயிரம் வெண்பொற் காசுகள் ஈந்தனர். கொச்சியிலுள்ள தம் ஆலையில் 'பிள்ளைப்பேற்று விடுதி' யொன்று பெரும் பொருட் செலவில் அமைத்தனர். அவ்விடுதியினை நம் குடியரசுத் தலைவர் பாபு இராசேந்திர பிரசாத் அவர்கள் திறந்துவைத்தனர்.

காரைக்குடியில் தம் பெயரால் நிறுவியுள்ள அழகப்பச் செட்டியார் கலைக் கல்லூரி, விஞ்ஞானக் கல்லூரி, பயிற்சிக் கல்லூரி, பொறியியற் கல்லூரி, பெண்கள் கல்லூரி, மாடல் உயர்நிலைப்பள்ளி, மாண்டிசோரிப்பள்ளி முதலியவற்றின் பொருட்டு ஐம்பது நூறாயிர ரூபா அகமகிழ்ந்து அன்புடன் வழங்கியுள்ளார்கள். இன்னும் இனங் குறிக்கப்படாதனவும் வரையறைக்கு உட்படாதனவுமாகிய வெண்பொற் காசுகள் பல நூறாயிரமாகும். கோட்டையூரிலும் பெண்கள் பள்ளிக் கூடம் ஒன்று ஏற்படுத்தினர்.

காரைக்குடியில் 'அழகப்பாக் கல்லூரி' தொடங்க ஏற்பாடு செய்யப்பட்டது. திரு. டி. சூரியநாராயணா, கல்லூரி முதல்வராக இருந்தார். அப்போதிருந்த கல்வியமைச்சர் திரு. அவிநாசிலிங்கம் செட்டியாரவர்கள் கல்லூரியைத் திறந்து வைத்தனர். கல்லூரியின் பொறுப்புச் சிறந்த ஓர் அறங்காவற் குழுவினரால் ஒப்புவிக்கப்பட்டது. அந்த அறங்காவற் குழுவினர், கல்லூரிக்காக அறுநூற்றறுபத்தைந்து (௬௬௫) ஏக்கர் நிலம் முறையாகத் தம்மால் நாயகராகிய கலைக்கடர் வழிப்பெற்றனர்.

'மின்சார ரசாயன ஆராய்ச்சி'க்குத் தேசிய நிலையம் நிறுவப் பதினைந்து நூறாயிர ரூபா நன்கொடையும் முந்நூறு ஏக்கர்

நிலமும் தருவதாக நேருவுக்கு உருக்கமான கடிதம் ஒன்று செட்டியாரவர்களால் எழுதப்பெற்றது. நேரு அவர்கள் மனமுவந்து அம் 'மத்திய மின்சார நிலையத்'திற்கு அடிப் படைக்கல் நாட்டினர்.

இத்தகைய நிலையம் ஒன்று நிறுவவேண்டும் என்னும் எண்ணம் இந்தியப் பேரரசினர்க்குத் தோன்றியது. அதன்பொருட்டு விஞ்ஞானக் கைத்தொழில் ஆராய்ச்சி இயக்குநர் (டைரக்டர்) சென்னைக்கு வந்தனர். கிண்டிப் பொறியியற் கல்லூரிக்கு அண்மையில் நிலம் வாங்க முயன் றனர். அளவுக்கு மிஞ்சியதால் வாங்கவில்லை. இந் நிலையிற் செட்டியாரவர்கள் வலிய முன்வந்தமை அக் குழுவினர்க்கு மகிழ்ச்சியினைத் தந்தது. உடனே இசைந்தனர். எஸ். எஸ். பாட்நகர் காரைக்குடி இடத்தைப் பார்வையிட்டனர். பார்த் ததும் தண்ணீர்நிலைமை பற்றி ஐயுற்றனர். செட்டியாரவர் கள் நாடொறும் இரண்டு லட்சம் காலன் தண்ணீர் கிடைக்கு மென்று மெய்ப்பித்துக் காட்டி ஐயத்தைப் போக்கினர்.

அழகப்பாக் கல்லூரிக்கு அப்பொழுது சென்னை அரசின் ஆளுநராக இருந்த பவநகர் மகாராசா அடிப்படைக்கல் நாட்டினர். ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியும் அடுத்துத் தொடங்கப் பெற்றது. கல்லூரி இடத்தில் உமையாள், விசாலா விடுதிகள துவங்கப்பெற்றன. இவைகளை அப் பொழுது சென்னை முதல் அமைச்சராய் இருந்த குமாரசாமி ராசா அவர்கள் திறந்துவைத்தனர். அழகப்பாக் கல்லூரித் தந்தி நிலையமும் திறக்கப்பட்டது. பின்னர், அழகப்பச் செட் டியார் இஞ்சினியரிங் டெக்னலஜிக் கல்லூரி திறக்கப்பட் டது. இஞ்சினியரிங் டெக்னலஜிஸ்ட் சங்கத்தை ராஜாஜி அவர்கள் திறந்து வைத்தனர்.

அழகப்பச் செட்டியார் சென்னை அரசியலார் அமைத்த 'தொடக்கக் கல்விச் சீர்திருத்தக் குழுவின்' தலைவராக விருந்து தொண்டு புரிந்தனர். 'சென்னை இராஜ்யப் பாரத் சாரணர் சாரணிகளின் சங்கத்' தலைவராக இருந்தனர். சென்னைச் சேவாசதனக் காப்பாளராக விருந்தனர். சென்னை வர்த்தக சபையின் முன்னாள் தலைவராகவும் இருந்தனர்.

அச்சபையின் நிலைப்பான கட்டடத்திற்காக மிக்க விலையுள்ள நிலம் ஒன்றை வாங்கி அளித்தனர். அண்ணாமலைப் பல்கலைக் கழகச் செனட் உறுப்பினராகவும் இருந்தனர்.

இந்திய அரசாங்கம் அளித்த 'சர்' பட்டமும் இவருக்குக் கிடைத்தது. சென்னைப் பல்கலைக்கழகமும், அண்ணாமலைப் பல்கலைக் கழகமும், டாக்டர் பட்டம் வழங்கின சென்னை விஞ்ஞானத் தொழில் ஆய்வுக்குழுவின் உறுப்பினராக இருந்தனர். மத்திய மின்சார ரசாயன ஆராய்ச்சிக் கழக ஆய்வுக்குழுவில் ஒருவராக அமர்த்தப்பட்டனர். கேம்பிரிட்ஜில் நிகழ்ந்த 'காமன்வெல்த் பல்கலைக்கழக மாநாட்டில்' சென்னைப் பல்கலைக்கழகப் பிரதிநிதியாகச் சென்றிருந்தனர். சென்னைப் பல்கலைக் கழக "சிண்டிகேட்" என்னும் அவையிலும் உறுப்பினராக இருந்தனர். இந்தியப் பேரரசுக் கல்வித் துறையினரால் தொழில் அலுவல் ஆட்சிக் குழுவின் உறுப்பினராக அமர்த்தப் பெற்றனர். அப்பேரரசினரால் 'பத்ம பூஷண்' என்னும் பட்டமும் பெற்றனர்.

இத்தகைய சிறப்புப்பெற்ற வள்ளற்கோமான் 1957 ஏப்ரல் 5 ஆம் நாள் தம் வளமார் பூதவுடலைவிட்டு, வனப்புமிகும் புகழுடலை நாட்டி இறைவனடி சேர்ந்து இறவா இன்புற்றனர்.

இதனைக் கற்கும் மாணவர்கள் மிக்க ஊக்கமுடன் கற்று ஒவ்வொருவரும் வள்ளற்கோமான் போன்றவராகி நாட்டுக்கும் மொழிக்கும் நல்ல முறையில் தொண்டு செய்வோம் என உறுதிகொள்ளுதல் வேண்டும்.

# உ. பெற்றோர்ப் பேணல்

[திரு. வி. கலியாணசுந்தரனுர்]

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅ ரெனின்" என்றார் திருவள்ளுவனார். கல்வியின் பயன் கடவுளைத் தொழுதல் என்பது அம் மறைமொழியின் கருத்து. கடவுளோ மாற்ற மனங்கடந்து நிற்பவர்; மண், புனல், தீ, வளி, வெளி, திங்கள், ஞாயிறு, உயிர் என்னும் எட்டு மூர்த்தியாய் யாண்டும் நீக்கமற நிற்பவர். இவரை எப்படித் தொழுவது ?

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

முதல் முதல் காணுங் கடவுளராகக் காட்சி யளிப்பவர் நம்மை ஈன்ற தாய் தந்தையர். அவர் வழியே பின்னை முயற்சியால் யாண்டு முள்ள இறைவனை வழிபடுதல் கூடும். இக்கருத்துப் பற்றியே சான்றோர் "தந்தைதாய்ப் பேண்" என்றும், "தந்தைதாய் பணித்தல் செய்யுந் தவமலால் தவம் வேறில்லை" என்றும் கூறிப்போந்தனர்.

தாய்

தாய் தந்தை என்னும் இருவருள் தாயே சிறந்தவள். "ஈன்றாளி, லென்ன கடவுளு மில்" என்றார் ஒரு பெரியார். இவ்வுலகில் தாயன்புக்கு ஒப்பாகவாதல் உயர்வாகவாதல் பிறிதொருவர் அன்பிருக்குங்கொல்! கடவுள் அன்பிற்கு அடுத்த படியில் நிற்பது தாயன்பே. "தாயினும் நல்ல சங்கரன்," "தாயிற் பெரிய தயாவுடைய தம்பெருமான்," "பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்துநீ" என வரூஉந் தமிழ்மறை மொழிகளைக் காண்க.

"விளையும் பயிர் முளையில் தெரியும்" என்பது பழமொழி. காந்தியடிகளின் இளமை வாழ்வு பின்னே அவரது பெரு வாழ்விற்குக் கால் கொண்டது. காந்தியடிகள் தம்மை ஈன்ற அன்னையாரைத் தெய்வமாகவும், அவர் மொழியை மறை மொழியாகவும் போற்றிவந்தார். தமக்குத் தவறு என்று

தோன்றும் ஒன்று, தாயார்க்கு அவ்வாறு தோன்றா தொழியுமேல், அடிகள் தாய்மைச் சொல்வழி நிற்கவே ஒருப்படுதல் வழக்கம்.

### தீண்டாமையும் அன்னையாரும்

காந்தியடிகள் பிறந்த குடியுங் குலமும் பழைய கண்மூடி வழக்க ஒழுக்கங்கள் எல்லாந் திரண்டு உருண்ட ஒரு கூட்டம். அக்கூட்டத்தார் தீண்டாமையைத் தெய்வம் போலக் கொள்பவர். அவரிடைத் தீண்டாமை ஒழிக்கப் போந்த தோன்றல் தோன்றினார். தீண்டாமை பாவம் என்னும் உணர்வு இளமையிலேயே காந்தியடிகள் உள்ளத்தில் இயல்பாகவே அரும்பி இருந்தது. அவர் தமது வீட்டுத் தோட்டி யுகன் என்பானைத் தொடுதல் பாவமாகாது என்று தம்மை ஈன்ற தெய்வத்தோடு வாதுஞ் செய்வாராம். ஆனால் அவர் தாயார் விருப்பத்துக்கு மாறுபட்டு நடந்ததில்லை. "நான் தீண்டாதாரைத் தீண்டுவதுண்டு. அதை நான் தாய் தந்தையர்க்கு மறைத்துப் பேசுவதில்லை. அத் தீட்டைப் போக்குவதற்குச் சுருங்கிய ஒரு வழி முஸ்லீமைத் தொடுவது என்று அன்னையார் சொல்வார். அன்னையார்மாட்டு எனக்குள்ள அன்பு காரணமாக யான் அவ்வாறு செய்வது வழக்கம். ஆனால் அதை ஒரு சமயக் கருத்துக்கொண்டு யான் செய்ததில்லை" என்று காந்தியடிகளே மொழிந்திருத்தல் காண்க. இஃது அவரது இளமையில் சத்தியாக்கிரக உணர்வே அரும்பாத காலத்தில் நிகழ்ந்தது. அன்னையார் உள்ளம் புண்படும் வழியில் அடிகள் நடந்ததில்லை. காந்தியடிகள் ஈன்றார் சொல்லுக்கு என்றும் எங்கும் கட்டுப்பட்டு நடந்துவந்தார் என்பதை வலியுறுத்த அவரது வாழ்வில் நேர்ந்த சில நிகழ்ச்சிகளை ஈண்டு எடுத்துக் காட்டுகிறேன்.

### புலாலும் அன்னையாரும்

காந்தியடிகளின் குலம் புலால் உண்ணாத பெருமை வாய்ந்தது. அடிகட்குப் புலால் சுவை தெரியாது. ஒரு தீய நண்பன் "புலால் உணவு கொள்வதால் வெள்ளைக்காரர் பருத்து உயர்ந்து திடமாக இருக்கிறார். அத் திடங்

கொண்டு அவர் நமது நாட்டையும் பற்றிக்கொண்டார். அவரைத் துரத்திச் சுயராஜ்யம் பெறவேண்டுமானால் அவரைப்போலப் புலால் உணவு உண்டு கொழுத்தல் வேண்டும்" என்று நாளடைவில் அடிகட்கு அறிவுறுத்தி அவரை மயக்கிப் புலால் உண்ணுமாறு செய்தான். காந்தியடிகளும், "சுவை கருதிப் புலால் உண்டேனில்லை; சுயராஜ்யங் கருதி யுண்டேன்" என்று எழுதியிருக்கிறார். மாலை வேளையில் சிறுவர்களோடு சேர்ந்து புலால் உணவு விலாப் புடைக்கக் கொள்ளுதலால் வீட்டில் அடிகள் அடிக்கடி இரவு உணவு கொள்ளாதொழிந்தார். அவ்வப்போது அவர் அன்னையார், "ஏன் சாப்பாடு வேண்டா என்று மறுக்கிறாய்" என்று கேட்கும் வேளையில், "அம்மணி! பசி யில்லை" என்று நம் ஐயர் உரைப்பாராம். இப் பொய்யுரை அடிக்கடி அடிகள் மனத்தைக் கொந்திக் கொந்திக் கொன்றது. "அந்தோ! பொல்லாப் புலால் உணவு ஈன்றார்மாட்டும் பொய்கூறத் தூண்டுகிறதே, என்செய்வது" என்று அன்னையார்பால் பொய்கூற மனமெழாது புலால் உண்பதை நம் மெய்யர் நிறுத்திவிட்டார். "புலாலை வேறு காரணம் பற்றி விட்டேனில்லை. அன்னையார்பால் பொய்யுரைக்க மனமொழமை கண்டு அதை விடுத்தேன்" என்று காந்தி யடிகள் தமது வரலாற்றில் வரைந்திருக்கிறார். ஈன்றாரிடம் பொய் கூறலாகாது என்னும் உறுதி காந்தியடிகட்கு இளமையிலேயே ஏற்பட்டது.

### முட்டை

அடிகள் இங்கிலாந்தில் இருந்தபோது உணவைப் பற்றிப் பல நூல்களை ஆராய்ந்தார். அவ் வாராய்ச்சியாலும் சிலர் அறிவுறுத்தலாலும் முட்டையில் உயிரில்லை என்னும் முடிவிற்கு வந்து அதை உண்ணத் தொடங்கினார். ஆங்கு ஊன் உண்ணாத பலரும் முட்டையை மட்டும் உண்பது வழக்கம். முட்டை உயிரற்ற பொருள் என்பது அவர்தம் கொள்கை. ஒருநாள் காந்தியடிகட்கு ஓர் ஐயம் தோன்றிற்று. அடிகள், "முட்டையில் உயிருண்டா இல்லையா என்று ஆராய்ந்து உண்மை கண்டு அதை உண்ணும்

உரிமை பெற நான் யார்? முட்டையிலும் உயிருண்டு என்னும் நம்பிக்கை தாயார்க்கு உண்டு என்பது எனக்குத் தெரியும். அவர் கருத்துவழி நோக்கின் முட்டையும் புலாலின்பாற் பட்டதே'' என்று தெளிவுற்று முட்டை உண்பதை ஒழித்தார். ஈன்றவரை ஏமாற்ற அடிகள் மனச் சான்று இடந்தரவில்லை. ஆராய்ச்சியாளர் கருத்தினுந் தாயார் கருத்துக்கே அதிக மதிப்பு அடிகள் ஈந்தார். நீண்ட தூரத்திருந்தும் நீண்ட நாளாகியும் தாயார்முன் கூறிய உறுதிமொழி காக்குந் தவநெறி நின்றவர் நம் பெருமான்.

துளசி மணி

காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்தபோது அவர் பல கிறித்தவ நண்பரைப் பெற்றார். அவருள் ஒருவர் அன்பர் கோட்ஸ் என்பவர். இவரும் அடிகளும் சமயங்களைப்பற்றிப் பெரு வழக்கிடுவதுண்டு. ஒருநாள் அன்பர் கோட்ஸ், "இவ்வளவு ஞானம் பெற்றுந் தாங்கள் தங்கள் கழுத்தில் துளசி மணியை அணிந்திருப்பதென்னை? அஃதெனக்குப் பிடிக்கவில்லை; இப்புற நம்பிக்கை தங்கட்குத் தகாது. அதைத் தாருங்கள், அறுத்தெறிகிறேன்" என்று மணியைக் கேட்டார். அடிகட்குத் தாயார் நினைவு எழுந்தது. அந்நாளில் தாயார் உயிருடனில்லை. அவர் இவ்வுலக வாழ்வு நீத்துப் பல ஆண்டுகளாயின. ஆயினும் அடிகள் ஈன்ற அன்னையாரை மறந்தாரில்லை.

அவர் அன்பர் கோட்டைப் பார்த்து, "இஃது என் தாயாரால் அணியப்பட்டது. தாயாரின் அன்புக்கொடை யென்று மிகப் புனிதமாக இம்மணியைப் போற்றி வரு கிறேன். அதன் உட்பொருள் எனக்குத் தெரியாது. அதை அணியாவிடின், அதனால் கேடு விளையும் என்று நான் நம்பு கிறேனில்லை. அன்னையாரால் அணியப்பெற்ற ஒன்றை வலிந்து அறுத்தெறிய என் மனம் ஒருப்படவில்லை. அது தானே அறுந்து விழுந்தால் புதியதொன்றை யான் அணி யேன்" என்று சொற்றனர். தாயாரிடம் காந்தியடிகள் கொண்டிருந்த அன்புக்கு இன்னுஞ் சான்று வேண்டுங் கொல்!

அடிகள் தந்தையாரிடமும் அன்பு பூண்டு அவரை வழிபடுதலுண்டு. அவர் தந்தையார்க்குப் பலதிறப் பணி விடைகள் செய்வார். தந்தையார் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் கிடந்தபோது அடிகள் தந்தையார்க்குக் கைகால் பிடித்தல் முதலிய தொண்டுகளை அன்புடன் நிகழ்த்தி வந்த தாக அவரது வரலாறு அறிவிக்கிறது. அடிகள் தந்தையாரை இளமையில் தெய்வமாகப் போற்றினர் என்பதற்கு ஈண் டொரு நிகழ்ச்சியை எடுத்துக்காட்டுவதே சாலும்.

சுருட்டும் திருட்டும்

தீ நட்புக் காரணமாக அடிகள் இளமையில் சுருட்டுக் குடித்தல் பயின்றுர். சுருட்டுக்குக் காசு கிடைப்பதில்லை. வேலைக்காரன் காசை அடிகள் திருடுவது வழக்கம். ஒரு முறை அவர் தமது உடன்பிறந்தார் கைக் காப்பில் ஒரு சிறு பொற்றுண்டு வெட்டி விற்றுக் கடனடைத்தார். இன்னோ ரன்ன மறச்செயல்கள் நிகழ்த்தியபோதெல்லாம் அடிகளை மனச்சான்று ஒறுத்துக்கொண்டே வந்தது.

நன்மனமுடையோர் சிறு குற்ற மிழைப்பினும் அவர் மனமே அவரை ஒறுக்கும். அவ் வொறுத்தலைப் பொருட் படுத்தாது வாழின், மனிதன் நாளடைவில் இருகால் விலங்காவன்.

முறையீடு

காந்தியடிகள் குற்றங் குறித்து வருந்தி வருந்தி முடிவில் அக் குற்றத்தைத் தந்தையார்பால் முறையிட்டே தீரல் வேண்டுமென்று அதை ஒரு கடிதத்தில் பொறித்துத் தந்தையாரிடந் தந்தார். தந்தையார் அதுகண்டு கண்ணீர் உகுப்பதை அடிகள் நோக்கித் தாமுங் கண்ணீருங் கம்பலையு மானுர். அதைப்பற்றி அடிகள் தமது "சத்திய சோதனை"யில்,

> "தந்தையாரிடங் கடிதத்தைக் கொடுத்த வேளையில் எனது உடல் நடுங்கிற்று. அவர் கடிதத்தைப் படித்தபோது அவர் கண்களில் நீர் முத்து முத்தாகச் சொட்டிற்று. கடிதமும் நனைந்தது. சிறிது நேரம் கண்ணை மூடிச் சிந்தனையி லிருந்தார்; பின்னை

விழித்துக் கடிதத்தைக் கிழித்தெறிந்தார். அக்காட்சி எனது மனத்தையும் உருக்கிற்று. * * * * என் தந்தையார் கண்ணீர் என் மன மாசைக் கழுவிற்று. அவ்வன்பு நிலை எவர்க்கே தெரியும்? அனுபவித்த வர்க்கன்றே தெரியும்? அன்று அந் நிகழ்ச்சியில் தந்தையாரின் அன்பைக் கண்டேன்; இன்று அதன்கண் அஹிம்சையின் நுட்பத்தைக் காண் கிறேன். மன்னிக்குந் தன்மை இயல்பாக என் தந்தையார்பால் ஏற்பட்டதன்று. அவர் சினந்து கடுஞ்சொல் பகர்வாரென்று எண்ணினேன்; நெற்றி யில் அடித்துக்கொள்வாரென்று எதிர்பார்த்தேன். அவரது பொறுமை எனக்கு வியப்பூட்டிற்று. இதற் குக் காரணம் யாது? யான் எனது குற்றத்தை மறையாது முறையிட்டதே. மன்னிப்போரிடம் குற்றத்தைக் கரவாது வெளியிடுவதோடு, மீண்டும் அக்குற்றம் இழைப்பதில்லை என்று உறுதி கூறுவது கழுவாய் தேடுவதாகும்''

என்று எழுதியிருக்கிறார்.

இவ்வுரைகளால் காந்தியடிகள் தந்தையார்பால் கொண் டிருந்த அன்பு நனி விளங்குகிறது.

'' அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் '' என்னும் முதுமொழிக்குக் காந்தியடிகள் வாழ்வு ஓர் இலக்கியமாக மிளிர்வதை அன்பர்கள் உணர்வார்களாக.

காந்தியடிகள் வாழ்விலுள்ள இச் சில குறிப்புக்களும் மனிதராக விரும்புவோர்க்குப் பெருந்துணை செய்வனவாம்.

## ௩. கடிதம்: தம்பிக்கு

[டாக்டர், மு. வரதராசனார்]

அன்புள்ள எழில்,

நீ எழுதிய கடிதங்கள் எனக்கும் சுவையாக இருந்தன. அன்னைக்கு எழுதிய கடிதங்களை அண்ணன் எப்படிப் பார்த்தான் என்று நீ எண்ணி வியப்பு அடையலாம். உன் கடிதங்கள் அன்னை மட்டும் அல்லாமல் அண்ணனும் படிக்க வேண்டிய கடிதங்கள்தாம்.

அன்னையைக் கேட்டுத்தான் படித்தேன். "எழில் எழுதியவை" என்று அவற்றை எல்லாம் ஒரு கட்டாகக் கட்டி அன்னை பீரோவில் வைத்திருந்தார். "இது என்ன அம்மா?" என்று கேட்டேன். உன் கடிதங்கள் என்று சொல்லி, "நீயும் படிக்கலாமே" என்றார். பிறகுதான் படித்துப் பார்த்தேன். நீ ஒன்றும் கவலைப்படாதே. நானும் உன் கருத்து உடையவனே. நீ வயதில் இளையவன். அஞ்சாமல் உன் கருத்தைச் சொல்லுகிறாய்; எழுதுகிறாய். நான் உன்னைவிட உலக அனுபவம் மிகுந்தவன்; அதனால் உலகத்தைப்பற்றிய அச்சமும் மிகுந்தவன். ஆகையால் எதையும் சொல்லவும் எழுதவும் தயங்குகிறேன்; நீ உள்ளத்தில் உணர்ந்ததைக் கொட்டுகிறாய்; நான் உணர்ச்சி இல்லாதவன்போல் நடிக்கிறேன். இதுதான் வேறுபாடு. நீயே என்னைவிட ஒரு வகையில் நல்லவன்.

நல்லவனாக இருந்தால் மட்டும் போதாது. வல்லவனாகவும் இருக்கவேண்டுமல்லவா? நன்மை வன்மை இரண்டும் இருந்தால்தான் இந்த உலகில் வாழ்க்கை உண்டு. நல்ல தன்மை மட்டும் உடையவர்கள் எத்தனையோ பேர் கலங்கிக் கண்ணீர் வடித்து மாய்ந்திருக்கிறார்கள்; மாய்ந்து வருகிறார்கள். வல்லமை மட்டும் பெற்றவர்களும் எதிர்பாராத வகையில் நசுக்குண்டு அழிகிறார்கள். குடும்பங்கள் முதல் நாடுகள் வரையில் இதற்குச் சான்றுகள் காணலாம். தமிழ்

நாட்டில் இருந்த பழங்காலத்து நல்லரசுகள் கலங்கி அழிந்ததை வரலாறுகளில் காணவில்லையா? ஜெர்மனி, ஜப்பான் முதலான வல்லரசுகள் அழிவுற்றதைக் கண்கூடாகக் காணவில்லையா? நல்ல மருமகளாக வந்து வாழத்தொடங்கிக் குடும்பத்தாரின் இன்னலைப் பொறுக்கமுடியாமல் தற்கொலையாலோ மன வேதனையாலோ மாண்ட கதைகளை ஊர்களில் கேட்டதில்லையா? மகனையும் மருமகளையும் விருப்பம்போல் ஆட்டி வைத்து வல்லமை பெற்ற மாமியார், சில ஆண்டுகளுக்குப்பின் வாயும் கையும் அடங்கி மூலை வீடும் வேளைக் கஞ்சியும் கிடைத்தால் போதும் என்று ஏங்கும் கதைகளையும் கேட்டதில்லையா? இந்த விதியை நாம் இனியும் மறந்து வாழக்கூடாது. தமிழர்கள் நல்லவர்களாக மட்டும் இருந்து தனித்தனியாகவும் குடும்பம் குடும்பமாகவும் நாடு நாடாகவும் அழிந்தது போதும். இனிமேல் வல்லவர்களாகவும் வாழக் கற்றுக்கொள்ள வேண்டும். நல்ல தன்மையோடு வல்லமையும் சேர்ப்பெற்று வாழவேண்டும்.

தம்பி! இயற்கையிலிருந்து நாம் ஒரு பெரிய பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். வாழ்க்கைப் பகுதிகளில் ஒன்றை மட்டும் போற்றுகிறவன் உருப்படியாவதில்லை. உடலை மட்டும் போற்றி உரமாக வைத்திருப்பவனும் அழிகிறான். அவனுடைய உள்ளம் அவனுக்குப் பகையாகி அவனைத் தீய வழியில் செலுத்திக் கெடுத்து அழிக்கிறது. உள்ளத்தை மட்டும் தூய்மையாகப் போற்றிக் காப்பாற்றுகிறவனும் இடைநடுவே அல்லல்படுகிறான். அவனுடைய உடல் பல நோய்க்கிருமிகளுக்கு இடம் கொடுத்து அவனுடைய உள்ளத்தில் அமைதியைக் கெடுத்து அல்லல்படுகிறது. உடலும் வேண்டும், உள்ளமும் வேண்டும் என்று இரண்டையும் உரமாகவும் தூய்மையாகவும் காப்பதே கடமையாகும்.

மரம் வானளாவ உயர வேண்டியதாக இருக்கலாம்; ஆனால் தான் வேரூன்றிய மண்ணை மறந்து வாழ முடியாது; வானைப் புறக்கணித்துக் கிளைகளை உயர்த்தாமல் வாழவும் முடியாது. இந்த உண்மையை நன்றாக உணர்ந்த

வர் திருவள்ளுவர். அறநெறியும் வேண்டும், பொருள் வளமும் வேண்டும், இன்ப வாழ்வும் வேண்டும் என்று உணர்த்தும் நூல் திருக்குறள்தான். அறத்தை நினைந்து பொருளை மறக்கும்படியாகத் திருவள்ளுவர் கூறவில்லை. பொருளையோ இன்பத்தையோ போற்றி அறத்தை மறக்கும் படியாகவும் அந்தப் பெருந்தகை கூறவில்லை. உலகத்து நூல்களில் பல அறம் பொருள் இன்பம் மூன்றில் ஒவ்வொன்றை மட்டுமே வலியுறுத்தி யிருப்பதைக் காண லாம். வாழ்க்கையின் பல பகுதிகளையும் போற்றி வாழ வேண்டும் என்பதை உணர்த்தவந்த திருவள்ளுவர் இந்த மூன்றையும் தெளிவுறுத்தி யுள்ளார். தமிழராகிய நாம் திருவள்ளுவரைப் பெற்றிருக்கிறோம்; திருக்குறளைப் பெற் றிருக்கிறோம். நம்மில் சிலர் அந்த நூலைக் கற்றும் இருக்கி றோம். ஆனால் திருவள்ளுவர் கூறியபடி வாழவில்லை. நல்ல தன்மை தேடுகிறோம்; வல்லமை தேடவில்லை. அதனால் தான் தாழ்வுறுகிறோம்.

நீ உடனே இதை மறுக்க முன்வரக்கூடும். அதற்கு முன்பே நான் காரணம் சொல்லி விளக்கிவிடுகிறேன்.

தமிழ் நல்ல மொழிதான்; ஆனால் அதை வல்ல மொழி யாக ஆக்கினோமா? பெரும்பாலோர் போற்றும் மொழியாக ஆக்கினோமா? இன்று எதை எடுத்தாலும் மக்கள் தொகையே வல்லமையாக வைத்துப் பேசப்படவில்லையா? தமிழ்மொழிக்கு அறிவுக் கலைகளில் செல்வாக்குத் தந்தோமா? நீதி மன்றங்களில் உரிமை நல்கினோமா? ஆட்சிக் கூடங் களில் வாழ்வு வழங்கினோமா? இல்லையானால் வெறும் பேச்சு ஏன்?

வல்லமை இல்லாத நல்ல தன்மை வாழாது தம்பி! அது பொருட்பால் இல்லாத திருக்குறள் போன்றதுதான்.

நம் முன்னோர் இதை மறந்த காரணத்தால்தான் எத்தனையோ இழந்தனர். ஒன்று சொல்லட்டுமா?

தமிழ்க்கலை நல்ல கலைதான். அதிலும் யாழிசை நல்ல இசைதான். ஆனால் வாழ்ந்ததா? இல்லை. ஏன்? முன்னே செல்வாக்கைப் பெற்றவர்கள் யாழைப் புறக்கணித்தார்கள்;

பிறகு பொதுமக்கள் மறந்தார்கள். இன்று தமிழுக்கும் ஏறக்குறைய அதே நிலை இருப்பதை எண்ணிப்பார்; உன் மனம் புண்படும்.

நீ இதை மறுக்கலாம். அன்று அரசன் எவ்வழி அவ் வழி குடிகள் என்ற நிலைமை இருந்ததை எடுத்துக்காட்டலாம். இன்று பொதுமக்கள் எவ்வழி அவ்வழியே ஆட்சி யாளர் என்று எடுத்துக் கூறலாம்.

இப்படி உன்னை நீ ஏமாற்றிக் கொள்ள வேண்டா என்றுதான் உனக்குச் சொல்லுகிறேன். பொதுமக்களின் விருப்பம்போல் ஆட்சி நடப்பதாகச் சொன்னால், பொது மக்கள் போரை விரும்புகிறார்களா, அணுகுண்டையும் பிற குண்டையும் விரும்புகிறார்களா, வேலையில்லாத் திண்டாட் டத்தை விரும்புகிறார்களா, குடியிருக்க வீடும் அறிவு வளர்க்கக் கல்வியும் உடல் வளர்க்கக் கஞ்சியும் இல்லாத கொடிய வறுமையை விரும்புகிறார்களா என்று மெல்ல எண்ணிப்பார். உனக்கே தெரியும்.

பொதுமக்களுக்குத் தங்கள் எதிர்காலத்தையும் நிகழ் காலத்தையும் சேர்த்து எண்ணித் தேவையை உணர இன்னும் தெரியவில்லை. அவர்கள் களிமண்ணாய்த் திரண்டு கிடக்கிறார்கள். யார் யாரோ நீர் சேர்த்துப் பிசைந்து தமக்கு வேண்டியவாறெல்லாம் உருவங்களைச் செய்து கொள்கிறார்கள்.

சரி, நீ சொல்லுகிறபடியே பார்ப்போம். இன்று ஆட்சி எல்லாம் ஓட்டுப் போடும் மக்களின் கைகளைப் பொறுத்தது என்று வைத்துக்கொள்வோம். அவர்கள் ஓட்டுப் போடும் போது தங்களைப்பற்றியாவது, தமிழ்நாட்டைப்பற்றியாவது, தமிழைப்பற்றியாவது கவலைப் படுகிறார்களா? அவர்கள் கவலைப்படாத நாடும் மொழியும் யாருடைய வல்லமையை நம்பி வாழ முடியும்? வறுமையால் வாடும் அறிஞர் சில ருடைய துணைமட்டும் போதுமா?

நான் சொல்கிறபடியும் கொஞ்சம் பார். களிமண் பிசைகிறவர்களின் கைகளாவது நாட்டையும் மொழியையும் பற்றிக் கவலைப்படுவது உண்டா? அவர்களை மாற்றுவதற்

காக அல்லது அவர்களுடைய மனத்தில் நல்லெண்ணம் ஏற்படுவதற்காக நீயும் நானும் ஏதாவது செய்தோமா? ஒன்றும் செய்யாமல், தமிழ் நாடும் தமிழும் வாழ்ந்துவிடும் என்று எண்ணிக்கொண்டு காலம் கழிப்பது குற்றம் அல்லவா?

மறைந்துபோன அந்த யாழைப்பற்றிப் பழங்காலத்துப் பாணரும் விறலியரும் பொருநரும் கூத்தரும் நம்மைப் போலவேதான் ஏமாந்த எண்ணம் எண்ணிக்கொண்டு, நல்லவர்களாக வாழ்ந்திருக்க வேண்டும். அந்த யாழின் அருமை பெருமைகளைமட்டும் எண்ணிக்கொண்டு இருந் தார்கள். அதை வாழ வைக்கும் வல்லமைபற்றி அவர்கள் எண்ணத் தவறினார்கள். அதனால்தான் அந்த அருமை யான கருவி அழிந்தது. அதை நினைத்துப் பார்க்கவும் இன்று ஒரு விபுலாநந்தர் தேவையாகிவிட்டது.

தம்பி! மேடையில் முழங்குவதைக் கொஞ்ச காலம் வைத்தாலாவது, இதை எண்ணிப் பார்க்க ஒரு வாய்ப்பு உண்டாகும் என்று எனக்குச் சில வேளைகளில் தோன்றுகிறது. இது பைத்தியக்கார எண்ணமாக உன் போன்ற இளைஞருக்குத் தோன்றலாம். ஆனால் அனுபவத் தால் சொல்லுகிறேன்; மேடை மகிழ்ச்சி நமக்குக் கடமை மறதியை உண்டாக்குகிறது. சிறந்த பேச்சு, நல்ல கைத் தட்டு இரண்டும் சேர்ந்தால் உணர்ச்சித் தணிவு, அடுத்த நிலையாகப் பழைய பிற்போக்கு வாழ்வு—இவைதாம் இது வரையிலும் கண்டவை. நம்மை எண்ணித்தான் திருவள்ளு வர் சொன்னாரோ என்னவோ தெரியவில்லை. நமக்காகவே சொன்னதுபோல உள்ளது அந்தக் குறள். நம்மைப்பற்றி நாமே மகிழ்ந்து அந்த மகிழ்ச்சியில் மயங்கி யிருக்கும்போது, கடமையைப் புறக்கணித்துக் கெட்டழிந்தவர்களை நினைத்துக் கொள்ளவேண்டும் என்று வள்ளுவப் பெருந்தகை சொன் னது எவ்வளவு பொருத்தம்! மேடைப் பேச்சைக் கேட்டுக் கைத்தட்டுவோரைக் காணும்போதெல்லாம்,

"இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக"

என்ற அந்தக் குறள் என் நினைவுக்கு வந்துவிடுகிறது, என்னை அறியாமல்.

தம்பி! இன்றைய உலகம் வல்லமை மிகுந்த மாமியார் போல் உள்ளது. நம் அருமைத் தமிழகம் மிக நல்ல மருமகளாக உள்ளது. ஆனால் தற்கொலையோ மன வேதனையோ எதிரே வந்து நிற்காதவாறு காப்பாற்ற வேண்டிய பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது. என் கருத்தில் எந்தப் பகுதியாவது உனக்குத் தெளிவில்லாமல் இருந்தால் அதைக் குறித்து எழுது; தெளிவுபடுத்துவேன். ஏதாவது உனக்கு உடன்பாடு இல்லாமல் கருத்து வேறுபாடாக இருந்தால் எண்ணிப்பார்; அல்லது விட்டுவிடு. நான் என்ன செய்வேன்? நீ எவ்வளவு உண்மையாக உணர்கிறாயோ, அவ்வளவு உண்மையாகவே நானும் உணர்கிறேன். இந்தத் தமிழகத்தில் நாம் இருவராவது ஒன்றுபட முடியாதா, பார்ப்போம்.

உன் அன்புள்ள,

வளவன்.

அதிற் சில பாக்கள் :—

*தேன்பழச் சோலை பயிலுஞ் சிறுகுயி லேயிது கேள்நீ*
*வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை யாட்கொண்ட வள்ளல்*
*ஊன்பழித் துள்ளம் புகுந்தென் னுணர்வது வாய வொருத்தன்*
*மான்பழித் தாண்டமெல் நோக்கி மணாளனை நீவரக் கூவாய்.*

*இன்பந் தருவன் குயிலே யேழுல கும்முழு தாளி*
*அன்ப னமுதளித் தூறும் ஆனந்தன் வான்வந்த தேவன்*
*நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரி மேல்வரு வானைக்*
*கொம்பின் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய்.*

பிறகு, அங்கே எம் எதிரிலிருந்த அவ் வாவியின் நீரைப் பருகியபின், அக் குளத்தில் வெயிலின் ஒளியில் மினுமினுவென்று துள்ளித் துள்ளிப் பிறழ்ந்து ஓடும் கயல் மீன்களை ஒரு வேட்டுவப் பெண் கையாற் பிடிக்க முயல் வதைக் கண்டோம். அவள் எவ்வளவோ முயன்றும், ஒருகால் அவை அவள் கையிலகப்பட்டும், பிறிதொருகால் உடம்பின் வழுவழுப்பினால் அவள் கைகளினின்றும் வழு வியும் ஓடின.

இக் காட்சிகளை நோக்கியபின் கீழேயுள்ள காளத்தி இறைவர்கோயிலை அடுத்துள்ள ஒரு மலைமுகட்டை அடைந்தபோது, அங்கே பரந்த ஒரு மேட்டு நிலத்தின் மேல், மிகப் பழைய காலத்தே, அஃதாவது இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னரே, கட்டப்பட்ட ஒரு சிறு கோயிலும், அக் கோயிலில் இறைவன் ஒளி வடிவினது அடையாள மாக வைக்கப்பட்ட அருட்குறி (சிவலிங்கம்)யும் இருக்கக் கண்டோம். அவ் அருட்குறியைத் திருமுழுக் (அபிஷேகம்) காட்ட குருக்கள் அக் கோயிலுக்கு வருவதில்லை என்பதைப் பின்னர் அறிந்தோம். இதனை முன்னமே அறிந்திருந்தால், முன் குறித்த குளத்தினின்றும் பூவும் நீரும் கொண்டுவந்து, அருட்குறிக்குத் திருமுழுக்காட்டிப் பூவும் சூட்டியிருக்கலாமே என்று நினைந்து வருந்தினோம்.

அவ் வழகிய சிறு கோயில் ஒரு பெரிய ஆலமரத் தின்கீழ் அமைந்ததாகும். அக் கோயிலிலுள்ள அன்பி னாற் குழைந்து குழைந்து உருகி வழிபட்ட கண்ணப்ப நாயனாரது மிகப் பழைய திருவுருவம் அமைந்த மற்

றொரு சிறுகோயிலும் அதனருகே யிருந்தது. மக்களின் சேர்க்கையும், அவரது தீச்செயலும் அணுகப்பெருது, தனித்து உயர்ந்த ஒரு மலையுச்சியில் இறைவனது அடையாளத்தையும், அவனை உண்மையன்பால் வழிபட்ட அடியவர் உருவத்தையுங் காண்பது, சொல்ல இயலாத ஓர் அன்பினையும் உருக்கத்தினையும் எம் உள்ளத்தே தோற்றுவித்தது. உயர்ந்தோங்கும் இத்தகைய தனியிடமே கடவுள் உவந்திருந்தற்கு ஏற்றதென்பது எமக்குப் புலனாயிற்று. இறைவனை வணங்கத்தக்க தனியிடத்தைக் கண்டதும் நெஞ்சங் குளிர்ந்து ஆறுதல் பெற்று அவனை வணங்கிப் பாடி வழுத்தினோம். அந் நேரத்தில் யாங்கள் வானுலகத்தில் கடவுளோடு இருப்பதாகவே எண்ணப்பெற்றோம். இவ்வாறு உலக நினைவினின்றும் சிறிது விடுபட்டிருந்தோமாயினும், பின் சிறிது நேரத்திற்கெல்லாம் மறுபடியும் எப்படியோ பையப்பைய உலக நினைவு வரப்பெற்றோமாய்க் கடவுளையும் கண்ணப்பரையும் வணங்கிப் பிரிந்து பின் கீழ்நோக்கி இறங்கினோம்.

இவ்வாறு நாங்கள் இறங்கி வரும்போது, அங்கங்கே சிறிதுநேரம் நின்று நின்று, அம்மலையின்கீழ்த் தோன்றும் அரிய காட்சியின் அழகை வியந்து உரையாடினோம்! கீழ் உள்ள பெரிய சிவபிரான் கோயிலானது ஓரழகிய ஆற்றங் கரையின்மீது அமர்ந்து, மேலிருந்து காணும் எமக்குச் சிறிய அளவினதாய்த் தோன்றியது. ஓர் ஊரை உண்டாக்குவதற்கு முன் ஓவியக்காரன் அப் பெரிய ஊரினளவை ஒரு சிறிய கடிதத்தில் வரைந்து காட்டினுல், அத் தோற்றமானது எவ்வளவு சிறிதாக நம் கட்புலனுக்குக் காணப்படுமோ அதைப்போலவே அப் பெரிய ஊரும் சிவபெருமான் கோயிலும் சிறுத்து விளங்கின. ஆங்காங்கு அவ் வூருக்குப் புறம்பே பயிரிடப்பட்டிருக்கும் பச்சைப் பசேலென்ற வயல்நிலங்கள் பச்சைப் பட்டாடை விரித்தாற் போல் பகலவன் கதிரொளியால் மினுமினுப்புடன் விளங்கின. பின்னும், அவ்வூரின் கோயிலுக்கு அருகே கதிரவன் ஒளிவிட்டுத் திகழும் பொன்முகலியாற்றின் தோற்றமானது ஒரு வெள்ளிக் கம்பிபோல் காணப்படுவதாயிற்று. இன்னும்,

அவ்வாற்றின் இடை இடையே நீரைத் தடுத்து மடைகளின் வழியே வயல்கட்கு நீர்பாய்ச்சும் மள்ளர்களும், மற்றொரு பக்கத்தே அறுப்பறுத்த நிலங்களில் மேயும் ஆடுமாடுகளும் சிறு சிறு பாவைகள்போல் தோன்றுவ ஆயின.

இங்ஙனமெல்லாம் இறைவன் அருமையாகப் படைத்த இயற்கைத் தோற்றங்களைப் பார்த்துக்கொண்டே கீழிறங்கி மலையினடிவாரத்திற்கு வந்து சேர்ந்தோம். அம் மலையடிவாரத்தின் பக்கத்தே வேட்டுவர் குடிசைகள் பற்பல இருந்தன. யாங்கள் மலையினின்றும் வந்து களைப்புத் தீரும் பொருட்டு அங்கிருந்த ஒரு மரத்தடியிற் றங்கினேம். அப்போது அங்கிருந்த குடிசைகள் ஒன்றிலிருந்து ஆண்மயிலொன்று வெளிவந்து தன் அழகிய தோகையை விரித்து ஆடியது. ஆ! அத் தோகையின் நீலமும் பச்சையும் கலந்த கண்கள் வெயிலொளியில் மினுமினு வென்று மிளிர்ந்தன. யான் பிறந்து அதுகாறும் காணாத அப் புதுமையை இன்னும் நினைவுகூர்ந்து மகிழ்கின்றேன். பின் அடுத்த நாள் விடியற்காலையிலே மலையடிவாரத்திலிருக்கும் பழைய காளத்தியப்பர் கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கி அக் கோயிலின் கருங்கற் சுவர்களிலுள்ள நுண்ணிய வேலைப்பாடுகளைக் கண்டு வியப்புற்றோம். பின் சத்திரத்திற்கு வந்து உணவு சமைத்து உண்ட பிறகு என் பெற்றோர் இளைப்பாற மேல்மெத்தைக்குச் சென்றனர்.

யான் உறங்குவதற்கு விருப்பமில்லாமல் அச் சத்திரத்தின் பின்புறத்திற் சென்றேன். அங்கேயிருந்த ஒரு பெரிய அரசமரத்தின்மேல் பத்துப் பதினைந்து குரங்குகள் மரக்கிளைகளில் தாவித்தாவி விளையாடிக்கொண்டிருந்தன. இவ் விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, அக் குரங்குகள் பரபரப்போடு கீழிறங்கி, எனக்குப் பத்தடித் தொலைவில் நின்று கொண்டு, கைகளை நீட்டி உணவுப் பண்டங்கள் கேட்டன. உடனே யான் விரைந்து ஓடி ஓர் ஏனத்தில் சோற்றுடன் திரும்பினேன். யான் கொண்டுவந்ததனை அக் குரங்குகளினருகே சென்று கொடுக்க அஞ்சிச் சோற்றைக் காட்டிக் கூப்பிட்டேன். உடனே அக் குரங்குகளிற் சில அச்சமின்றிக்

கிட்டே வந்து கை நீட்டின. ஆனால், யான் உணவை அவைகளின் கைகளில் தருவதற்கஞ்சிக் கீழே வைத்து அப் புறம் வந்துவிட்டேன். அவை அவ் வுணவை உண்டபின் மரங்களில் ஏறின. யான் உணவு தருதலைப் பார்த்துக்கொண் டிருந்த தாய்க் குரங்குகளிற் சில, தம் குட்டிகளோடு என் எதிரே ஓடிவந்து தம் கைகளை நீட்டி இரங்கிய முகத்தோடு என் முகத்தை உற்றுநோக்கி உணவு கேட்டன. யான், அதன் பின் அச்சம் தெளிந்து அவைகளின் பக்கத்தே போய், அவைகளின் கைகளில் சோற்றை அள்ளி வைத்தேன். அத் தாய்க் குரங்குகள், தாம் முதலில் அச்சோற்றை உண் ணாமல் தத்தம் வயிற்றடியில் பற்றிக்கொண்டிருக்கின்ற தத்தம் இளங்குழவிகட்குத் தந்து பிறகு உண்டன.

இவ்வாறு மேற்கூறிய அழகிய தோற்றங்களைக் கண்டு களிப்போடு அன்றிரவும் அச் சத்திரத்திலே தங்கி, விடியற் காலையிலே காளத்திப் புகைவண்டித் தங்குநிலைக்குப் போய்ப் புகை வண்டி ஏறி வீடுவந்து சேர்ந்தோம்.

## ரு. ஆறுமுக நாவலர்

[திரு. சு. அ. இராமசாமிப் புலவர்]

ஆறுமுக நாவலர் இற்றைக்கு நூற்றிருபது யாண்டு கட்கு முன்னர் யாழ்ப்பாணத்திலேயுள்ள நல்லூரில் தோன் றினர். நாவலரின் தந்தையார் பெயர் கந்தப்ப பிள்ளை. தாயார் சிவகாமி அம்மையார். நாவலர் தம் இளமைக் காலத்தில் தானே கல்வி கற்பதில் சிறந்த முயற்சியுடையவ ராகவிருந்தார். நிகண்டு, அந்தாதி முதலிய பல நூல்களை யும் தம்முடைய பன்னிரண்டு வயதிற்குள்ளேயே அனைவரும் வியக்கும் வண்ணம் கற்றறிந்தார்.

நாவலருடைய தந்தையார் ஒரு நாடக நூலை இயற்றிக் கொண்டிருந்தபோது, கையில் எழுத்தாணியும் ஓலையும் பிடித்தபடியே திடீரென்று விண்ணுலக வாழ்வை யெய் தினர். அந்நாடகத்தின் பிற்பகுதியை அக்காலத்திலேயே நாவலர் தொடர்ந்து இயற்றி முடித்தார். அப்போது நாவல ருக்கு வயது ஒன்பது. அவ்வியத்தகு செயல் நாவலரின் தமையனர் இருவருக்கும் மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக் கியது. அவர்கள் நாவலர் மேன்மேலும் கல்விப் பயிற்சியை நன்கு பெறுதற்கான உதவியை உள்ளமுவந்து புரிந் தார்கள். நாவலர் தமிழ்மொழியையே அன்றி ஆங்கில மொழியையும் நன்கு கற்றுத் தமிழில் உள்ளதை ஆங்கிலத் திலும் ஆங்கிலத்திலுள்ளதைத் தமிழிலும் மொழிபெயர்க்கும் ஆற்றலையும் அடைந்தார்.

அக்காலத்தில் பார்சிவல் பாதிரி என்னும் பெரியார் தமிழ்மொழியுங் கற்று யாழ்ப்பாணத்திலே தமது கிறித்தவ சமயத்தைப் பரப்புந் தொழிலிலே ஈடுபட்டிருந்தார். அவர் ஆறுமுக நாவலரின் இருமொழியாற்றலையும் நன்குணர்ந்து தமிழ்மொழியில் தமக்கு வேண்டிய உதவிபுரிவதற்காகத் தம்முடைய தமிழ்ப்பண்டிதராக ஏற்படுத்திக்கொண்டார். பாதிரியாரிடம் அலுவல் பார்ப்பதற்கு ஒப்புக்கொள்ளு முன்னரே, நாவலர் தாம் எப்போதும் சிவமணி திருநீறு

முதலிய சமயக்குறிகளுடன்தான் வரமுடியுமென்றும், அக் குறிகளைப்பற்றி அவர் யாருந் தடைசெய்யக் கூடாது என்றும், அவர் சைவசமய நிந்தனை புரிவதுபோல் தாம் கிறித்தவ சமய நிந்தனை புரியவேண்டியதாக வரும்போது, அவ்வாறு செய்வதுபற்றி வருத்தப்படக்கூடாது என்றும் திட்டஞ் செய்துகொண்டார். நாவலரை விட்டால் நல்ல தமிழறிவாளர் கிடைப்பதருமை யென்பதை யுணர்ந்த பாதிரி யாரும், நாவலருடைய விருப்பப்படி செய்யலாம் என்று ஒப்புக்கொண்டார்.

பார்சிவல் பாதிரியார் நாவலரைக்கொண்டு தஞ்சமய நூலாகிய பைபிளைத் தமிழில் மொழிபெயர்க்கச் செய்தார். நாவலரும் அரிய செந்தமிழ் நடையில் மொழிபெயர்த்தார். மொழிபெயர்க்குங்கால் தாம் செய்யும் அவ்வேலையால் தமது சைவசமய வளர்ச்சியானது குன்றுவதற்கு இடமாவதையும், புறச்சமய வளர்ச்சியானது மிகுதிப்படுவதற்குத் துணையா வதையும் நன்குணர்ந்தார். சைவமுந் தமிழுந் தழைத்தினி தோங்கத் தம்முடல் உள்ளளவரையிலும் உழைக்க வேண்டு மென்று உறுதி செய்துகொண்டார். ஒழிவு நேரங்களில் சைவசமய நூல்கள் பலவற்றையுங் கற்றறிந்ததுடன் வட மொழிநூல்களையும் மிக விரைவாகவும் எளிதாகவும் கற்றுக் கொண்டார். நாவலர் பைபிளை மொழிபெயர்த்துக்கொண் டிருக்கும்போது சென்னையிலுள்ள கிறித்தவ சங்கத்தார்கள், தாங்களும் ஒரு மொழிபெயர்ப்பை எழுதிக்கொண்டிருந் தார்கள். பார்சிவல் பாதிரியார் தாம் மொழிபெயர்க்கச் செய்த பைபிளை எடுத்துக்கொண்டு ஆறுமுக நாவலரையும் உடனழைத்துக்கொண்டு சென்னைக்கு வந்தார். தமது மொழிபெயர்ப்பைச் சென்னைச் சங்கத்தாருக்குக் காட்டினர். சென்னைச் சங்கத்தார் யாழ்ப்பாண மொழிபெயர்ப்பு மிக நன்றாக இருப்பதைப் பார்த்துப் பெரிதும் அழுக்காறு கொண்டார்கள். தங்கள் மொழிபெயர்ப்பு வீணாகிவிடுமே என்னும் ஏக்கம் அவர்களை வாட்டியது. ஆகவே, அவர்கள் யாழ்ப்பாணத்து மொழிபெயர்ப்பின்மீது பல குறைகளைக் கூறி, அது பதிப்பித்தற்கு ஏற்றதன்று என்றனர். அப்

பொழுது சென்னையிற் பெரும்புலவராக விளங்கியிருந்த மகாலிங்க ஐயர் என்பவரிடம் இருமொழிபெயர்ப்புக்களும் காட்டப்பெற்றன. நாவலர் மொழிபெயர்ப்பைக் கண்ட ஐயர் மிக வியப்படைந்தார். "யாழ்ப்பாணத்தில் இத்தகைய செந்தமிழும் உண்டோ?" என்று போற்றினர். ஆகவே, நாவலர் மொழிபெயர்த்த பைபிலே பதிப்பிக்கப்பெற்றது.

நாளடைவில் நாவலருக்குத் தமது சமய வளர்ச்சியிலேயே கருத்து மிகுதியாகச் சென்றது. இலக்கண இலக்கியங்களையும், சமய நூல்களையும், காலையிலும் மாலையிலும், மற்றும் ஓய்வு கிடைத்த நேரங்களிலும் மாணவர் பலருக்கும் கற்பிக்கலானார். நாவலரிடம் தமிழ்வளர்ச்சி நோக்கமும், சமயவளர்ச்சி நோக்கமுமே பெரிதும் இடம்பெற்றிருந்தபடியால் அவர் மாணவர்களிடம் ஊதியம் சிறிதும் நாடினார் அல்லர்.

நாவலரிடம் கல்வி கற்றுத் தேறியவர் சதாசிவப் பிள்ளை, சாமிநாத ஐயர், செந்திநாத ஐயர், ஆறுமுகப் பிள்ளை, ஆறுமுகச் செட்டியார், கந்தசாமிப் பிள்ளை, பொன்னம்பலப் பிள்ளை முதலிய பலராவர். இவர்களிற் பலர், நாவலர் நற்செயல்களுக்கு உறுதுணையாய் உடன் நின்று உழைத்தனர். பின்னர் இவர்கள் தங்கள் ஆசிரியரைப்போலப் பிறர்க்குப் பேருதவி புரியும் பேற்றையும் பெற்றார்கள்.

நாவலர் பெரியபுராணத்திடத்தும் நாயன்மார்களிடத்தும் அளவிலாப் பற்றுக்கொண்டவர். அதனைக் கண்ட நாவலரின் உடன்பிறந்தார் ஒருவர் நாவலரின் பெரியபுராண அன்பின் எல்லையை அறியவிரும்பினார். அதனால் அவர் மற்றொரு நண்பரிடத்தில் சென்று, "தொண்டர் புராணக் கதைகளெல்லாம் அண்டப்புளுகு, கற்பாருக்கு இறையன்பு நிறையக் கூறிய கற்பனை; அவைகள் உண்மையென்று எண்ணவேண்டா," என்று விளையாட்டாகக் கூறினார். அச்செய்தி அவ்வன்பரின் மூலமாக நாவலர் செவிக்கு எட்டியது. நாவலருக்குத் தமையனார்மீது நவிலற்கரிய சினம் உண்டாகியது. கையிற் பெரிய கத்தியொன்றை எடுத்துக்கொண்டு தமையனார் வீட்டை நோக்கிச்சென்றார்.

இளவல் சினத்துடன் வருதலைக் கண்ட தலைமையனார் நகைத்துக்கொண்டே இல்லத்தினுட் சென்றுவிட்டார். அங்கேயிருந்தவர்கள் நாவலருக்கு உண்மையை எடுத்துக்கூறி, அவர் சினத்தைத் தணித்து அனுப்பினார்.

தம்மிடங் கற்கும் மாணவர்கட்குப் பொருள்களை விளக்கும் ஆற்றல் நாவலரிடம் வியக்கத்தக்க முறையில் அமைந்திருந்தது. அவரிடம் சொற்பொழிவு ஆற்றும் திறமையும் வாய்ந்திருந்தது. சைவசமய வளர்ச்சியின் பொருட்டுக் கோயில்களிலும், பொது இடங்களிலும், நல்ல நாட்களிலும், திருவிழாக் காலங்களிலும் சமயச் சொற்பொழிவுகள் பல செய்தார். தம்முடைய மாணவர்களையும் நண்பர்களையுங் கொண்டு பல சொற்பொழிவுகள் செய்வித்தார். நாவலருக்கு முன்னர்ச் சொற்பொழிவாற்றும் பழக்கம் நமது தமிழ் நாட்டில் மிகுதியாக இல்லை. நாவலர் காலத்தில்தான் சொற்பொழிவு வளர்ச்சிபெறத் தொடங்கியது. அவருடைய சொற்பொழிவைக் கேட்டவர்கள் கேட்ட அளவோடு தங்கள் கடமை தீர்ந்துவிட்டது என்று நின்றுவிடாமல், நடைமுறையிலும் கடைப்பிடிக்கத் தொடங்கினார்கள். புலாலுண்ட பலர் அதனை நிறுத்தித் தூயரானார்கள். சிவபூசனை புரியாத பலர் புரியத்தொடங்கினார்கள் நாவலரின் சொற்பொழிவு நல்ல பயனை நல்கியது. நாளடைவில் இந்தியாவிற்கும் வந்து பல விடங்களிலே சைவசமய வளர்ச்சிக்கான சொற்பொழிவுகள் பல செய்தார். ஒருமுறை சென்னைப்பட்டினஞ் சென்று திரும்பினார். நாவலருடைய சொற்பொழிவுத் திறனையும், அறிவாற்றலையும் பலர் மூலமாகக் கேள்விப்பட்டிருந்த திருவாவடுதுறை யாதீனத்துப் பண்டார சந்நிதிகள், அவரைத் தங்கள் ஆதீனத்திற்கு அழைத்துச் சிறப்புக்கள் பல செய்து போற்றினார்கள்.

நாவலர் உரைநடை நூல்கள் இயற்றுவதில் வல்லமையுடையவர். வேண்டும்போது செய்யுட்களையும் எளிதில் இயற்றுவார். சமயகுரவர்களுடைய அரிய திருவருட்பாக்கள் இறைவனைத் தொழுது போற்றுதற்கிருக்கும் போது, நாம் வேறு செய்யுள் ஏன் செய்யவேண்டும் என்னும் எண்ணத்துடனேயே நாவலர் புதுப்பாடல் இயற்றும்

முயற்சியில் இறங்கவில்லை. ஓரவையில் ஒரு சமயம் சொற்பொழிவு செய்யத்தொடங்கினார் நாவலர். அப்பொழுது அங்கு நின்ற தம்முடைய மாணவர் ஒருவரைப் பார்த்து, "கடவுள் வணக்கச் செய்யுள் ஒன்று பாடுக," என்றார். அம் மாணவரோ, "தாங்களே முதலிற் பாடுங்கள்; அதுதான் நல்லது," என்றார். உடனே நாவலர், 'சீர்பூத்த' என்று தொடங்கும் செய்யுளைப் புதிதாக மிகு விரைவில் பாடினார். இப்பாடல் அப்பொழுதுதான் பாடப்பெற்ற புதுப்பாடல் என்பதை யறிந்த பலர், மிகுந்த வியப்படைந்தார்கள். இவ்வாறு நாவலர் பாடிய பாடல்கள் இன்னும் பலவுள்ளன. செய்யுள் இயற்றுவதிலும், உரைநடை நூல்கள் எழுதுவதிலும், உரைகள் எழுதுவதிலும், சொற்பொழிவுகள் செய்வதிலும், மாணவர்க்குப் பொருளை விளக்குவதிலும் நற்றிறம் படைத்தவர், நாவலரைப்போல் அக்காலத்திலும் இல்லை; இக்காலத்திலும் இல்லை. பொருளின்பொருட்டு நாவலர் யாரையும் புகழ்ந்து பாடியதில்லை. பொருளின்பொருட்டு ஒருவரை ஒரு பொருட்படுத்தி நயந்து நாடியதுமில்லை. தம் அருமை பெருமையை அறிந்து போற்றினரிடத்து மட்டுமே சிறிது பற்றுக்கொண்டிருந்தார். இறுதிக்காலம்வரை இல்லற வாழ்க்கையில் புகாத இவர், தமது ஒழுக்கத்தைப் பாதுகாத்துக்கொண்டு சமயவளர்ச்சியிலும் தமிழ்வளர்ச்சியிலுமே தமது வாணாளைச் செலவிட்டார்.

ஒருமுறை சிலர் நாவலரிடத்திற் பேசிக்கொண்டிருக்கும்போது அவரைப் பார்த்து, "தாங்கள் நூல்களில் எழுதுவதைப் போன்றும், சொற்பொழிவுகளில் சொல்வதைப் போன்றும் நடைமுறையில் நடந்து காட்டியும் வருகின்றீர்களா?" என்று கேட்டனர். அடக்கத்திற்கே இடம்போல் அமைந்த ஆறுமுகனார் உடனே, "ஆம்" என்று பதில் கூறிவிடவில்லை. "கைகாட்டி மரம் இன்ன இன்ன ஊருக்குச் செல்லும் வழி இஃது இஃது என்று கையால் காட்டிக்கொண்டு நிற்கின்றதே தவிரத் தான் அவ்வழியில் என்றேனும் செல்கின்றதா? இல்லை யன்றோ? நானும் அக் கைகாட்டி மரத்தைப்போன்றவன்தான்," என்று விடையிறுத்தார். அதனைக்கேட்ட அவர்கள், "எல்லா அறங்களை

யும் நடைமுறையில் செய்து காட்டும் இப் பெரியாரே இவ்வாறு கூறுகின்றாரே,'' என்று பெரிதும் வியப்பு அடைந்

நாவலரவர்கட்கு நூல்கள் அச்சிட ஓர் அச்சகம் இன்றியமையாததாகவிருந்தது. அதன் பொருட்டு அவர் சென்னைப் பட்டினத்தையடைந்து ஒரு பதிப்புப்பொறியை விலைக்கு வாங்கி "வித்தியாநுபாலன அச்சியந்திரசாலை" என்று பெயர் இட்டு வண்ணார் பண்ணையிலே அமைத்தார்; மாணவர்களின் பொருட்டுப் பால பாடங்களை நல்லமுறையில் புதிதாக எழுதிப் பதிப்பித்தார்; ஆத்திசூடி, கொன்றை வேந்தன் முதலிய அறநூல்களுக்கு உரையெழுதிப் பதிப்பித்தார்; சிவாலயதரிசனவிதி, கொலை மறுத்தல் உரை முதலியவற்றையும் அந்த அச்சகத்திலே பதிப்பித்தார்; திருச்செந்தில் நிரோட்டக யமக வந்தாதி உரை, திருமுருகாற்றுப்படை உரை ஆகியவைகளையும் எழுதிப் பதிப்பித்தார். பெரியபுராணத்தை உரைநடையாக எழுதி வெளியிட்டதுடன் நன்னூல் விருத்தியுரையும் பதிப்பித்து வெளியிட்டார்.

நாளடைவில் முற்கூறிய அச்சுப்பொறி போதாமையால், அதனை விற்றுவிட்டுச் சென்னைப் பட்டினத்திற்குத் திரும்பவும்வந்து, புதிய பெரிய ஓர் அச்சுப்பொறியை விலைக்கு வாங்கினார். அதற்கு முற்கூறிய வித்தியாநுபாலன அச்சியந்திரசாலை என்ற பெயர் இட்டார். அதில் திருக்குறள் பரிமேலழகர் உரை, திருக்கோவையார் உரை, தருக்கசங்கிரகவுரை, சேதுபுராணம், தொல்காப்பியச் சேனாவரையர் உரை முதலியன திருத்தமாகப் பதிப்பிக்கப்பெற்றன.

ஒருநாள் திருவாவடுதுறை மடத்தின் தலைவர் கட்டளைக்கு இணங்கி இவர் ஓர் அரிய சைவசமயச் சொற்பொழிவை மிகச்சிறந்த முறையில் நிகழ்த்தினார். அஃது எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளைகொண்டது. சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல் முதலிய பண்புகளெல்லாம் அச் சொற்பொழிவிலே நிறைந்திருந்தன. அதனைக்கேட்ட பண்டாரசந்நிதிகளும் கூடியிருந்த புலவர்

களும், "நாவலர்" என்னும் சிறப்புப் பெயரை அளித்துப் பாராட்டினர். அதுமுதல் அவர் எல்லோராலும் நாவலரென்று போற்றப்பட்டார்.

சொற்பொழிவுகள் செய்யத்தொடங்கினுல் எவ்வளவு நேரமாயினும் சலியாமல் நின்றபடியே செய்வார். இவருடைய சொற்பொழிவுகள் கேட்டார்ப்பிணிக்குந் தகையவாய் இருந்தமையான், அவையினரும் சொற்பொழிவு முடியும் வரை அகலாதிருந்து கேட்பார்கள். பலவிடங்களிலும் இவருடைய சொற்பொழிவைக்கேட்ட பெருமக்கள் பெரிதும் மகிழ்ந்து பரிசுகள் பல நல்கிப் பாராட்டினர்.

நாளடைவில் நாவலருக்குச் சமயப்பற்றும் மொழிப் பற்றும் மிகுந்தன. முதலில் யாழ்ப்பாணம் வண்ணர் பண்ணையிலே சைவப்பிரகாச வித்தியாசாலை என்னும் பெயருடைய ஒரு பள்ளியை ஏற்படுத்தினுர். பின்னர்ச் சிதம்பரத்தில் சைவப்பிரகாச வித்தியாசாலை ஒன்று ஏற்படுத்தினுர். சைவமடம் ஒன்று ஏற்படுத்த முயற்சிசெய்தார், அம் முயற்சி கைகூடவில்லை. நாவலர் அவர்கள் இன்னும் பல ஊர்களில் வித்தியாசாலைகள் ஏற்படுத்துவதற்காகமுயற்சிகள் பல செய்தார். அவைகளெல்லாம் நிறைவேறவில்லை.

நாவலர் செய்த உரைகள் : கோயிற்புராணவுரை, சைவசமய நெறியுரை, திருச்செந்தில் அந்தாதியுரை, திருமுருகாற்றுப்படையுரை, நன்னூற்காண்டிகையுரை, சிவதருமோத்தரவுரை, மருதூரந்தாதியுரை முதலியன. புதிதாகச் செய்த நூல்கள் : பாலபாடங்கள், இலக்கண வினுவிடை, சைவவினுவிடை, இலக்கணச் சுருக்கம், திருவிளையாடற் புராண வசனம், பெரியபுராண வசனம் முதலியன.

நாவலர் பல நூல்களைப் பிழையற ஆராய்ந்து பதிப்பித்திருக்கிருர். எழுத்துப்பிழைகளோ, பொருட்பிழைகளோ தாம் பதிப்பிக்கும் நூல்களில் ஏற்படக்கூடாது என்பது அவருடைய பெருவிருப்பம். அதன் பொருட்டு மிகமுயன்று நூல்களைப் பதிப்பித்திருக்கிருர். தக்க ஆதாரங்கண்டால் அன்றி எதனையும் தம் உள்ளம் போனவாறு திருத்திப் பதிப்பிக்கும் வழக்கம் நாவலரிடம் இல்லை. இவர் பதிப்பித்த

நூல்கள் ஓர் எழுத்துப் பிழைகூட இன்றி, மிகச் செம்மை யாக வெளிவந்தன.

தமிழ் வளர்ச்சியின் பொருட்டும் சைவசமய வளர்ச்சி யின் பொருட்டும் நாவலர் போட்ட திட்டங்கள் பல இன்றும் நிறைவேருதிருப்பினும் அவைகள் எதிர்காலத்திலேனும் நிறைவேறுதல் கூடும். வாணுள்வரை சமயத்திற்கும் மொழிக்குமே தம் உடல் பொருள் உயிர் ஆகியவைகளைப் பயன்படுத்திய நாவலர், இறுதிவரை தம் நோக்கத்திலேயே கண்ணும் கருத்துமாயிருந்தார். யாழ்ப்பாணம் வண்ணூர் பண்ணையில் தமது இல்லத்தில் பூதவுடலை நீத்துப் புகழுடலை யெய்தினர்.

## கூ. முரசு கட்டில்

[திரு. புலவர் அரசு]

இடம்: *சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் அரண்மனையில் முரசு கட்டில் மண்டபம்.*

காலம்: *நடுப் பகல்.*

[*வெற்றி முரசு வைக்கும் பீடத்திலே பல நிற மான மலர்களைப் பரப்பியிருக்கிறார்கள். மோசுகீரனார் என்னும் புலவர் ஒருபுற மிருந்து வருகிறார்.*]

மோசுகீரனார்: (*தமக்குத் தாமே*) அரசருடன் இன்று அறு சுவை யுண்டி யுண்டேன். இத்தகைய உணவை என்றும் உண்டறியேன்... ....உணவு இனியதா; அன்பு இனியதா என உரைக்க முடியவில்லை. அன்பின் வடிவமான அரசர், வறுமை வடிவமான என்னையும் கூடவைத்து உண்டார். செல்வமும் வறுமையும் ஒன்றாக அமர்ந்து உண்டன. (*வியப்புடன்*) காணாததைக் கண்டேன். என்னையும் நண்பனாக ஏற்றார் செல்வர். வறியரை நண்பராகச் சேர்ப்பதை இதுவரை கேட்டறி யேன். செல்வத் திருமகள் பித்தளை நகை அணிந்தாள். பொன்மாலையிலே கல்லைக் கோத்தாயிற்று. (*மண்டபத் தைச் சுற்றிப் பார்க்கிறார்.*) எல்லாம் செல்வத் தோற்றம். இம்மண்டபத்திலே நிற்கவும் இயலாதவன் நான்........ கண்ணைப் பறிக்குங் காட்சி. வெண்ணிலவாற் சமைத் தனரோ! வெளியிலே கதிரவன் வெம்மை சுடுகிறது. இம்மண்டபத்தினுள்ளே திங்களின் குளிர்ச்சி சேர்ந் திருக்கிறது. (*முரசு கட்டிலின் அருகே வருகிறார். உற்றுப் பார்க்கிறார்*) இக் கட்டில் யாருடையதோ?........இக்கட் டில் அகப்பட்டேனே....(*புன்முறுவலுடன்*) இவ்வளவு பெரிய மண்டபம் படுக்கையறையாகுமா?........எண் ணெய் நுரையை வாரியிட்டதுபோல் எவ்வளவு மென்மையான மலர்களைப் பரப்பி யிருக்கிறார்கள்! (*கையால் தொட்டுப் பார்க்கிறார்.*) இக் கட்டிலிற் படுத்

வெனும் பெருங் காட்டுத்தீ. [illegible]ரு வழியிலும் மாறி மாறிச் செல்வதெப்படி ?

இரண் : என்ன செய்யலாம்? காவல் வேலை கடியதுதான்! வயிற்றப்பனுக்கு வழி கூறுவதெப்படி ?

முதல் : (வருத்தத்துடன்) ஆமாம் அண்ணே! நேற்று இங்கே காவலில் இருக்கும்போது உட்கார்ந்தபடியே தூங்கிவிட்டேன். ஒரு கனவு கண்டேன். அதுமுதல் வருத்தமாக இருக்கிறது.

இரண் : என்ன கனவு? எதுவாயிருந்தாலும் பகற்கனவு பலிக்குமா என்ன ?

முதல் : கனவைத் தெரிந்துகொண்டு பேசு. நானும் அவளுமாக வானத்திலே மிதந்து சென்றோம். எப்படியென்று தெரியவில்லை. அது ஒரு கடல்போல இருந்தது. இன்பக் கடலென்றுதான் சொல்லவேண்டும். ஓர் ஓடத்தில் செல்வதுபோல் நினைவு! மிக மகிழ்ச்சியுடன் உலாவினோம். எனினும், எங்கிருந்தோ திடீரென்று ஒரு சுறு மீன் வாயைத் திறந்துகொண்டு கொடிய தோற்றத்துடன் வந்தது! அலறி மூர்ச்சையானேன். அவ்வளவுதான்! விழித்துக்கொண்டேன். என்னைப் பிடித்து ஆட்டி, 'என்னடா அலறுகிறாய்,' என்றாய் நீ! இது ஒரு கெட்ட கனவுதானே ?

இரண் : (நகைத்து) நினைவுதானப்பா கனவாயிற்று! அங்கே நனவிலே இன்பம். இங்கே கனவில் இன்பம்! என்ன வானாலும் இளமையானது இன்பமுடையதுதான்.

முதல் : அந்தச் சுறுமீன் என்ன அண்ணே? அதுவும் நினைவுதானா ?

இ[illegible] டமப்பா! ஆமாம்; அதுதான் அடிமை வாழ்விலே உண்டாகும் அச்சம்! எங்கே தவறிவிடுவோமோ என்ற ஏக்கம்! (கட்டிலின் பக்கம் நோக்குகிறான்) அது என்ன அங்கே? (இருவரும் கட்டிலின் பக்கம் ஏகுதல்) யாரோ தூங்குகிறானே! இந்தத் துன்பத்திற்கு என்ன செய்வோம் ?

முதல் : கொலைத் தண்டனை குறுகியது இவனுக்கு! எழுப்புவோமா ?

இரண் : கூடாது ! அரசரிடங் கூறுவதுதான் சரி.

முதல் : (நடுக்கத்துடன்) ஏன் படுக்கவிட்டீர்களென்றால் ?

இரண் : அஞ்சாதே ! அரசர் கட்டளையின்படியே சென்றோம். ஆகையால், ஒன்றும் செய்யமாட்டார். ஆனால், நாம் இவனை எழுப்புவதுதான் அரசராணையை மீறுவதாகும்.

முதல் : ஆனால், அப்படியே கூறுவோம். (படுத்திருப்பவரைப் பார்த்து) எங்காவது தெருப்புழுதியிலே தேடுவாரற்றுத் தூங்கவேண்டியவன் மலரணையிலே மதிப்போடு தூங்குகிறான் ! வெற்றி முரசு வைத்து வீரர் வழிபடுங் கட்டிலிலே இந்தப் பஞ்சை படுத்துத் தூங்குவதா ?

ரண : (இரக்கத்துடன்) மீளாத்துயிலுக்கு ஆளாவான் விரைவிலே ! அதற்குப் பழகுகிறான் போலும் ! வா, போய்க் கூறுவோம். (இருவரும் செல்கிறார்கள். மண்டபத்தின் மற்றொரு பக்கத்திலே சிறிது கழித்து அரசர் வருகிறார். சினத்தால் துடிக்கிறார். பின்னால், இருவீரர்களும் நடுங்கிக்கொண்டு வருகிறார்கள்.)

அரசர் : வெற்றி முரசை வைத்து மணமலர்களால் அலங்கரித்துப், பீலியணிந்து வணங்குங் கட்டிலிலே சற்றும் அறிவிலாப் பேதை தூங்குவதா ? இதுவரையில் இந்த இழிசெயல் இங்கே எட்டிப் பார்க்கவில்லை. வாளால் இருதுண்டமாக்க வலிய இழுத்து வந்தது ஊழ்வினை ! (கட்டிலை நெருங்குகிறார் ; உற்றுப்பார்க்கிறார் ; சினம் தணிகிறது ; இரக்கம் தோன்றுகிறது.) ஆ ! என்ன செய்ய நினைத்தேன் ! இங்குள்ள வழியறியாப் புலவரிவர் !... எங்கெங் கலைந்தனரோ ? அயர்ந்து தூங்குகிறார்........ இவருக்கு உண்டியளித்த நான் உறங்க இடமும் அமைத்துத் தாராதது ஒரு குறைதானே ? தமிழை வழிபடும் நான், தமிழ்ப் புலவரைப் புறக்கணித்தேன் ! என்ன மடமையிது ! (கட்டிலின் அருகிலிருந்த கவரியை எடுத்துப் புலவருக்கு வீசுகிறார்) மலரின் நறுமணத்தை நுகராமல் அம்மலரையே கசக்கி யெறியக் கருத்துக்

கொண்டேன்! (முதல் வீரனைப் பார்த்து) நீ சென்று முரசு நீராடி வந்தால் வெளி மண்டபத்திலே வைக்கச் சொல். (இரண்டாவது வீரன் கையில் கவரியைக் கொடுத்து) இதமாக வீசு. இவர் விழித்துக் கொண்டவுடன் என்னிடம் கூறு. (செல்கிறார்.)

வீரன் : (வீசிக்கொண்டே) என்ன பேரன்பு தமிழ்ப் புலவரிடம்! (புலவர் விழித்துக்கொள்கிறார்.) நன்றாகத் தூங்குங்கள் ஐயா!

மோசுகீரனார் : (எழுந்து அமர்ந்து) இனி உறக்கம் வாராது. கொஞ்சம் அயர்ச்சியால் படுத்தேன். ஏன் கவரியால் வீசுகிறீர்? வேண்டாம்! (வீசுவதைத் தடுக்கிறார்) எனக்கா இந்த மதிப்பு? நீர் யார்?

வீரன் : நான் இந்தக் கட்டிலைக் காக்கும் வீரரில் ஒருவன்.

மோசு : என்ன? இதைக் காக்கும் வீரரா? காவல் ஏன்?

வீரன் : இதிலே வெற்றிமுரசை வைத்து வணங்குவது வழக்கம்; அது நீராடப் போயிருக்கிறது.

மோசு : எனக்கு அவ் வழக்கந் தெரியாது. தெரியாமலே படுத்துத் தூங்கிவிட்டேன். அது தவறா?

வீரன் : பெரிய தவறுதான். (புலவர் திடுக்கிட்டெழுகிறார்) ஆனால், அரசர் மன்னித்துவிட்டார்.

மோசு : (நடுக்கத்துடன்) தண்டனை யுண்டோ?

வீரன் : அஞ்சாதீர்கள்! அப்படியே அமருங்கள்! வாளால் இரு கூறாக்குவதுதான் தண்டனை!

மோசு : (மிகவும் நடுங்கி) அவ்வளவு கொடிய தவறா? அதையும் அரசர் மன்னித்தாரா?

நடுங்காமல் அமருங்கள். அப்புறம் கூறுகிறேன். (பக்கத்தில் இருந்த பீடத்தில் புலவரை அமர்த்துகிறான்) மன்னித்தது மட்டுமன்று! வலி பொருந்திய தமது தோளால் கவரி கொண்டும் வீசினார். சற்று இருங்கள். அரசரிடம் சென்று வருகிறேன். (செல்கிறான்)

மோசு : ஆ! என்ன தவறு செய்தேன்! நாட்டின் வழக்க மறியாமல் தவறு செய்துவிட்டேனே! (*அரசர் வருகிறார்*)

அரசர் : நன்றாகத் துயின்றீர்களா? (*புலவர் எழுந்து கை குவிக்கிறார்*) வேண்டாம்; அமருங்கள். (*அரசர் மற்றொரு பீடத்தில் அமர்கிறார். புலவரும் அமர்கிறார்.*)

புலவர் : மன்னிக்கவேண்டும். வழக்கம் அறியேன்.

அரசர் : என்ன பிழை செய்தீர்கள் மன்னிக்க?

மோசு : முரசு கட்டிலென்று அறியாமல் படுத்துத் தூங்கி விட்டேன். அதற்குத் தண்டனை வாளால் வீசுவது தானே?

அரசர் : (*வியப்புடன்*) எப்படி அறிந்தீர்கள்?

மோசு : இப்போது, நான் விழித்த பிறகு ஒரு வீரர் கூறினார்.

அரசர் : (*புன்முறுவலுடன்*) அவனுக்குத் தெரியாது: அது பொதுவாகக் குற்றமேயானாலும் விலக்குமுண்டு.

மோசு : விதிக்கு விலக்கிருக்கலாம். அது எனக்கு எப்படித் தகுதியாகும்? இக் கட்டிலிற் படுக்க ஏற்றவனா நான்!

அரசர் : தாங்களே ஏற்றவர்கள்.

மோசு : இல்லை. நான் ஒரு வீரனல்லாததால் வாளால் வெட்டாமல் விட்டிருக்கிறீர்கள்.

அரசர் : (*நகைத்து*) என்ன கூறினீர்கள்? இந்த வெற்றி முரசு தங்களைப் போன்ற தமிழ்ப் புலவர்களின் வாழ்த்தினாலேயே வாழும். மேலும், வெற்றி முரசு எங்கள் புகழை வெளியிடுவதுதானே? அதைவிடத் தாங்களே எங்கள் புகழை வெளியிடுவதிலே சிறப்புடையவர்கள். ஆகவே அதை வழிபடுவதைவிடத் தங்களை வழிபடுவது சிறப்புடையது.

மோசு : (*வியப்புடன்*) என்ன தமிழன்பு! தாங்கள் தமிழ்ப் பற்றுடையவர்களென்பதை என்னை வாளால் வீசாமல் விட்டதாலேயே அறியலாம். மேலும் வறுமையைச் செல்வம் வழிபடுவது போலக் கவரியெடுத்து வீர நெடுந் தோளால் வீசியதை என்னென்பேன்! வ

வுலகிற் புகழ்ப்பயிரை நட்டவர்க்கே யன்றி மேலுலகில் இடமில்லை யென்பதை விளங்க அறிந்திருக்கவேண்டும். வேறு எதைக் காரணமாகக் கூறலாம்?

அரசர்: புலவர் தலைவரே! புகழ்ச்சி வேண்டாம்; தங்களை வாளினால் வீசுவது தமிழையே வீசுவதாகும்! அந்த வாளை எந்த உறையிலே இடுவேன்? தமிழுறை யன்றோ வெற்றி வாளுக்கு இருப்பிடம்? அஃதாவது தமிழாலன்றோ என் வெற்றி வளர்கிறது? காக்கப்படு கிறது? ஆகவே, தங்களை இழிவுபடுத்தி என் வாளைக் கறைப்படுத்தமாட்டேன். தங்களுக்குக் கவரி கொண்டு வீசினால், தமிழன்னைக்கு வீசியது போலாகும். அப் பேற்றையே நான் விரும்பி வீசினேன்; புகழுக்காக அன்று.

மோசு: தங்கள் பெருந்தன்மையை என்னென்பேன்! இந்த வறியன்பால் என்ன பேரருள் காட்டுகிறீர்கள்!

அரசர்: (முகவாட்டத்துடன்) தமிழ்ப்பெருந் தலைவரே! ஒரு வேண்டுகோள்! இனி எப்போதுந் தங்களை வறிய ரென்று சாற்றாதீர்கள். தமிழ்ச் செல்வமில்லையா? தங்களைப் பேணியே நாங்கள் அச் செல்வத்திலே சிறிது பெறுகிறோம்! தமிழ்ப்புலவரை வறியரென்பது தமிழையே வறியது என்பதாய் முடியும். தமிழ்நாடு தமிழுக்கிருப்பிடம். தமிழ்நாட்டின் செல்வமெல்லாம் தமிழின் செல்வமே! ஆகையால், தமிழை வளர்க்குந் தங்களை வறியரென்று கூறுவது தகுமா? எவன் தமிழ்ப்புலவர்களை வறியரென்கிறானோ அவனே என் பகைவன். அவனை என் வாள் இந்தத் தமிழ்நாட்டை விட்டு இருள் உலகத்திற்குப் போகச் செய்யும்! இனியுந் தங்களைத் தாங்கள் வறியரென்னாதீர்கள்! அது என் உள்ளத்தைப் பிளக்கின்றது!

மோசு: அரசே! இதுவரையிற் பட்ட துன்பங்கள் அவ் வாறு கூறும்படி எளியேனை யிழுத்தது! இனிமேற் கூறமாட்டேன். அறிவு பெற்றேன். (ஒருவன் பட் டாடைகளும் பொற்பணிகளுங் கொண்டு வருகிறான்.)

அரசர் : ஐயா! அருள் கூர்ந்து இவற்றை அணிந்துகொள்ளுங்கள். தமிழுக்கே இந்த அணிகலன்களும் ஆடையும். (புலவர் அணிந்து கொள்கிறார். அரசரும் துணைபுரிகிறார்.) இன்றே நன்னாள்!

மோசு : எளியோனுக்கு நன்றியறிதலைத் தெரிவிக்க வாய் எழவில்லை!

அரசர் : அதுதான் என் வேண்டுகோள்! இது என் கடமை. ஆகையால், இதைப் புகழாமல் தமிழை வளர்ப்பது தங்கள் கடமை.

மோசு : தங்கள் ஆணைப்படி நடக்கிறேன்.

# எ. கடலும் கடலையும்

[திரு. க. ப. சந்தோஷம்]

ஆண்டிகளிற் பஞ்சத்து ஆண்டியுமுண்டு, பரம்பரை ஆண்டியுமுண்டு; பொய்யாண்டியுமுண்டு, மெய்யாண்டியுமுண்டு, ஆனால் நானோ நையாண்டி. வயிற்றுப் பிழைப்புக்காக வேஷம் போட்டுக் கையேந்திப் பல்லைக் காட்டுவது என்னுடைய வழக்கமன்று. கைப்பொருளில்லாததினால் இரந்துண்டு பிழைக்கிறவர்களை ஆண்டிகளென்று அழைக்கிறார்கள். மெய்ப்பொருளைத் தேடி அங்குமிங்கும் அலைகின்றவனாகிய யானும் ஓர் ஆண்டிதான். இதன்பொருட்டு நானும் ஓர் ஆண்டியாகத் திரிந்து வருகிறேன். இந்த உண்மையை அறியாத பலர் என்னை ஒரு பிச்சைக்காரனாகவே நினைத்துக் கொள்கிறார்கள். அதனால் எனக்கு ஒரு நஷ்டமுமில்லை.

ஒருநாள் சென்னைக் கடற்கரையில், நாலைந்து பேர் ஒன்றாக உட்கார்ந்து உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவர், "நாளைக்குப் பூனாவிற்குப் போகிறேன்" என்றார். உடனே மற்றொருவர், "பூனாவைப் பற்றிப் பல தடவைகளில் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அஃது எங்கிருக்கிறதென்று எனக்குத் தெரியாது" என்று சொன்னார். இந்தச் சந்தர்ப்பத்தில் நான் அவர்களை அணுகி, "பூனா எங்கே இருக்கிறதென்பதை முதல் வகுப்பில் படிக்கிற சிறு பிள்ளைகளும் அறிவார்கள்; உமக்கு இது தெரியாமல் போனதென்ன?" என்றேன். அவர்களெல்லோரும் சிறிது கோபத்துடன் என்னை உற்று நோக்கினார்கள். சிறிதுநேரம் கழித்து அவர்களிலொருவன், "இவர் ரொம்ப படிச்சவர்போலிருக்கிறது" என்று இகழ்ச்சியுடன் சொன்னான். அப்போது நான், "நான் படிச்சவர் என்பதும், நீங்கள் குட்டிச்சுவர் என்பதும் இப்போது வெளியாகப் போகின்றன" என்றேன். அவர்கள் மிகவும் சினமடைந்து, "இவன் கர்வத்தை என்னவென்று சொல்வது?" என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டனர். அவர்களுடைய

பேச்சை நான் கொஞ்சமும் கவனியாமல், "இந்துஸ்தானியில் சுவர் என்ருல் பன்றி என்று அர்த்தம். குட்டிச் சுவர் என்ருல் பன்றிக்குட்டி என்று பொருள்" என்று கூறினேன். அவர்கள் என்னைப் பார்த்து, "கஷ்டப்பட்டுச் சம்பாரிச்சித் தின்னுகிறவனுனுல் அவனோடு பேசலாம். சம்பாரிச்சித் தின்ன சாமார்த்தியம் இல்லாதவனோடு என்னத்தைச் சொல்லுவது ?" என்று தங்களைத் தாங்களே சமாதானப்படுத்திக் கொண்டார்கள். உடனே நான், "நான் சம்பா அரிசிதான் சாப்பிடுகின்றேன். நீங்கள் என்ன அரிசி சாப்பிடுகிறீர்கள் ?" என்று கேட்டேன். இது என்னடா தொல்லையாய்ப் போச்சுது ! அப்பா நீ ஒழிஞ்சி போ, உனக்கு ஒரு சலாம்" என்று அவர்களிலொருவன் என்னை வேண்டிக்கொண்டான். இந்தவேளையில் நான் சிறிது உள்ளே நகைத்துக்கொண்டு, "அப்பா, சலாம் ; இன்னும் கொஞ்சம் பேசலாம்" என்று சிரித்தேன். அவர்களும் என்னோடு சேர்ந்து சிரித்துவிட்டார்கள். இதற்கு மேல் நான் அவர்களைப் பார்த்து, "நண்பர்களே! உங்களில் ஒருவருக்கும் பூனு எங்கிருக்கிறதென்று தெரியவில்லை. அதைச் சொல்லிவிட்டுப் போகிறேன். உங்களில் யாருக்காவது பானு, பாவன்னு, பீனு சொல்லத் தெரியுமா ?" என்று வினவினேன். அப்போது ஒருவர், "அது கூடவா தெரியாது, பானு, பாவன்னு, பீனு, பீயன்னு, பூனு, பூவன்னு" என்று மேலே சொல்லப் போகும்போது, "போதும் போதும் நிறுத்தும்" என்று தடுத்தேன். அவர் அப்படியே நிறுத்திவிட்டார்.

"பீயன்னுவுக்குப் பக்கத்தில் பூனு இருக்கிறது உங்களுக்குத் தெரியாமல் போனதென்ன!" என்று நான் கேட்டபோது, அவர்களெல்லாம் விழுந்து விழுந்து சிரித்து என்னைத் தங்களருகில் உட்கார்ந்து பேசும்படி கேட்டுக் கொண்டார்கள். இதற்கிடையே ஒருவன், "சுடச் சுடக் காராமணி, ஐயையோ சுடுதே, அப்பப்பா சுடுதே, காராமணி, கடலைப்பட்டாணி" என்று கூவிக்கொண்டு வந்தான். நான் என்முன் இருந்தவர்களைப் பார்த்து, "எனக்குக் கொஞ்சம் கடலை வாங்கிக் கொடுப்பீர்களானுல், சிறிது

நேரம் உங்களோடே பேசுவேன்'' என்றேன். ''போயும் போயும் கடலைதானு உமக்கு வேண்டும்!" என்றார்கள்.

''கடலை என்ன அற்பமானதா? அகஸ்திய ரிஷி முதலியவர்களெல்லாம் கடலை சாப்பிட்டிருக்கிறார்கள். அஃது உங்களுக்குத் தெரியுமா?'' என்று பதில் கேள்வி கேட்டேன்.

''அகஸ்தியர் கடலை சாப்பிட்டதாக நாங்கள் கேட்டது மில்லை, படித்ததுமில்லை?'' என்று அவர்கள் விளம்பி னார்கள்.

''அப்படியானால் நான் சொல்லுகிறேன் கேளுங்கள்'' என்று நான் பேசத் தொடங்கினேன். ''எலிமீது ஏறிய யானைக்கும், மயில்மேல் குந்திய காளைக்கும் தந்தையாகி'' என்று நான் சொல்லிக்கொண்டு போகையில், '' எலியின் மேல் யானை எப்படி ஏறும்?'' என்று ஒருவர் கேட்டார்.

''எலியில் பெருஞ்சாதி பெருச்சாளி; அந்தப் பெருச் சாளிமீது ஏறிய யானை, விநாயகர்; மயிலின்மேல் குந்திய காளை, முருகன் என்று விடையளித்தேன்.

''ஓஹோ! அப்படியா! சரிதான், அப்புறம் சொல் லுங்கள்'' என்று அவர்கள் வேண்டிக்கொண்டார்கள்.

நான் மறுபடியுந் தொடங்கினேன் :—

'' எலிமீது ஏறிய யானைக்கும், மயில்மேல் அமர்ந்த காளைக்குந் தந்தையாகி, எருமைக் கடாவின்மேல் ஏறி மார்க்கண்டன் உயிரைக் கவர்ந்த யமனை, எருதின்மேல் சவாரிசெய்து போய்த் தாக்கிய பரமசிவன், பருவதராஜன் பெற்றெடுத்த புத்திரியாகிய பார்வதியைக் கலியாணம் செய்துகொண்ட காலத்திலே தேவரும் மற்றை யாவரும், கைலையங்கிரியிலே அவருடைய மணக்கோலத்தைக் காண வந்ததனால், பாரந் தாங்கமாட்டாமல், வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்துபோக, எல்லோரும் அதைக் கண்டு திடுக்கிட்டுப் போனார்கள்'' என்று ஆனந்தபைரவி இராகத் திலே சொல்லிக்கொண்டு வந்தபொழுது, காராமணி கடலை பட்டாணி விற்றவன் தன் தலையிலிருந்த கூடையை இறக்

கிக் கீழே வைத்து அதிக ஆவலுடன் நான் கூறியதைக் கேட்டுக்கொண்டு நின்றான்.

அவனை நான் பார்த்து, "அப்பா, கடலை விற்கும் கடலையாண்டி, அகஸ்தியர் கடலை சாப்பிட்ட கதையைச் சொல்லப் போகிறேன். நீயும் உட்கார்ந்து கேள்" என்று சொல்லி மறுபடியும் ஆரம்பித்தேன். "வண்டி குடை கவிழ்ந்ததுபோல் உலகம் ஒருபுறம் சாய்ந்து கிடந்ததைக் கண்டு எல்லோரும் நடுங்கி நிற்கும்போது, நெற்றியிலுள்ள நெருப்புக்கண்ணின் உஷ்ணம் அதிகரிக்காதபடி தலையி லுள்ள சடையிலே கங்கை நீரைக் கட்டிவைத்திருக்கும் சாம்பசிவன் அருகிலுள்ள குள்ளமுனியாகிய அகஸ்திய ரைப் பார்த்து, 'நீ போய் உலகத்தை முன்போலச் சமநிலைப் படுத்து' என்று ஆக்ஞாபித்தார். அவ்வாறே இந்த அகஸ் தியமுனி தென்றிசைக்குச் சென்று உலகத்தைச் செப்ப னிட்டார். இவ்வாறு மகத்துவம் மிகுந்த அகஸ்தியரிடத்தில் ஒருநாள் ஆயிரங்கண்ணனாகிய தேவேந்திரன் வந்து தேவர்க ளெல்லாரையும் விருத்திராசுரன் என்ற ஓர் அரக்கன் வருத் துவதாயும், அவ் வரக்கன் சமுத்திரத்தில் ஒளித்துக்கொண் டிருப்பதாயும் முறையிட்டான். உடனே குறுமுனியாகிய அகஸ்தியர் சமுத்திரத்தைச் சாப்பிட்டு அந்த அசுரனை வெளிப்படுத்தினார். கேட்டீர்களா, ஓ ஜனங்களே!" என்று நான் பேசி முடித்தேன்.

இதைக் கேட்டவர்கள் சிறிதுநேரம் யோசனைசெய்து "அகஸ்தியர் கடலை சாப்பிட்டதாகச் சொன்னீர்களே, அதைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் வேறு என்னவோ பேசிவிட்டீர்களே!" என்றார்கள்.

"அதைப்பற்றித்தான் இப்போது நான் பேசி முடித் தேன்" என்று சொன்னேன்.

"இல்லையே" என்றார்கள்.

"ஆம்" என்றேன்.

"இல்லவே இல்லை" என்றனர்.

"சமுத்திரம் என்றால் என்ன?" என்று கேட்டேன்.

" சமுத்திரம் என்றால் கடல் " என்றார்கள்.

" கடலை அகஸ்தியர் சாப்பிட்டார் என்று நான் சொன்னேன். அவர் கடலை யுண்டதை நான் சொல்ல வில்லையென்று எப்படி நீங்கள் சொல்லலாம் ?" என்று நான் கேட்டபோது அவர்கள் வாயைத் திறந்து மூக்கில் விரலை வைத்துக்கொண்டனர்.

இதற்குப்பின் நாங்கள் இரண்டணாவிற்குக் கடலை வாங்கி உண்டோம். என்முன் இருந்தவர்கள் கையில் கடலையை வாங்கி உண்ணும்போது அஜாக்கிரதையாகப் பல கடலை களைக் கீழே சிந்தினார்கள். நான் அதிகக் கவனத்துடன், ஒன்றுவிடாமல் பொறுக்கலானேன். உடனே அவர்கள் என்னைப் பார்த்து, " வேண்டுமானால் இன்னும் கொஞ்சம் கடலை வாங்கிக் கொள்ளலாம் ; மணலில் விழுந்ததை ஏன் பொறுக்குகிறீர்கள் ?" என்றார்கள்.

*" சிறியோர் சிந்திய சிறுகடலை யெல்லாம்*
*பெரியோ ராயிற் பொறுக்குவது கடனே."*

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்

## அ. அப்பர் அச்சகத் திறப்புவிழா

[திரு. மைந்நூர் இராமசாமி ரெட்டியார்]

இக்கழகம் இருபத்தெட்டு ஆண்டுகளாகத் தமிழ்நாட்டிற்குத் தொண்டியற்றி வருகின்றது. பல புத்தகங்கள் கண்கவர் வனப்பினவாய் நல்ல முறையில் பிழையின்றிப் பதிப்பித்து வருகின்றது. எனக்கும் பதினெட்டு ஆண்டுகளாக நன்கு தெரியும். இவர்கள் புத்தகங்களை நான் வாங்கிப் படிப்பது. ஏன்? பிழையின்றியும், அழகாகவும், தெளிவாகவும் இருப்பதினாலேயாம்.

நம் முன்னோர்கள் நல்ல மூளை வலுவுடையவர்களாக விருந்தார்கள். அதனால் அவர்கள் கல்விக்குப் புத்தகமும் அச்சகமும் அந்நாள் தேவையில்லாமலிருந்தன. அவர்கள் எதையும் எளிதாக நெட்டுருப்பண்ணும் ஆற்றல் வாய்ந்தவர்களாக இருந்தார்கள். காரணம் என்ன? புலனடக்கம் பெற்று வீரியக் கட்டுடையவர்களாக இருந்தார்கள். அதனால் அவர்கள் உடல்வலு, உள்ளவலு, மூளைவலு நன்றாகப் பெற்றிருந்தார்கள். அதனால் நன்றாக உழைத்தார்கள். மறதியில்லாமலிருந்தார்கள், எத்தனை பாட்டு வேண்டுமானாலும் நெட்டுருப்பண்ணி ஒப்பித்தார்கள்.

ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் ஆசிரிய மாணாக்கர் முறையில் கல்வி கற்பித்தும் கற்றும் வந்தார்கள். நெட்டுருப்போடும் நீண்ட பழக்கமிருந்து வந்தது. மனிதன் நடக்கும் கல்விக் களஞ்சியமாக இருந்தான். மக்கள் வலுக்குறைவு அடைய அடைய அகத்தே தொகுத்தவற்றை விரிவாகப் புறத்தே தொகுக்கும் நூலகங்களும் நூல்களும் தேவைப்பட்டன. அந்நூல்களை விரிவாகவும் மிகுதியாகவும், எளிதாகவும் உண்டாக்குவதற்கு அச்சகம் முதலிய கருவிகள் தேவைப்பட்டன.

இத்தேவை நம்முடைய வலுக்குறைவைக் காட்டுவதாயிருந்தாலும், நாம் அவற்றைப் போற்றிவரும் நிலையிலிருக்கின்றோம். நம் முன்னோர்கள் நமக்கு அழியாக் கருவூலங்க

ளாக—உணர்வு விளக்காகத் தந்த சுவடிகளை நாம் பொன்னி னும் மணியினும் புகழ்மிக்க உயிரினும் போற்றி வரல் வேண்டும். நம்மவர்கள் அறியாமையால் அச்சிடாப் பழைய வைப்பனைய நூல்களின் அருமை பெருமை அறி யாது அவைகளைக் கறையானுக்குக் கொடுத்தல், காவிரியி னிடல் முதலியவற்றைச் செய்கின்றனர். இவை வருந்தத் வ.

எனக்குத் தெரிந்தவரை, திரு. ஆறுமுக நாவலர் அவர்களே முதன் முதல் செந்தமிழ்ச் சமய நூல்களைப் பிழையின்றி அழகுறப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள். அதன்பின், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் அத் தொண்டினைச் செவ்வனே செய்து வருகின்றார்கள். அம் மட்டுமின்றிப் புதிய முறைகளையும் கையாண்டு பலவேறு சிறப்புக்கட்டடமமைந்த பதிப்புக்களும் வெளியிட்டு வருகின் றார்கள். படிப்பு புத்தகம், படம், கேள்வி என்னும் மூன்று லும் பரவவேண்டும். அம் மூன்றினையும் இக் கழகத்தார் செவ்வனே செய்து வருகின்றார்கள்.

சமய நூல்கள் கண்கவர் வனப்பினவாக விருந்தால் அவ்வனப்பால் மனம் இழுக்கப்பட்டு அந்நூல்களை வாங்கிப் படித்து மக்கள் பயன் எய்துவார்கள். இவ்வுண்மை யுணர்ந்து கழகத்தார் நல்ல முறையில் பதிப்பித்து வருகி றார்கள். கழகத்தார் பள்ளிக்கூடம், கல்விச்சாலை, நூல் நிலையம், மணம் முதலிய சிறப்பின்போது வழங்கல் முதலிய வற்றிற்கு ஏற்றவாறு புத்தகங்கள் வெளியிட்டுள்ளார்கள். ஒருவகையாக வெளிப்பகட்டும் இன்றியமையாததே. அது மருந்தினை வெல்லக்கட்டியிற் பொதிந்து கொடுப்பதனை யொக்கும். மேனாட்டார் பதிப்பிக்கும் முறையும் இக் கருத்துக் கொண்டதேயாம்.

இருபத்தெட்டு ஆண்டுகளாகப் பல அச்சுக்கூடத்தில் பதிப்பித்துத் தனக்கென உரிய அச்சகமில்லாதிருந்த பெருங் குறை இன்று நீங்குகிறது. அச்சகத்துக்கு வழங்கும் திருப் பெயர் 'அப்பர் பெருமான்' திருப்பெயராகும். அவர் "நாமார்க்குங் குடியல்லோம்" என்று உரங்கொண்டு

மொழிந்து, வெளிப்பட்டெழுந்து, வெற்றியுடன் திகழ்ந்த தமிழ்நாட்டு முதல் (நன்மை கடைப்பிடி) சத்தியாக்கிரகி யாவார். மக்களைக் கடவுள் தன்மைக்குக் கொண்டுபோவதே பெரியோர் குறிக்கோள். அவ்வுண்மை காட்டவே இப் பெயர் இங்கு அமைத்தனர் போலும்.

நாமகளை வழிபடுவதாகிய நவராத்திரி நமக்கு நினைப் பூட்டுவது என்ன? கல்வி, கைத்தொழில் எல்லாங் கற்க வேண்டும். கல்வியை உள்ளத்தில் மறவாது கற்பதே சிறந் தது. அவ்வாறு கற்பிக்கவேண்டும். அங்ஙனங் கற்கச் செய்வதிலேயே நாடு, மொழி, மக்கள் எல்லா முன்னேற்ற மும் நன்றாக அமையும். எல்லா வளங்களும் அறிவின் வழியே பெருகும். அறிவு விளக்கத்துக்கு நூல் இன்றியமை யாது வேண்டும். நூல் வெளிவர அச்சகம் வேண்டும்.

அச்சகம் இப்போதுள்ளவை போதுமான அளவின வன்று. ஆயிரக்கணக்கான மக்களுக்குக் கல்வி பரவ வேண்டும். அதற்கு வேண்டுமளவு நூல் வெளிவரவேண்டும். அதனால் இன்னும் அச்சகம் பலவாறு பெருகவேண்டும். இப்பொழுது நூற்றுக்குப் பதின்மரே கற்றுள்ளனர். முற் காலத்தில் நூற்கல்வி குறைவாக இருந்தாலும் செவிக்கல்வி மிகுதியாக இருந்தது. அக்கல்வியும் செய்யுட் கல்வியாக இருந்தது. தொட்டில்முதல் சுடுகாடுவரை பாட்டாகவே இருந்தது.

அது, தொட்டில் பாட்டு, உழவுப்பாட்டு, வழிநடைப் பாட்டு, வண்டிப்பாட்டு, ஏற்றப்பாட்டு எனத் தனித்தனி வழங்கப்பெறும். நாம் பெரியோர் மரபின் வழிவந்தோ மென்பதற்குத் தகுதியுடையவராக இருப்பதற்கு எவருட னும் பகையின்றி எல்லாருக்கும் இயன்ற உதவி செய்துவர வேண்டும். அங்ஙனம் செய்யாவிட்டால் நம் தகுதிப்பாட்டில் உலகம் ஐயங்கொள்ளும்.

பழங்காலத்துப் புலவர்கள் நிகண்டு முதலிய பெரு நூல்களில் வல்லவராக இருந்தனர். நம்நாட்டுச் சித்தர் பாடல்கள் மேலைநாட்டு அறிவியல் நூற்களோடு பெரிதும் ஒத்தன. சித்தர் பாடல்களில் வெளிப்படையாகத் தோன்றும்

பொருள்கள் அப்பாடல்களின் மெய்ப்பொருள்கள் அல்ல. அவற்றின் மெய்ப்பொருள்கள் ஆசிரியர் மாணுக்கர் மரபின் வழியாக வருவார்வாய்க் கேட்டுத் தெளியவேண்டும்.

பெரும்பாலும் தற்காலத்தார் வெளிப்பகட்டாராகவே காணப்படுகின்றனர். ஆங்கிலங் கற்றவர்க்கு மேனுட்டு மொழியில் பெரும்பற்று. தமிழ் மொழியில் பற்றும் ஊக்கமும் பயிற்சியுமில்லை. உலகம் போற்றும் இரவீந்திரநாத தாகூர் தாய்மொழிப் பற்ருலேயே உயர்ந்தார். தாய்மொழி—தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஊர்தோறும் அச்சகம் வேண்டும்.

எல்லா மொழியும் தெரியவேண்டும்; அம்மொழிகளை ஒப்பு நோக்கவேண்டும். பிறருக்கு உணர்த்தவேண்டும். சரசுவதி மகாலில் நூல்களைப் போற்றிவந்த முறை வியக்கத் தகுந்தது. அந்நாளில் பனையோலையில் எவ்வளவு அழகாக எழுத்துக்களைப் பொறித்துள்ளார்கள். சரபோசி மகாராசா அரும்பாடுபட்டு நூற்கள் தொகுத்துவைத்துள்ளார். அவை களை நான் நேரில் பார்த்தேன். அவைகள் காலப்பழமை யால் எடுக்கும்போதே ஒடிந்துவிடுகின்றன. அங்குப் படங் களும் மிக அழகாகக் காணப்படுகின்றன.

'உள்ளத்தில் உண்மையொளி யுண்டாயின் வாக்கினிலே ஒளியுண்டாகும்' என்றனர் பாரதியார். உண்மை கடைப்பிடித் தொழுகவேண்டும். நூலோர் உள்ளம் நம்மை மேல் ஊக்கும். நாம் நூல்களை யாவர்க்கும் எளியவாகக் கிடைக்கு முறையில் பரப்பவேண்டும். அதற்கு 'அச்சிடுவோர் சங்கம்' என ஒரு சங்கம் ஊர் ஊராக நிறுவவேண்டும். சிறு சிறு தொகை தொகுத்து அச்சிடுவோர்க்கு உதவியோ, தாங்களே அச்சிட்டோ வெளிப்படுத்தவேண்டும். தொழிலாளர்க்கு உதவும் பொருட்டு 1908 இல் பைசா பண்டு எனச் சங்க வழிச் சேர்த்ததொகையால் எவ்வளவோ உதவிகள் நடந்தன.

பழைய நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தும் முயற்சி யில் அரசியலார் செய்யவேண்டுவன மக்கள் ஆர்வத்தையே பொறுத்திருக்கிறது. என் சர்க்காரும் மத்திய சர்க்காருடன் கலந்தாய்ந்து ஒருங்கியைந்து பழைய நூல்களை அச்சிட்டுப் பாதுகாக்கும் பணியில் தலையிடும்.

இக்காலத்து மக்கள் எல்லாவகையான உதவியையும் அரசியலாரையே நாடுகின்றனர். அவ்வாறு நாடுங்கால் அரசினர் வரியை மிகுதிப்படுத்துகின்றனர். மக்களே சேர்ந்து தங்கள் தேவைகளைத் தாங்களே நீக்கிக்கொள்ள வேண்டும். முற்காலத்தில் மக்கள் அரசனிடம் எதிர்பார்த்தது வெளிநாட்டுப் படையெடுப்பை விலக்கலும், உள்நாட்டுக் குழப்பத்தை அடக்கலுமாகிய இவ்வளவேயாம்.

மேனாட்டில் தன் நலத்தானே பெரியவன் என்று அழைக்கப்படுவான். நம் நாட்டில் 'தனக்கென வாழாப் பிறர்க் குரியாளனே' பெரியவனென்று அழைக்கப்படுவான். இவ்வுண்மையை முனிவர், நாயன்மார், ஆழ்வார் முதலிய பெரியவர்கள் போற்றப்படுவதாற் காணலாம். அறுபத்து நாலு கலைகளென நம் முன்னோர்கள் வகுத்தவற்றுள் மேல் நாட்டு அறிவியல் நூலும் அடங்கும். நம்முடைய அடிமை வாழ்வால் கலையெல்லாம் மறந்தொழிந்தோம். புதிய கலைகள் ஆக்கும் வாய்ப்பிழந்தோம்.

இப்பொழுது காந்தியடிகள் நன்முயற்சியால் நாட்டுக்கும் நமக்கும் விடுதலையும் உரிமை ஆட்சியும் வந்திருக்கின்றன. காந்தியடிகளால் வந்த உரிமை ஆட்சி உரன் பெறவேண்டுமானால், படித்தோர் ஏனையோர்க்குப் படிப்பிக்க வேண்டும். படிப்போர்க்கும் படிப்பிப்போர்க்கும் எல்லோரும் உதவி செய்யவேண்டும்.

ஒருவர்கூடச் சோம்பலில்லாது எல்லாரும் வேலை செய்யவேண்டும். முன்னேற்றத்திற்குப் பாடுபடவேண்டும்.

நம் நாட்டு ஏழைமையால் சிறு நூலும் வாங்க இயலாதார் பலரிருக்கின்றனர். அவர்களுக்கென மலிந்த பதிப்பு ஒன்று வேண்டும். அதுமட்டும் போதாது; செல்வர் ஏராளமாகப் புத்தகங்களை வாங்கி அவர்களுக்கு நன்கொடையாகவும் அளிக்கவேண்டும்.

அப்பர் பெருமான்போன்று நாட்டுக்கும் மொழிக்கும் தொண்டுபுரிந்து அப்பர் அச்சகம் நீடு வாழ்க!

## ௧௦. சீவகசிந்தாமணி யெழுந்த வரலாறு

[திரு. தி. சங்குப் புலவர்]

தொன்மை வாய்ந்த சோழர் குடியில் ஏறக்குறைய ஓராயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் திருத்தக்கதேவர் என்பவர் தோன்றினர். இவர் இளமைப்பருவத்தே கல்வி கேள்விகளிற் சிறந்து புலமை நிரம்பி யாவரும் போற்றத் தக்க அறிவுடையவராய் விளங்கினர். செந்தமிழ்ப்புலமையிற் சிறப்புற்று விளங்கியதும் அன்றி வடமொழிப் புலமையும் வாய்ந்திருந்தனர். அருகனை வணங்கும் சமணமதத்தைச் சார்ந்தவர் இவர். அம் மதத்தின் மெய்ப்பொருளுணர்ந்து ஐவகைச் சீலமும் கைவரப்பயின்று அறிவிற் சிறந்தவர் ஆயினர். மணப்பருவமடைந்தபோதும் மணஞ்செய்ய விரும்பாது இளமையிலேயே துறவு பூண்டு நல்லொழுக்கம் பிழையாது வாழ்ந்தனர். பலநூல் கற்பித்த ஆசிரியர் குறிப் பின் வழி நிற்றலே தமது கொள்கையெனக் கொண்டு பல் லுயிர்க்குந் தொண்டுபுரிந்து வரலாயினர்.

இவர் ஒருநாள் தம் ஆசிரியருடன் கூடி மதுரைத் தமிழ்ச் சங்கப்புலவரைக் காண மதுரைநகர் சென்றார். ஆங்குள்ள புலவர்களைத் தனித்தனி கண்டு அளவளாவி உரையாடிப் பெருமகிழ்வு பெற்றார். "நுண்ணுணர்வினரோடு கூடி நுகர்வுடைமை, விண்ணுலகே யொக்கும் விழைவிற்றால்" என்ற முதுமொழியின்படி மேலுலக இன்பத்தினும் மேலாய இன்பத்தை எய்தினர். தீந்தமிழின் சொற்சுவை பொருட்சுவைகளைப் புதிது புதிதாக நுகர்ந்தனர்.

இங்ஙனம் பன்னாட் பல புலவர்களோடு பயின்று திருத்தக்கதேவர் உள்ள மகிழ்வுடன் மதுரையில் உறைந்தபோது புலவர்களில் ஒருவர் அவரை நோக்கி, "நும் சமயத்தார் யாவரும் துறவறம் பாடவல்லரேயன்றி இல்லறவின்பத்தைப் பாடவல்லவர் அல்லர்" எனக் குறைகூறினர். உடனே திருத்தக்கதேவர், "இல்லற இன்பச்சுவை பாடவல்லார் பலர் எம் சமயத்தில் உளர். அதனை வெறுத்தே அவர்கள்

பாடாது விடுகின்றனர் '' என்றார். '' அங்ஙனம் ஆயின் தேவரே இன்பச்சுவை யமைத்து ஓர் நூலியற்றுங்கள் பார்ப்போம் " என்றனர். தேவரும், " அவ்வாறே செய்வோம் " என்று கூறி அகன்றனர்.

பின்னர் இவர் ஒருநாள் இந் நிகழ்ச்சியைத் தம் ஆசிரியரிடம் வணக்கத்தோடு தெரிவித்தனர். ஆசிரியர் தம் மாணவர் திருத்தக்கதேவர் நூல் பாடும் வன்மையுடையவர் என்பதை முன்னரே நன்கு அறிந்தவர். ஆயினும் அப்பொழுதும் ஆராய்தற்கு எண்ணினார். அவ்வமயம் ஒரு நரி குறுக்காக ஓடிற்று. ஆசிரியர் ஓடிய நரியைக் காட்டி, " இந் நரியினத்தின் பண்புகளை யமைத்து ஒரு சிறுநூல் இயற்றுக'' என்றனர். உடனே இவர் " நரிவிருத்தம் '' என்ற பெயரிட்டு நூல் ஒன்று பாடித் தந்தனர். அதனைக் கண்ட ஆசிரியர் தேவரின் கவிபாடும் திறமையை வியந்தார். அந் நூலில் துறவின் மேன்மையைச் சிறப்பித்துக் கூறியுள்ள பகுதிகளைக் கண்டு கண்டு களிப்படைந்தார். துறவற மாண்பினைப் பாடிய இவர் இல்லற மாண்பினையும் எடுத்துரைக்கும் திறமுடையாரென எண்ணினர்.

" சீவகன் என்ற மன்னன் வரலாற்றைப் பொருளாக வைத்து இன்பச்சுவை ததும்பிய ஒரு பெருங்காவியம் இயற்றுக !" என ஆணை தந்தனர். அன்றியும் " செம்பொன் வரைமேல் '' என்று தொடங்கும் பாடலைப் பாடிக்கொடுத்து, " இதனைக் கடவுள் வணக்கமாக வைத்து நூலைத் தொடங்குக '' என்றும் உரைத்தனர்.

திருத்தக்கதேவர் ஆசிரியர் ஆணைப்படி நூல் பாடத் தொடங்கினர். " மூவா முதலா '' என்று கடவுள் வணக்கம் ஒன்று பாடி ஆசிரியர்பால் காட்டினர். தேவர் பாடலின் சிறப்புக்கண்டார். தம் பாடல் அத்துணைச் சிறப்பில்லையென்பது தெரிந்தார். " மூவா முதலா '' என்ற கவியையே முன்வைக்கும்படி கூறிக் காரணங்காட்டினர். இவர் தம் ஆசிரியரின் ஆணையைக் கடத்தற்கு அஞ்சித் தம் செய்யுளையே முன்வைத்தனர். இது நச்சினார்க்கினியர் உரையால் நன்கு விளங்கும்.

"மூவா முதலா" என்ற செய்யுளின் உரையில் நச்சி ஞர்க்கினியர் "குருக்கள் கூறுதலானும், அருகனை வணங்கு தலானும் அதனை முன்வைக்க எனின் அவர், 'இது நன்று, இதனை முன்னே வைக்க' என்றலின் முன்வைத்தார்" என்று கூறுதலான் அறிகின்றோம். ஆசிரியர் தம் பாட லினும் மாணவர் பாடல் சிறந்ததெனை அறிந்து முன்வைக்க வெனக் கூறினரெனில் தேவர் பெருமையைச் செப்பவும் இயலுமோ?

தேவர் தாம் செய்த அந் நூற்குச் 'சீவகசிந்தாமணி' யெனப் பெயரிட்டார். கடவுள் வாழ்த்து, அவையடக்கம், பதிகம் என முறையே நிறுத்தினர். நாமகளிலம்பகம் முதல் முத்தியிலம்பகம் இறுதியாகப் பதின்மூன்று இலம்பகங்க ளாகப் பகுத்தார். மூவாயிரத்திற்கு மேற்பட்ட செய்யுட்களான் முடித்தார் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நாற் பொருட் பயனும் அதனுள் அமைத்தார். மலை, கடல், நாடு, நகர், பருவம், ஞாயிறு, திங்களின் தோற்றம், மறைவு இடையிடையே புனைந்துரைத்தார். மணம் புணர்தல், முடி சூட்டல், புனல் விளையாட்டு, பூஞ்சோலை மேவுதல், புதல் வரைப்பெறுதல் முதலிய செயல்களைச் சிறப்பித்தார். அர சியல் சூழ்ச்சி, போர்மேற் செலவு, போர்புரிதல், வெற்றி இவற்றைத் தொடர்புற வைத்தார். பெருங்காப்பியத்திற் குரிய இலக்கணங்கள் பலவும் குறைவின்றி யமைத்து முடித்தார். பிறகு நூலை இவர் தம் ஆசிரியர்க்குக் காட்டினர். அவர் அதனைக் கண்டு வியந்து, "முந்நீர் வலம்புரி" என்ற ஓம்படைச் செய்யுள் பாடி உதவினர். "இந் நூலைச் சங்கத்தா ரிடஞ் சென்று அரங்கேற்றுக!" என்றனர்.

ஆசிரியர் கூறியவாறே மதுரையிற் பாண்டியன் அவைக்களத்தே சங்கப்புலவர் சூழத் தமது நூலை அரங் கேற்றினர். அந் நூலின் திட்பம், நுட்பம், அழகு, அமைப்பு, சொற்சுவை, பொருட்சுவை, ஒலிநலம் முதலியவற்றைக் கண்ட சங்கப்புலவர் அனைவரும் தேவரை வியந்து பாராட் டினர். அங்ஙனம் பாராட்டியபோது புலவர் சிலர், "இன்பச் சுவையை இவ்வாறு பாடுவது இன்ப நுகர்ச்சியில்லாத வர்க்கு எங்ஙனம் கூடும்? இத் தேவரும் இன்ப

பெற்றவர் எனக் கருதுகின்றோம்" என்று பழிப்புரை பகர்ந்தனர். மன்னனும் அவ்வுரை கேட்டு ஐயமுற்றான். அதனை யுணர்ந்த தேவர் பண்டைக்கால வழக்கப்படி எரியிற் காய்ச்சிய இரும்பைக் கரத்தில் ஏந்தி நின்றார்: இரும்பு தண்ணெனக் கரத்தைச் சுடாதிருக்கக் கண்டு வியந்தனர். பழிப்புரை கூறிய அனைவரும் பிழை பொறுக்கும்படி வேண்டினர். பாண்டிய மன்னனும் அவ்வாறே வேண்டினன். தேவர், "நீவிர் செய்தது பிழையன்று; என் துறவறத்தின் தூய்மையை எவர்க்கும் எடுத்துக்காட்டப் புரிந்த செயலெனக் கருதுகின்றேன்" என்றனர். அவையோரும் அரசனும் அமைதியுடன் பாராட்டிப் புகழ்ந்தனர்.

பின் திருத்தக்கதேவர் தம் ஆசிரியர்பாற் சென்று நூலரங்கேற்றிய வரலாறு கூறினர். வாழ்த்துரையும் பெற்றனர். சிந்தாமணி ஆசிரியர் என்ற சிறப்புப் பெயரும் இவருக்கு எய்தியது. விருத்தக் கவியாற் பெருங்காவியம் இயற்றியவர்களில் இவரே முதல்வர் ஆவர்: இவர் சிந்தாமணி பாடிய காலத்திற் பல்வேறு சமயக் கொள்கைகள் தமிழ்நாட்டில் பரவியிருந்தன. தேவர் தம் அருக சமயக் கொள்கைகளை இந்நூலிற் பலவிடங்களிலும் எடுத்துரைத்து முத்தியிலம்பகத்தில் முழுவதும் விளக்கியுள்ளார்.

சிந்தாமணிபோலச் சிறந்த பெருங்காவியம் நம் செந்தமிழ்மொழியில் ஒன்றும் இன்று. சிந்தாமணி என்பதன் பொருள் கெடாத மணி என்பது. வேண்டுவார் வேண்டும் பொருள்களையெல்லாம் வழங்கவல்ல சிந்தாமணி ஒன்று தேவருலகத்தில் உள்ளது என்பது நூல் மரபு. அதனை யாம் கண்டிலம். கற்றார் விரும்பும் பொருள்களையெல்லாம் இச் சிந்தாமணியிற் காணலாம். தமிழ்நாட்டினர்க்கு வேண்டும் கல்விப்பொருளை வழங்க வல்லது இந் நூலே.

# ௧௦. மண்ணும் விண்ணும்

[திரு. என். கே. வேலன்]

வானவெளியில் கோடிக்கணக்கான அண்டங்கள் ஆதரவு எதுவுமின்றி அசைந்து ஆடிக்கொண்டு இருக்கின்றன. நாம் காணும் விண்மீன் ஒவ்வொன்றும் ஒரு பெரிய உலகம் ஆகும். விண்ணுலகங்கள் நாம் வாழும் மண்ணுலகை விடப் பன்மடங்கு பெரிதாகக் காணப்படுகின்றன. உலகங்களையெல்லாம் உண்டாக்குவதும், ஒரு நொடிப்பொழுதில் அவற்றை அழிப்பதும் ஆண்டவனுக்குத் திருவிளையாட்டாக அமைந்துள்ளது.

வான உலகங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இம்மண்ணுலகம் மிகச் சிறியதாகத் தோன்றுகிறது. ஆயினும் பூமியில் எங்குப் பார்த்தாலும் உயிர்கள் மலிந்து கிடக்கின்றன. கடலின் நடுவிலும், மலையின் உச்சியிலும், பரந்த வயல்களிலும், அடர்ந்த காடுகளிலும், நாம் உட்கொள்ளும் காற்றிலும், உண்ணும் உணவிலும் உயிர்ப் பொருள்கள் நிறைந்துள்ளன. எப்பொழுது பார்த்தாலும் நாம் இயற்கை அன்னையின் இன்னிசையை ஓயாது செவியுறுகின்றோம். இவ்வுலகில் பலதிறப்பட்ட உயிர்கள் குவிந்துள்ளன. ஒரு துளி நீரை எடுத்துக்கொண்டால் அதனுள் பல்லாயிரக் கணக்கான உயிர்கள் துள்ளி விளையாடுவதைக் காணலாம். ஒரு குன்றிமணி அளவு தெருப்புழுதியில் 1,30,000 சிற்றுயிர்கள் வாழ்க்கை நடத்துகின்றன. வயற்புறங்களிலுள்ள மண்ணைத் தோண்டிப் பார்ப்போமானால் புழுக்கள் இடைவிடாது வேலை செய்வதைக் காணலாம். நாம் நடக்கும் பாதையிலுள்ள கல்லை விலக்கினால் அதனடியிலும் பல்வேறு உயிர்கள் ஊர்ந்து செல்வதைக் காணுகின்றோம். செடியினின்றும் ஒரு மலரையேனும் இலையையேனும் பறிக்கும்பொழுது அதனுள்ளும் பல உயிர்கள் வாழ்வதைப் பார்க்கிறோம். வானத்திற் பறவைகள் கூட்டம் கூட்டமாகப் பறந்து செல்கின்றன. மரங்களிற் பறவைகள் அருமையான கூடுகளைக் கட்டி வாழ்கின்றன. பல்லி,

ஓணான் இவைபோன்ற உயிர்கள் நம்மைக் கண்டவுடன் ஓடி மறைகின்றன. எறும்பு, ஈசல் முதலியவற்றின் புற்றுக்கள் பன்முறை நம் காலில் மிதிபட்டு அழிகின்றன. நம்மைச் சுற்றிலும் எங்குப் பார்த்தாலும் உயிர்கள் தோன்றுவதும் மறைவதுமாகவே இருக்கின்றன. உயிர்கள் அனைத்தும் ஏதோ ஓர் ஆணைக்கு அடங்கி நடப்பனபோன்று நமக்குத் தோன்றுகிறது,

இவற்றை நன்கு ஆராய்ந்து பார்க்கும்பொழுது, நாம் வாழும் உலகினைப் போலவே ஏனைய உலகங்களிலும் உயிர்ப்பொருள்கள் உள்ளனவோ என்னும் ஐயம் எழுகின்றது. வான உலகங்களில் உயிர்கள் வாழ முடியாது எனப் பலர் கூறுகின்றனர். இங்ஙனம் முடிவுகட்டிக் கூறுவது பொருந்தாது. வான வெளியில் அழிந்துபோன பெரிய உலகங்களும் புதிதாய்த் தோன்றும் பல்வேறு அண்டங்களும் நிறைந்துள்ளன. இவற்றுள் வெப்பம் மிகுந்த உலகங்களும், பனிபோன்று உறைந்து அழிந்துபோன உலகங்களும் இருக்கின்றன. நெடுங்காலத்திற்குமுன் பூமி ஓர் அனற்பிழம்பாக இருந்து, பல்லாயிரம் ஆண்டுகளாகக் குளிர்ந்து இப்பொழுது இருக்கும் நிலைக்கு வந்திருக்கிறது. முதன் முதலில் நீரில் உயிர்கள் தோன்றி அவற்றினின்றும் ஊர்ந்து செல்லும் உயிர்களும், பின்னர்ப் பறவைகளும், விலங்குகளும் ஒன்றின்பின் ஒன்றாய்த் தோன்றி இறுதியில் மக்கள் தோன்றினர் என்பது ஆராய்ச்சியாளர் கண்டறிந்த உண்மை. ஒரு காலத்தில் உலகம் முழுவதும் கடலால் மூடப்பட்டிருந்தது. நாளடைவில் நிலம் நீர்மட்டத்திற்கு மேல் உயர்ந்தது. இதற்குப் பின்னரே தரையில் வாழும் உயிர்கள் தோன்றிக் காற்றின் உதவியால் மூச்சுவிடத் தொடங்கின. உலகின் உயிர்கள் அனைத்தும் சுற்றிலும் உள்ள வெப்ப தட்ப நிலைக்கு ஏற்றவாறு உண்டாக்கப்பட்டிருக்கின்றன. நம் உடலும் இவ்வுலகிலுள்ள நீர், காற்று, வெப்பம், ஒளி முதலியவற்றை ஒட்டி அமைந்துள்ளது. விலங்குகளின் உடல் அமைப்பும் இதேபோன்று அமைக்கப்பட்டுள்ளது. உயிர்ப்பொருள்கள் எல்லாம் நீரிலும், காற்றிலும் தோன்றி இறுதியில் நீரிலும் காற்றிலுமே சென்று

மறைகின்றன. ஏனைய உயிர்களும் இப்பொருள்களினு லேயே குறைந்த அளவில் உண்டாகின்றன.

இப்பொருள்கள் இல்லாத பிற உலகங்களில் உயிர்கள் வாழ்வது எங்ஙனம்? வான நூல் ஆராய்ச்சியின் பயனாய் விண்ணுலகங்களில் பலதிறப்பட்ட இயற்கைப்பொருள்கள் இருப்பனவாக அறிகின்றோம். அவ்வுலகங்களில் உள்ள பொருள்களுக்கு ஏற்றவாறு ஏன் உயிர்கள் ஆங்கு அமைந் திருத்தல் கூடாது? அவ்வுயிர்கள் நாம் காணும் உயிர்களி னின்றும் உருவத்திலும், பண்பு நலன்களிலும் முற்றிலும் மாறுபட்டிருக்கலாம். நாம் நீரில் மூழ்கினால் இறந்துபடு கிறோம். மீன்களோ எனில் நீரினின்றும் வெளியில் எடுத் தால் மாள்கின்றன. கடலின் அடியில் உயிர்ப்பொருள்கள் நிலைத்திருக்க முடியாதெனப் பலர் எண்ணி இருந்தனர். அங்கு இருண்டு கிடப்பதனாலும் மேலே இருக்கும் நீரின் எடை கீழ்நோக்கி அழுத்துவதாலும் எவ்வுயிரும் கடலின் அடியில் உயிர்வாழ முடியாதென்பது அவர்தம் எண்ணமாக இருக்கலாம். ஆயினும் ஆழ்ந்த கடலின் உள்ளே இருந்து மிகவும் மெல்லிய உயிர்கள் எடுக்கப்பட்டுள்ளன. இவற்றின் மேல் நம் விரல் பட்டாலும் தாங்கக்கூடாதனவாக மிகவும் மெல்லிய உறுப்புக்கள் இவ்வுயிர்களுக்கு அளிக்கப்பட்டுள் ளன. இஃது என்ன விந்தை! கடலின் உள்ளே ஒளி இன்மையால் இவ்வியத்தகு உயிர்கள் தம் உடலிலேயே ஒருவகை ஒளியை விடுகின்றன. இவ்வுயிர்கள் வாழும் இடத்திற்கும் ஆங்குள்ள நிலைமைக்கும் ஏற்றவாறு இவற் றின் உடல் அமைப்பு மாறுபடுகின்றது.

இங்ஙனமே வானவெளியில் இயங்கும் எண்ணிறந்த உலகங்களில் நம் அறிவிற்கும் எட்டாத பலதிறப்பட்ட உயிர்கள் நிறைந்திருத்தல் கூடும். நாம் ஆறு அறிவுகளைப் பெற்றிருக்கிறோம். விண்ணுலக உயிர்கள் ஏன் ஏழறிவு எட்டறிவு பெற்றிருத்தல் கூடாது? அவ்வுயிர்களுக்கு இயற்கையாகவே மின் ஆற்றலும், காந்தவன்மையும், கண் ணுக்கு எட்டாத ஒளியினைக் காணும் திறனும், தொலைவில் உண்டாகும் ஒலியைக் கேட்கும் வன்மையும், சுவருக்கு

அப்பால் உள்ளவர்களைக் காணும் நுட்பமும் அமைந்திருக்க லாம். அவ்வுயிர்கள் நம்மைப்போல் உண்பதும் உறங்கு வதும் இல்லாமல் காற்றை உணவாகக்கொண்டு காலம் கழிக்கலாம். அவர்கள் தங்கள் விருப்பம்போல் எங்கு வேண்டுமானாலும் பறந்து செல்லும் ஆற்றல் படைத்திருக் கலாம். அவர்கள் தங்கள் உடல்களினின்றும் ஒளிவிட்டு மின்னுகின்றவர்களாயும் சுடர்விட்டு எரிகின்றவர்களாயும் இருத்தல் கூடும். இருள் நிறைந்த இடங்களில் வாழும் உயிர்களுக்கு இயற்கையாகவே கண்கள் மிகவும் கூர்மையாய் அமைந்துள்ளன. இங்ஙனமே வேறு உலகங்களில் வாழும் உயிர்களும் மின் ஆற்றலுள்ள கண்களைப் பெற்றிருக்கக் கூடும். நாம் காணமுடியாத பொருள்களை அவர்கள் காணக் கூடும். வானவர்களின் ஏனைய உறுப்புக்களும் மிகச்சிறந்த முறையில் அமைந்திருக்கலாம். இவர்கள் சாவா வரம் பெற்றவர்களாவும் இருக்கலாம். இவ்வானவர்கள் இன் னும் எத்துணைச் சிறப்புடன் விளங்குவாரோ என்பது நம் அறிவிற்கு எட்டாததாகவே இருக்கின்றது.

உலகில் காணும் பொருள்கள் எல்லாம் கால நிலைக்கு ஏற்றபடி சிறிது சிறிதாக மாறிக்கொண்டே வருகின்றன. சுவையும் அழகும் நிறைந்த கனிகளும் கண்ணைக் கவரும் வனப்பினையுடைய மலர்களும் உலகில் முதன் முதலாகத் தோன்றிய காலத்தில் இத்துணைச் சிறந்தனவாக இல்லை. மக்களும் முதலில் தோன்றியதிலிருந்து பல்வேறு மாறு தல்கள் அடைந்து இப்பொழுதுள்ள உருவத்தை அடைந் துள்ளனர். குரங்கு இனத்திலிருந்து மக்கள் தோன்றினர் என்றும், பாம்பு இனத்திலிருந்து பறவைகள் தோன்றின என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். நம் உலகம் தோன்றிய காலத்தில் உயிர்கள் எல்லாம் முற்றுப்பெறாத அருவமாக இருந்து பல்லாயிரம் ஆண்டுகளாய்ச் சிறிது சிறிதாக வளர்ச்சியுற்று இப்பொழுது நாம் காணும் அழகிய உருவத் தினை அடைந்துள்ளன. மனித உருவத்தின் உறுப்புக்களும் கூடப் பண்டைக்காலத்தில் நம் உறுப்புக்களைப் போன்று செம்மையாக அமைந்திருக்கவில்லை என்பது அறிஞர்கள் ஆராய்ந்து அறிந்த உண்மையாகும்.

கோடிக்காணக்கான உயிர்கள் இவ் உலகிற்றேன்றி முடிவில் எல்லாம் காற்று, நீர், புகை, புழுதி இவற்றில் போய் அடங்குகின்றன. இவ் வுலகில் நமக்கு முன் எத்தனை கோடி மக்கள் வாழ்ந்து அழிவுற்றனர்? அவர்தம் உடல்கள் எல்லாம் எங்குச் சென்று மறைந்தன? உலகமே ஒரு சுடு காடாகக் காணப்படுகின்றது. மிகவும் அழகிய பட்டணங்கள் சவக்குழிகளின் மேலேயே தோன்றியுள்ளன. உலகமெங் கணும் உயிர்கள் தோன்றுவதும் அழிவதுமாகவே இருக் கின்றன. உலகங்களை எல்லாம் ஆட்டிவைக்கும் பரம் பொருள் ஒன்றே என்றும் அழியாததாக இருக்கின்றது. படைப்பின் வியத்தகு செயல்கள் நம் சிற்றறிவிற்கு எட்டா தனவாக இருக்கின்றன. ஆதலின் வான உலகங்களில் உயிர் வாழமுடியாதென வரையறுத்துக் கூறுவது சரியன்று.

# கக. நற்குணத் தாமரையும் நன்மண ரோசாவும்

[நாவலர், பு. சி. புன்னைவனநாத முதலியார்]

(*தண்ணீரிய பொய்கையில் மலர்ந்திருந்தது தாமரை மலர். கண்கவர் வனப்பினைத் தாங்கி கரையின் மலர்ந்திருந்தது ரோசா மலர். ஒன்றையொன்று பார்த்து உரையாடத் தொடங்கின.*)

ரோசா : தண்ணீரில் வாழும் தாமரைப் பூவே! உன்னையும் பலர் புகழ்கின்றார்களே! என்னைப்போல் உன்னிடம் அழகு இருக்கின்றதா? மென்மை இருக்கின்றதா? அழகை விரும்பும் இயற்கை வாய்ந்த பெண்களும், ஆடவரும் அனைவருமே விரும்பும் கவர்ச்சி இருக்கின்றதா? மணம் இருக்கின்றதா?

தாமரை : மண்ணில் வளரும் ரோசா மலரே! செருக்குக் கொண்டு செம்மாந்து பேசுகின்றாய்! மணத்திலும் வண்ணத்திலும் பிற மலர்களைவிட நீ சிறப்புடையாய் என்பது வாய்மையே! ஆயினும் உன்னுடைய மென்மை பெண்மை யாகவே உலகில் கருதப்படுகின்றது! எவ்வளவு அழகு நிறைந்த பெண்ணாக இருந்தாலும் நற்பண்பும் நல்லொழுக்கமும் ஆண்மையும் ஆற்றலும் நிரம்பப் பெற்ற ஓர் ஆண்மகனுக்கு ஈடாவளோ?

ரோசா : பொய்யாக்குலத் தோன்றலர்களாகிய புலவர்களும் அறிஞர்களும் ஒருங்கே நம்மைப் புகழ்கின்றார்களே என்ற ஆணவத்தால் பொங்கி நிற்கும் நளினமே! நீ என்னைப் பெண் என்று சொல்கின்றாய்?

தாமரை : நிறைமொழி இல்லாய்! நீ நான் சொன்னவற்றைக் குறைவாக மதித்துக் கொக்கரிக்கின்றாய்! உன்னைப் பெண் என்று நான் சொன்னேனா? உன் மென்மைத் தன்மையும் வண்ணமும் பிறரைக் கவரும் மணமும் பெண்மைத் தன்மை என்று அல்லவா சொன்னேன்!

நீ ஆண்தன்மை யுடையையா? நற்பண்பும், நல்லொழுக்கமும் உன்னிடம் உள்ளனவா? இல்லையே!

ரோசா: நற்குணமுடையைபோல் நடித்துப் பேசுகின்ருய்! உன் அடித்தாள் முள்ளைக் கொண்டது அல்லவா? ஒரு புலவர்கூட உன்னை "முள்தாள் தாமரை" என்று கூறியிருக்கின்ருரே!

தாமரை: பிறர் குற்றம் காண்பவர்கள் தம் குற்றத்தைக் காணுர் என்பது உண்மையே! நீ முள்நிறைந்த செடியில்தானே மலர்கின்ருய்? அதை மறந்து இங்ஙனம் பேசலாமா? மேலும் நல்ல பாம்பினிடமிருக்கும் ஒளி மணிபோல் நீ முள் நடுவே இருப்பதால் உன்னைத் தொடவும் பிறர் அஞ்சுகின்ருர்கள்! செல்வம் செழித்திருக்கும் காலமெல்லாம் வயிறு கொழுக்க உண்டு, செல்வம் நீங்கி அல்லற்படும் காலத்து நீங்கும் தீய நட்பினர்களையும் உறவினர்களையும்போல் நீ உன்னைப் பாதுகாப்பவன் உன்னைக் காக்குந்தனையும் அவனுடன் இருந்து, காக்கத் தவறியதும் அவனைவிட்டு ஓடிவிடுகின்ருய்!

ரோசா: நீ மட்டும் ஓடுவதில்லையா?

தாமரை: முட்களை உள்ளே உடைய தாமரையென்று நான் பேர் வாங்கி யிருந்தாலும் சிருர்முதல் முதியோர் ஈருக அனைவருக்கும் சமநிலையில் உதவி வருகின்றேன். மேலும் நான் குடியிருக்கும் குளங்கள், கிணறுகள் கால மாறுபாட்டால் தண்ணீர் வறண்டு போனுலும் (பகைவர்கள் என்னுடைய கிழங்கை மட்டும் பறித்துக்கொண்டு போகாமலிருந்தால்)என்றென்றும் அவைகளுடனேயே இருந்து அவைகள் செழிக்கும் காலத்து நானும் செழிக்கின்றேன்.

ரோசா: அஃதிருக்கட்டும்; நான் அழகு நிரம்பப் பெற்றிருக்கின்றேன்; உலகை ஒரு குடைக்கீழ் ஆளும் அரசரும் என்னை விரும்புகிருர்கள். இத்தகைய பண்பு உனக்கு உண்டா?

தாமரை : அரசர் விரும்பும் தகுதிதானே உன்னிடம் அமைந்திருக்கின்றது! என்னிடம் அத் தகுதியைவிட உயர் தகுதியன்றோ இருக்கின்றது! அரசர்கள் நீ மலர்ந்து பொலிவா யிருக்கும்வரைதானே உன்னை விரும்புவார்கள்! அழகு குறைந்து வாடும்போது புறங் கழித்து விடுவதன்றி வேறொன்றும் செய்வதில்லையே!

ரோசா : அரசர் விரும்புவதைவிட உன்னிடம் அப்படி மேலான தகுதி என்ன விருக்கின்றது? விளக்கிக் கூறு; பார்ப்போம்.

தாமரை : உலகில் பெரிய நோய் என்னவென்று உனக்குத் தெரியுமா?

ரோசா : தெரியாதே!

தாமரை : உன்னைப்போல் பகட்டாரவாரம் உள்ளவர்களுக்கு என்ன தெரியும்? சொல்லுகின்றேன், கேள் : உலகில் நாம் தோன்றுகின்றோமே அதுதான் பெரிய நோய். அதைப் பிறப்பென்னும் பிணி என்று பெரியோர் சொல்வார்கள். அந்தப் பிறப்பு என்னும் நோயைப் போக்க எல்லாம்வல்ல சிவபெருமானை மலர்தூவி வணங்க வேண்டும். அங்ஙனம் வணங்கி வழிபடுவதற்கு—வழிபாட்டிற்கு நான் பயன்படுகின்றேன். வழிபாட்டிற்கு நான் பயன்படுத்தப்பட்டு வாடிப்போன பிறகும் கடவுளன்பர்கள் என்னை மிகவும் பயபக்தியுடனும் மரியாதையுடனும் எடுத்துச் சென்று என் பழைய குடியிடமாகிய குளத்திலோ ஆற்றிலோ சேர்க்கின்றார்கள். அதனால் நூல்கள் எல்லாம் என்னைப்பற்றிப் புகழ்ந்து பேசுகின்றன! இது மேலான தகுதி.

ரோசா : இன்னும் என்ன மேலான தகுதியிருக்கின்றது?

தாமரை : மேல்நாட்டிற் பிறந்த நீ பிழைக்க வகையற்று—மதிப்பவரற்று எங்கள் நாட்டிற்கு வந்திருக்கின்றாய்? "நல்ல பசுவானால் உள்ளூரில் விலையாகும்" என்ற பழமொழி உன் பண்பினை வெளிப்படுத்துகின்றதே! நான் எல்லா இலக்கியங்களிலும் புகழப்படுகின்றேன். பொருள்

களின் பல பெயர்களை வரையறுத்துக் காட்டும் "சேந்தன் திவாகரம்" என்னும் எங்கள் செந்தமிழ் நூலில் எனக்கு இருபத்தொரு பெயர்கள் தொகுத்துக் காட்டுகின்றார்! அப்பெயர்களைக் கேள்: 1. புண்டரீகம், 2. பதுமம், 3. நளினம், 4. சரோருகம், 5. முண்டகம், 6. அம்போருகம், 7. அரவிந்தம், 8. பங்கயம், 9. அம்புயம், 10. வாரிசம், 11. சலசம், 12. கஞ்சம், 13. வனசம், 14. கோகனகம், 15. கமலம், 16. முளரி, 17. நீரோருகம், 18. திருமால் கொப்பூழ், 19. திருமலர், 20. இண்டை, 21. சதபத்திரி என்பனவாம். உனக்கு ரோசா என்ற ஒரு பெயர் தவிர வேறு பெயர் இல்லையே! இத்தனை பெயர் இலக்கியங்களில் ஏற எத்தனை யாண்டுகள் நான் மதிப்புப் பெற்று வாழ்ந்திருக்கவேண்டும்! அயல்நாட்டிலுங் கூட என்பெயர் இடம்பெற்றிருக்கிறது உன் பெயரோ நீ பிறந்த நாட்டு இலக்கியங்களிற்கூட இடம் பெறவில்லையே!

:ா: தகுதியில் நீயே பெருமை அடைந்துகொள். பிறருக்கு நான் உதவவில்லை என்று நினைக்கின்றாயே, உதவுவதைச் சொல்கின்றேன், கேள்: என் இதழ்களைத் தேனில் ஊறவைத்துப் பக்குவப்படுத்தி அதனை உண்டு வயிற்றுளைச்சல் நோய் பற்றப்பட்டவர்கள் அந்நோயிலிருந்து குணமடைகின்றார்கள். நானும் பிறர் நலம் பேணுகின்றேன் அல்லவா? என்னிடமிருந்து பனிநீர் எடுத்துப் பயன்படுத்துகிறார்கள். என்னிடமுள்ள சாரத்தை (எஸன்ஸ்) உணவுப் பொருளையும் மணம் பெறச் செய்கின்றார்கள். நான் வெளிநாட்டில் இருந்து வந்து குடியேறியவன் என்பதற்காக என்னை இகழ்ந்து பேசலாமா?

தாமரை: நீ செய்யும் இவ்வுதவி அத்தகைய பேருதவியாகச் சொல்ல முடியாது. அம்முறையில் உன்னைவிட வெந்தயம் முதலான பொருள்களும் மேலான உதவி செய்கின்றன. பனிநீர் வேறு மலர்களில் இருந்தும் எடுக்கிறார்கள். அங்ஙனமே பிற மலர்ச்சாரம் எடுத்து மணத்தைப் பெறுகிறார்கள்: ஆனால் என் முன்னவர்க

ளாகிய கிழங்குகளோ மருந்தாகப் பயன்படு நன்றிப் பசியினால் வருந்தும் ஏழை எளியவர்கட்கு மிக்க சுவை யளிக்கும் உணவாகவும் பயன்படுகின்றன! அன்றியும் உலகத்துக்கே ஒளி கொடுப்பவனும் எல்லாச் செயல் களுக்கும் ஆற்றல் கொடுப்பவனும், பலர் வணங்கத் தக்க நிலையில் இருப்பவனுமாகிய கதிரவனைக் "கமல நண்பன்" என்று சொல்லுகின்றார்கள்; "ரோசா நண்பன்" என்று சொல்லவில்லையே! "பொருளிலார்க் கிவ்வுலக மில்லை" என்பதனால் பொருளின் பெருமை தெரிகின்றாய்! அப் பொருள்களுக்குத் தெய்வமாகிய திருமகளுக்கு இருப்பிடமாயும், கல்விக்குத் தெய்வமாகிய கலைமகள் தங்கும் இடமாகவும் இருக்கும் பேறு பெற் றிருக்கின்ற என்னை நீ எங்ஙனம் உனக்கு ஒப்பாகச் சொல்லமுடியும்? மூன்றுலகத்தையும் ஒருவனாகி நின்று வென்ற திருமாலின் புதல்வனாகிய மன்மதன் தன் னுடைய ஐந்து அம்புகளில் ஒன்றாக வைத்துக்கொண் டிருப்பது உன்னையா? அல்லது என்னையா? உலகத் தைப் படைத்த பிரமன் என்மேல் அல்லவோ அமர்ந் திருக்கின்றான். பிரமனைத் தாங்கும் பேறு யார்க் கேனும் கிடைக்குமா? சிறந்த பெண்கள் ஆண்க ளுடைய முகம், கண் முதலிய உறுப்புக்களுக்கு என்னை உவமை கொடுத்துப் புலவர்கள் வருணிக்கின்றார்கள். ஆகையால் இதுகாறும் நான் கூறியவைகளினால், நல்ல குடிப்பிறப்பும், நல்லிடத்துச் சேர்க்கையும், நன்னடக்கையும், பலருக்குப் பலவகைகளில் உதவும் பண்பும் என்னிடத்தில் இயற்கையாக இருப்பதனால் நல்ல புகழும் பெருமையும் அடைந்திருக்கின்றேன் என்பது அங்கை நெல்லியென விளங்குகின்ற தல்லவா? அறிவுடையவர்களால் பொருளும் அழகும் ஒரு பொருளாகக் கருதப்படமாட்டா. ஒன்றாக நன்றான புகழைத் தருவது நற்குணம் ஒன்றுமே. ஆகையால் என்னைப் "பூவிற்குத் தாமரையே!" என்று அறிஞர் கள் புகழ்ந்திருக்கின்றார்கள். இது ஒன்றே என் சிறப் பைக் காட்டும் அன்றோ?

ரோசா: சிறந்த தாமரைப் பூவே! பிறரிடம் உள்ள நற்குணங் களை ஆராயாது தம் பெருமையையே அருமையாக எண்ணித் தருக்குற்று, குறைகுடம்போல் கூத்தாடும் பேயர்களைப் போன்று மாறுபட்ட கருத்துக்களும் சொற் களும் கூறி உன் உள்ளத்தைப் புண்படுத்தினேன். உன் தெளிவுரைகளைக் கேட்டு அறிவுத் தெளிவடைந் தேன்! தெரியாமல் நான் உரைத்த புன்மொழிகளைப் பொருட்படுத்தாது மன்னித்தருள வேண்டுகின்றேன்.

தாமரை: நின் தவற்றைத் "தவறு" என்று நீ எப்பொழுது உணர்ந்தாயோ, அப்பொழுதே என் உள்ளமும் உன்னை மன்னித்துவிட்டது.

## ௧௨. ஒரு வணிகனுங் குறளியும்

[மறைத்திரு. மறைமலையடிகள்]

வாணிகஞ்செய்து பெரும்பொருள் தொகுத்த ஒரு வணிகன், தான் தொகுத்த அப் பெரும்பொருளளவில் அவா அடங்கப்பெருனய், மேலும் மேலும் இன்னும் பொருள் திரட்டுதற்கு வழி யாது? என்று அல்லும் பகலும் எண்ணிக் குறிசொல்வாரையும் மந்திரகாரரையும் வினவி வந்தனன். தான் பெரும் பொருள் திரட்டிக் கொள்வதற்கு வழிகாட்டுபவனுகத் தன்னுற் கருதப்பட்ட எந்தக் குறி காரனைக் கண்டாலும், எந்த மந்திரகாரனைக் கண்டாலுஞ், செம்பைப் பொன்னுக்கும் எந்த இரசவாதியைக் கண்டா லும் அவர்கட்கெல்லாந் தனது பொருளை வாரிவாரிக் கொடுத்துவந்தான். அங்ஙனந் தன் பொருளையெல்லாம் அவர்கட்காகச் செலவழித்து வந்தனனே யல்லாமல், அவர் களால் ஓர் இம்மியளவு பொன்னுவது இயற்கைக்கு மாருகப் பெறும்வழி ஏதுந் தெரிந்தானில்லை. தொடர் பாகத் தன் பொருளெல்லாம் இங்ஙனந் தொலைந்து போவதை இவன் தன் கண்ணெதிரே கண்டு வைத்துந் தக்கதல்லாவழியிற் பொன்பெறுதற்குத் தான்கொண்ட பேரவாவை இவன் சிறிதும் விட்டானில்லை. கடைசியாக இவனிடம் வந்த ஒரு மந்திரகாரன் குறளியை யழைத்து ஏவல்கொள்ளும் மந்திரமுறை தனக்குத் தெரியுமென்றும், அதனை வசப்படுத்திக்கொண்டால் அதன் உதவியால் திரள் திரளாகப் பொன்பெறலாமென்றுங் கூறித், தான் கூறியதை மெய்ப்படுத்தப் பலவகைப் பழங்களும், உணவுப்பண்டங் களும் இடைவெளியினின்றும் வருவித்துக் காட்டி, அவ் வணிகனுக்கு மிக்கதோர் இறும்பூதினை உண்டாக்கினுன். தான் பாடுபட்டுத் தேடிய பெரும்பொருளையெல்லாம் நாளடைவில் இவ்வழியே தொலைத்துவிட்ட அவ் வணிகன், இனித்தான் தனக்கு நல்லகாலம் வரப்போகின்றதெனக் கருதி, மிச்சமிருந்த பொருளையும் அம் மந்திரகாரனுக்குக் கொடுத்துக், குறளியை யழைக்கும் மந்திரத்தை அவனிட மிருந்து கற்றுக்கொண்டான்.

அவன் அதனைக் கற்று உருவேற்றவே, குறளிப்பேய் அவனிடம் போந்து, இறைச்சியும் இரத்தக்காவுந் தான் வேண்டும்போதெல்லாந் தனக்குக் கொடுத்தால் அவன் ஏவியது செய்யலாம் என்றது. அங்ஙனமே அவன் ஆடு மாடு பன்றி முதலிய விலங்குகளின் ஊனுங் குருதியும் மிகுவிலைகொடுத்து வாங்கி அக் குறளிக்குச் சிலநாட்கள் வரையிற் காவுகொடுத்து வந்தான். அவன் தனக்கு வேண்டிய பண்டங்களைக் கொணர்ந்து தரும்படி அப் பேயைக் கேட்ட காலங்களிலெல்லாம், அஃது அப் பண்டங் களின் விலையைக் கொடுத்தா லல்லாமல் அவைகளைக் கொண்டுவருதல் தன்னால் இயலா தென்றது. அதன்மேல் அவன் அப் பண்டங்களின் விலையைச் சிலமுறை கொடுக்க, அஃது அவ் விலைப்பொருளை அப் பண்டங்கட்கு உரியவன் பாற் சேர்ப்பித்து, அப் பண்டங்களை ஒரு நொடிப் பொழுதி லெல்லாங் கொணர்ந்து சேர்ப்பித்தது. இதனைக் கண்ட அவ் வணிகன், ஒரு வேலைக்காரன் செய்யும் வேலையை விரைந்து அஃது ஒரு புதுமையான வகையிற் செய்யும் அவ் வளவேயன்றி, அதனால் வேறு ஏதொரு பயனும் உண் டாகாமையும், ஒரு வேலைக்காரனுக்குக் கொடுக்குஞ் சம்பளத் திலும் பதின்மடங்கு மிகுதியான பொருள் அக் குறளிக்கு அடுத்தடுத்து வேண்டும் ஊனுக்குங் குருதிக்குங் கள்ளுக் குஞ் செலவாகுதலையுங் கண்டு மிகவுங் கவலை கொள்வா னானான். பலநாள் இங்ஙனம் வருந்திப் பின்னர் ஒருநாள் அக் குறளிக்கு வேண்டும் உணவு கொடுத்துத், தனக்குப் பெரும்பொருள் கொணர்ந்துதரும்படி அதனை வேண்டி னான். அதற்கு அக் குறளி, பிறர்க்குரிய பொருளைக் கவர்ந்து கொடுத்தல் ஆவியுலகில் உலவும் எந்த உயிர்க்கும் இயலாதென்றும், ஆனாலும் இம் மண்ணுலகில் உயிரோ டிருந்த காலத்தில் தான் தேடிக் குவித்த பெரும்பொருளை நிலத்தின்கீழ்ப் புதைத்துவைத்து மாண்டுபோன ஒருவ னது ஆவி அப் புதையலை எவரும் எடாதபடி காத்து நிற்கின்றதாகலின் அதனை வேண்டினால் அஃது அப் பொருளைத் தரக்கூடு மென்றும் நுவன்று அவ் ஆவியையும் அவன்பால் அழைத்துவந்து விட்டது. பொருள் அவா

னுற் பிடியுண்ட அவ்வாவி பெருங்கவலையும் பெருந்துன்ப மும் உடையதாய்ப் பார்ப்பதற்குப் பேரச்சத்தை விளைக்கும் இருண்ட கொடிய உருவுடன் அவன் முன்னே நள்ளிரவிற் றோன்றி அலறலாயிற்று. அதனைக் கண்டதும் பெருந் திகில்கொண்ட அவ்வணிகன் தன் இருகண்களையும் மூடிக் கொண்டு அசைவற்ற மரம்போல இருந்தனன். அதுகண்ட குறளி, "யான் அழைத்துவந்த அவ்வாவிக்கு நின்கருத்தை அறிவித்து அது வேண்டியது செய்யாவிட்டால் நினக்கு அது தீது செய்யும்" என்று உரைக்க, அவன் ஒருவாறு மனந்தேறி, "நீ வைத்திருக்கும் புதையலை எனக்குத் தருவையோ?" என வினவினான். அச்சொற் கேட்டதும் அது மிகவுஞ் சினங்கொண்டு அலறி, "கருக்கொண்ட ஓர் அழகிய மங்கையை யான் புதையல் வைத்திருக்கும் இடத்திற் கொணர்ந்து வெட்டிக் காவு கொடுத்தால், அதனை நீ எடுத்துக்கொள்ள விடுவேன்" என்று சொல்லி மறைந்துபோயிற்று.

அச்சொற்கேட்ட பொருட்பேயனான அவ் வணிகன் தனக்குப் பெரும்புதையல் கிடைக்கப்போவதை யெண்ணிப் பெருமகிழ்ச்சியும், ஆனால் அதற்காகக் காவு கொடுக்கும் பொருட்டுக் கருக்கொண்ட அழகிய ஒரு மங்கையை எங் ஙனந் தேடிப்பிடிப்ப தென்பதை நினைந்து பெருங் கவலையுங் கொண்டவனாய், அதைப்பற்றிப் பேசும்பொருட்டு, உறங்கிக் கிடக்குந் தன் அழகிய மனையாளை யெழுப்பினான். அவள் திடுமென அச்சத்துடன் எழுந்து யாதுசெய்தி? என வினவச், சிறிது நேரத்திற்குமுன் நிகழ்ந்த அந் நிகழ்ச்சி யைச் சொல்லிக், கருக்கொண்ட அழகிய பெண் ஒருத்தியை எங்கே எப்படிப் பெறலாம் என அவளைக் கேட்டான். அந் நிகழ்ச்சியைக் கேட்ட அம் மாது பெருந்திகில் கொண்ட வளாய்த், தன் கணவன் தான் பாடுபட்டுத் தேடிய பெரும் பொருளையெல்லாந் தனக்குள்ள பேரவாவினால் தொலைத்து விட்டு வறுமைப்படுதலையும், மீண்டும் பெரும்பொருள் பெறும்பொருட்டுத் தகாத வழியில் அவன் முயலுதலையுந், தான் அழகில் மிக்கவளாய்ச் சூல்கொண்ட வயிற்றினளாய் இருத்தலையும் நினைந்து, கருக்கொண்ட வேறு ஓர் அழகிய

மாது கிடைத்திலளாயின் தன் கணவன் தன்னையே வெட்டிக் காவுகொடுக்கப் பின்வாங்கானென நடுங்கினாள். அந் நடுக்கத்தை யுணர்ந்த அவன் அவளுக்கு அது நீங்குமாறு ஆறுதல் சொல்லி, எங்காயினும் ஓர் ஏழைப்பெண்ணைத் தேடிப்பிடித்து அவளால் தான்கொண்ட கருத்தை முடித்துக்கொள்வதாக உறுதிமொழி புகன்றான். ஆனால் உண்மையில் அவன் மனையாள் எண்ணியபடி அவளையே அப் பேய் குறிப்பிட்ட இடத்திற் கொண்டுபோய் வெட்டிக் காவுகொடுத்து அப் புதையிலை யெடுத்துக்கொள்ளவே தனக்குள் தீர்மானஞ் செய்தான். பிறகு சிலநாட்சென்றன. சென்றபின் ஒருநாளிரவு தன் மனையாளை யழைத்துச், சூல் கொண்ட அழகிய ஓர் ஏழைப்பெண் தனக்குக் கிடைத்திருக்கின்றன ளென்றும், அவளை இந் நள்ளிரவிற் கொண்டு போய்க் குறிப்பிட்ட இடத்திற் காவு கொடுத்தவுடனே கிடைக்கும் பொற்றிரளைப் பிறர் அறியாமல் வீட்டிற் கொணர்ந்து சேர்ப்பித்தற்கு நீயும் என்னுடன் வந்து உதவிசெய்ய வேண்டுமென்றும் அவளைக் கெஞ்சிக் கேட்டுத் தன்னுடன் செல்லும்படி வேண்டினான். ஏழைப்பெண் கிடைத்ததென்பது பொய்ம்மொழியே யென்றுந், தன்னையே தன் கணவன் அங்ஙனங் காவுகொடுக்கப் போகின்றனனென்றும் அவன் மனையாள் உள்ளுணர்ந்து கலங்கினளாயினும், அவன் சொல்லுக்கு மாறுசொல்ல வகையறியாளாய்த், தெய்வம் விட்டபடி ஆகுகவென்று மனந் துணிந்து, அந் நள்ளிரவில் அவனுடன் அவன் குறிப்பிட்ட இடத்திற்குப் போயினாள்.

அவ்விருவரும் போய்ச்சேர்ந்த இடம் இடிந்து பாழாய்க் கிடக்கும் ஒரு பெரு வீடு ஆகும். அஃது அவர் இருக்கும் ஊருக்கு ஒருகல் தொலைவில் நாகதாளிப் புதர்களுக்கிடையே இருந்தது. அதற்கு அருகாமையிற் சுற்றி இருப்பைமரத் தோப்பு ஒன்று இருந்தது. அவர்கள் புறப்பட்ட அந்நாள் முன்நிலாக் காலத்ததாதலால், அவர்கள் வீட்டை விட்டுச் செல்கையிற் சிறிது நிலவொளி காணப்பட்டது. அவர்கள் அவ் இடிந்த வீட்டண்டை வந்ததும் நிலவொளி மறைந்துபோயது. அப் பாழிடத்தில் இருள்

மிருந்திருந்தமையால் அவ் வணிகன் தன் கையிற் கொண்டு சென்ற ஒருசிறு கண்ணுடி விளக்கை ஏற்றினன். அச்சந் தரும் அவ் விடத்தைச் சுற்றி எத்தகைய மக்களும் இயங்காமல் ஓவென்றிருத்தலேயுந், தன் கணவனது எண்ணத்தையுங் கண்டுணர்ந்த அப் பெண்ணின் துணையற்ற உள்ள நிலை அந்நேரத்தில் எத்தகையதாயிருக்கு மென்பதை நாம் சொல்வதைவிட இதனைப் பயில்வோரே உணர்ந்து பார்த்தல் வேண்டும்! அவள் ஏறக்குறைய உயிரற்ற மரப் பாவையே யானுள். தன் கணவனைத் திகிலொடு நோக்கி, "நீங்கள் சொல்லிய ஏழைப்பெண் எங்கே?" என நாக்குழறிக் கேட்டாள். அதற்கவன், "இதோ சிறிதுநேரத்தில் வருவாள்!" என்று சொல்லியபடியாய்த், தான்கொணர்ந்த ஒரு பெட்டகத்தைத் திறந்து, அப் பேய்க்குப் படைத்தற் காகக் கொண்டுவந்த கள்ளுங் கருவாடும் புகையிலேயுந் தென்னம்பாளைப்பூவும் எல்லாம் எடுத்துவைத்துக், கடைசியாகப் பளபளவென மின்னுங் கருக்கான ஒரு வெட்டரிவாளையும் எடுத்து வைத்தான். அவன் மனையாளாகிய அவ் வேழைப் பேதை பின்னதைக் கண்டதும் முக்கால்வாசி உயிர் நீங்கிய உடலத்தினளாய் நிலத்திலே அயர்ந்து விழுந்தாள்.

இந் நேரத்தில் எவரோ ஒருவர் வரும் அரவந் தென்பட்டது. அஃதுணர்ந்த அவ் வணிகன் தன் நோக்கத்திற்கு இடையூருக வருவார் எவரென அச்சத்துடன் சுற்றிப் பார்த்தான். அருள் ஒளி ததும்புந் திருமுகமும், நீண்ட சடைமுடியும், நீறுதுலங்கும் நெற்றியும் உடையராய்க் காவியாடை பூண்ட ஒரு துறவி தன்பால் விரைந்துவரக் கண்டான். கண்ட ஒரு நொடிப்பொழுதிலெல்லாம் அவர் அவனை அணுகி, "அடா பேதாய்! கருக்கொண்ட அழகிய நின் அருமை மனையாளைப் பாழும் பொருளுக்காக வெட்டிப் பலிகொடுக்கத் துணிந்தனையே! உன்னைப்போல் அறிவில்லாத் தீய கொடிய பொருட்பேய் வேறுண்டோ! நீ நின் மனையாளைப் பலிகொடுத்தவுடனே உன்னை இரண்டு துண்டாய் வெட்டி வீழ்த்தி, நீயெடுத்த புதையலைக் கொண்டுபோகக் கொடிய கள்வர் சிலர் இதோ வந்துகொண்டிருக்கின்றனர்!

இதோ தோன்றும் இருப்பைமரத்திற்போய் ஏறிக்கொள்! தாழாதே! நின்மனையாளை யான் வேறு ஓரிடத்திற் கொண்டு போய் மறைத்துவைத்து, அக் கள்வர் திரும்பிச்சென்றதும் அவளை மீண்டும் நின்பாற் சேர்ப்பிக்கின்றேன்" என விரைந்து அருளொடு மொழிந்தார். அப் பெரியாரின் அமுதவுரை செவியிற் பட்டதும் போனவுயிர் மீளப்பெற்ற அவ் வணிகன்றன் மனைவி திடுமென எழ, அவர் அவளை அழைத்துக்கொண்டு சடுதியில் மறைந்துபோயினர். அவ் வணிகனுந் திகில்கொண்டவனாய் அவ்விடிந்த இல்லத் திற்குச் சிறிது எட்டியிருந்த இலையடர்ந்த ஓர் இருப்பை மரத்தண்டை விரைந்தோடி அதன்மேல் ஏறிக்கொண்டான்.

அவன் அங்ஙனம் ஏறிக்கொண்ட சில நொடிப்பொழுதி லெல்லாம் நாலைந்து கொடிய கள்வர்கள் கண்டவர் கலங்கத் தக்க கரிய திண்ணிய வடிவினராயுங், கூரிய கொடுவாள் பிடித்த கையினராயும் விரைந்துபோந்து, அவ்விடிந்த பாழ் வீட்டிலே அவ் வணிகன் விளக்கும் மற்றைப் பொருள் களும் வைத்துப்போன இடத்திற் புகுந்து நின்றனர். அவ் விடத்திற்குச் சிறிது தொலைவிலே இருப்பை மரத்தின்மேல் ஏறியிருந்த அவ் வணிகன், தான் அங்குவைத்த விளக்கு வெளிச்சத்தின் உதவியால் அக் கள்வர்களையும், அவர்களது இயக்கத்தையும், அதன் அண்மையிற் கண்டு, வெருக் கொண்டு, "ஐயோ! அருளுடைய அத்துறவியார் சில நொடிப்பொழுதுமுன் வராதிருந்தால் என் அருமை மனைவியையுந் தீவினையேன் கொன்றிருப்பேன்! அவளைக் கொன்ற சிறிது நேரத்திலெல்லாம் யானும் இக்கொடிய கள்வர்களாற் கொல்லப்பட்டிருப்பேன்! என் மனைவியும் யானும் மடிந்தபின் பொருளோ பொருளென்றலைந்த எனது தீய அவா எப்படியாம்! பொருளவாத் தொலைந்த அத் தூய பெரியவரால் அன்றோ என் மனைவியும் யானும் உயிர்பிழைத் தேம்! யான் தீவினைக்குத் தப்பினேன்! அப் பெரியாரை இந்நேரத்தில் விடுத்த சிவமே நீதான் எமக்குப் பெருஞ் செல்வம்!'' என்று நெஞ்சம் நீராய் உருகிக் கண்ணீர் உகுத் தான். அவ்விடத்திற் போந்து நின்ற கள்வர்கள் அன் றிரவு விடியுமட்டும் அங்கிருந்து, அவ் வணிகனையும் அவன்

மனைவியையுங் காணுமல், காக்கை கரையக் கேட்டு, அங் கிருந்த விளக்கு, அரிவாள், பெட்டகம் முதலியவைகளை யெடுத்துக்கொண்டு போய் ஒழிந்தனர்.

காலையிற் கதிரவன் தோன்றினன். அத் துறவியாரும் அவ் வணிகனின் மனைவியை அழைத்துக்கொண்டு அவன் ஏறி இருந்த இருப்பைமரத்தண்டை வந்தார். அவரது அருமைத் திருவுருவைக் காண்டலும் அவன் அம் மரத்தி லிருந்து கீழிறங்கிப்போந்து அவர் திருவடிகளில் வீழ்ந்து தேம்பித் தேம்பி யழுது, "தீவினையேனைக் காக்கப்போந்த தெய்வப்பெருமானே! தேவரீர் செய்யாமற் செய்த அருளுத விக்குப் பாவியேன் எங்ஙனம் நன்றி செலுத்த வல்லேன்! எவ்வாறு தேவரீரை வாழ்த்துவேன். வணங்குவேன். யானும் என் மனைவியும் என் மக்களும் என் வழியுமெல்லாந் தேவரீர் திருவடிக்கே அடிமை!" என்று கண்ணீர் ஆருய்ப் பெருக அழுதழுது உரைத்தான்.

அதுகண்ட அப் பெரியார் "மகனே! நீ யுள்ளந் திருந் தியதற்கு மகிழ்ந்தேன்! உயிர்மீண்ட நின் அருமை மனைவி யைத் தழுவிக்கொள்! இந் நல்லாளினும் இவள் வயிற்றிற் பிறக்கும் மக்களினுஞ் சிறந்த செல்வம் உனக்கு வேறுளதோ? இவளையும் இவள் மக்களையும் நின்னையும் ஏழை யெளியவர் களையுங் கற்றாரையுந் துறந்தாரையும் ஓம்புதற்கே செல்வம் வேண்டுமல்லாமல், இவர்களை இழத்தற்கா அது வேண்டும்? நல்லெண்ணமும் நன்முயற்சியுமிருந்தால் உனது வாழ்க் கைக்கு வேண்டுமளவு செல்வஞ் சிவத்தினருளால் உனக்குத் தானே திண்ணமாய் வரும்! இனிப் பொருளில் அவா வையாதே! நீ இப்போதிருக்கும் இல்லத்தில் மீண்டும் அக் கள்வர்கள் புகுந்து நின்னைத் துன்புறுத்தக் கூடுமாதலால், நீ அதனைவிட்டு, வேறோர் ஊரில் வேறோர் இல்லிற் குடி புகுந்து, நின் வாழ்க்கையை அன்புக்கும் அறத்திற்கும் இட மாக நன்கு நடத்து!" எனச் சொல்லிச், சடுதியில் அவனை விட்டு மறைந்தேகினர். அவ் வணிகனுந் தன் மனையா ளுடன் அவர் கற்பித்த வண்ணமே வேறோர் ஊரிற்சென்று வைகி நன்கு வாழ்ந்தனன்.

## ௧௩. கோகினூர் வைரத்தின் வரலாறு

[திரு. தி. சங்குப்புலவர்]

உலகத்தில் இயல்பாக இரத்தினங்களை எண்ணும் போது வைரம், வைடூரியம், மாணிக்கம், மரகதம், இந்திர நீலம், கோமேதகம், புருடராகம், பவளம், முத்து என்று வைரத்தையே முதலில் வைத்து எண்ணுகிறோம். அதனால் எல்லா மணிகளிலும் வைரம் உயர்ந்தது என்பது நன்கு விளங்கும்.

இவ் வைரமணி எல்லாப் பொருள்களிலும் உறுதி யானது. அதனால் அது வச்சிரம் எனப் பெயர் பெற்றது. வைரத்தினால் மற்ற மணிகள் எல்லாவற்றையும் துளைக்க லாம். வைரத்தைத் துளைப்பதற்கும் அவ் வைரவூசியே வேண்டும். மற்றொன்றினாலும் அறுக்கவோ துளைசெய்யவோ முடியாது. மக்களில் மறையோர், மன்னர், வணிகர், வேளாளர் என நால்வகைக் குலம் இருப்பதுபோல வைரத் திலும் நான்கு வகை உள்ளன என்பார். மல்லிகைப் பூப் போல வெண்ணிறமுடையது மறையோர் குலம் என்றும், கொன்றைப்பூப்போலப் பொன்னிறமுடையது மன்னர்குலம் என்றும், வாழை மடல்போலச் செந்நிறமுடையது வணிகர் குலம் என்றும், சாணையில் வைத்துத்தீட்டிய இரும்புக் கத்தி போலக் கரிய ஒளி நிறமுடையது வேளாளர் குலம் என்றும் நூல்களிற் கூறப்படுகின்றன. காந்திபேதம், காகபாதம், தாரகம், புள்ளி, இரேகை என்னும் ஐந்தும் குற்றம் என் றும், எட்டுப்பலகையும், ஆறுகோடியும், தாரையும், சுத்தியும் தராசமும் ஆகிய ஐந்தும் குணம் என்றும் கூறுவர். குற்ற முள்ள வைரத்தை நீக்கிக் குணமுள்ளவற்றை அணிவோர், செல்வம் பெருகிப் பகை நீங்கி உடல் நலமும் நீண்ட வாழ் நாளும் பெற்றுப் புகழ்பரவ வாழ்வார் என நூல்கள் கூறும்.

முற்காலத்தில் வைரங்கள் நம் இந்தியாவில் கோல் கொண்டாக் கனிகளில் சிறப்பாக எடுக்கப்பட்டன. தற்காலத்

தில் போர்னியோ, பிரஜீல், தென்னாப்பிரிக்காவில் உள்ள கிரிக்குவாலாண்டு, டிரான்ஸ்வால் என்னும் நாடுகளில் மிகுதியாக எடுக்கப்படுகின்றன. கனியிலிருந்து வைரம் எடுக்கப்படும்போது ஒளியின்றிக் கூழாங்கல்லைப் போலத் தோன்றும். சாணையில் வைத்துத் தேய்த்தபின்தான் ஒளி பெற்று மணியென யாவர்க்கும் தெரியும்படி விளங்கும். வைரக்கல் இயற்கையாக மிகவும் சிறியவையாகத்தான் இருக்கும். பெரியவை அகப்படுவது அருமையினும் அருமை. எங்கும் புகழ்பெற்ற பெரிய வைரங்கள் உலகில் ஏழு அல்லது எட்டுக்குமேல் இல்லை. "உலகம் புகழ் வைரம்" என்பது அவற்றின் பெயர். எழுபத்தைந்து மஞ்சாடி அல்லது நூறு காரெட்டு எடைக்கு மேற்பட்டனவெல்லாம் அப் பெயர்பெறும். மிகப்பெரியது போர்த்துக்கல் தேசத்து மன்னன் இடத்தில் உள்ளது. அவ் வைரத்தின் எடை ஆயிரத்தறுநூறு காரெட்டு; விலை மதிப்பு 224 கோடி வெண் பொற்காசு. அடுத்தது ருசியா சக்கரவர்த்தியின் செங்கோலில் இருக்கும் வைரம். அது எழுநூற்றெழுபத்தொன்பது காரெட்டு எடை, நான்கு கோடி வெண்பொற்காசு விலை மதிப்புப்பெற்றது. பிட் வைரம் எனப் பெயர் பெற்றது ஒன்று. மிகவும் ஒளியுள்ளது இது; கோல்கொண்டாக் கனியிலிருந்து எடுக்கப்பட்டது. இதனை முதலிற் சென்னை மாநில ஆளுநர் (கவர்னர்) பிட் என்பவர் முதலில் வாங்கினார்; பின்னர் அது ஜெர்மன் சக்கரவர்த்தியிடம் சேர்ந்து விட்டது. அதன் எடை நூற்று முப்பத்தெட்டுக் காரெட்டு. விலை ரூபா நாற்பத்தெட்டு நூறாயிரம் என்பர்.

உலகம் புகழ் வைரங்களிற் "கோகினூர் வைரம்" என்பதும் ஒன்று. இதன் வரலாறு மிகவும் வியப்பானது. பழங் கதைகள் இன்ன காலத்தில் இன்ன இடத்தில் எடுக்கப் பட்டது என எவரும் அறியார் என்றும், பாண்டவர் அணிந்திருந்தனர் என்றும், அங்கநாட்டு மன்னன் ஆகிய காமன் அணிந்திருந்தான் என்றும் பலவாறு கூறுகின்றன. சரித்திரவாயிலாய் ஆராய்வோம்.

இது பதின்மூன்றாம் நூற்றாண்டிற் கோல்கொண்டாவில் உள்ள கிருஷ்ணா நதிக்கரையிற் கொல்லூர்க் கனியில் எடுக்

கப்பட்டது. அந்நாட்டு மன்னரே நெடுநாள் அதனை வைத்திருந்தனர். பதினேழாம் நூற்றுண்டில் அப்துல்லா என்பவன் அரசுபுரிந்தான். அம் மன்னனுக்கு முதல் அமைச்சனுகவும் படைத்தலைவனுகவும் பாரசீக தேசத்தான் ஒருவன் வந்து சேர்ந்தான். அவன் பெயர் "மியர்ஜம்லா'' என்பது. அவன் வஞ்சகம், சூழ்ச்சி, அறிவு, ஆற்றல் உடையவன். தனக்குரிய செயல்புரிந்து பொருள் ஈட்டியதும் அன்றி நவமணி வணிகமும் செய்து பொருளீட்டினன். இந்தியாவில் உள்ள கோயில்களை இடித்து உருவச்சிலைகளை யுடைத்தும் அளவற்ற பொருளைக் கொள்ளை கொண்டான். பின் அரசனுக்கு உட்பகையாயிருந்து பொருளையும் கவர்ந்தான். கோகினூர் வைரமும் அவன்பால் வந்து சேர்ந்தது.

பதினேழாம் நூற்றுண்டில் மொகலாய சக்கரவர்த்தியாக டில்லி நகரில் ஷாஜஹான் அரசு புரிந்தான். அவன் மைந்தன் ஔரங்கசீப் என்பவனை "மியர்ஜம்லா" நட்புக்கொண்டு தன் அரசனேடு பகை விளைத்தான். அவனைத் தொலைத்துவிடக் கருதி ஷாஜஹானிடம் கோகினூர் வைரத்தைக் கொடுத்து இதுபோன்ற வைரங்கள் பல அப்துல்லா அரசனிடம் உள்ளன என்று கூறிப் போர் தொடங்குமாறு வழிகாட்டினன்.

இவ்வாறு ஷாஜஹானுக்குக் கிடைத்த வைரத்தைச் சாணையில் வைத்துக் கடைந்து மிகவும் ஒளியுள்ளதாக்கும் பொருட்டு வெனிஸ் நகரத்தான் ஒருவனிடம் கொடுத்தான். அவ் வைர வேலைக்காரன் கண்டபடி வெட்டிச் சிதைத்து நான்கில் ஒன்ருகக் குறைத்து ஒளியும் தெளிவும் இல்லாத பருக்கைக் கல்லைப்போல் ஆக்கிவிட்டான். அதுகண்ட சக்கரவர்த்தி அவனுக்குப் பதினுயிரம் வராகன் கொடுக்கும்படி தண்டனை விதித்தான்.

பின்னர் அவ் வைரத்தை ஒருவாறு வைரப் பணியாளரைக்கொண்டு செவ்வையாக்கினன். தான் அமர்ந்து அரசுபுரியும் ஆசனத்திலுள்ள மயிலுருவத்திற்கு ஒரு கண்ணுகப் பதித்து வைத்தான். இம்முறையில் மொகலாய மன்னர் மயிலாசனத்தில் நெடுங்காலம் இருந்தது அது.

பின்பு 1739 ஆம் ஆண்டில் மகம்மதுஷா என்பவன் டில்லி அரசனாக வந்தான். பாரசீக மன்னனான நாதிர்ஷா என்பவன் இந்தியாவின்மேற் படையெடுத்து வந்தான். மகம்மதுஷா மன்னனுடன் போர்புரிந்து வெற்றியடைந்தான். தோல்வியுற்றிருந்த மகம்மதுஷா மன்னன் அரண்மனையில் நுழைந்து பொருள்களையெல்லாம் கொள்ளை கொண்டான். என்ன என்ன பொருள்கள் வேண்டுமோ அவைகளையெல்லாம் எடுத்துக்கொடுத்து நாதர்ஷா மன்னனை நட்புக்கொண்டான் மகம்மதுஷா. அப்போது தம் உயிரினும் சிறந்ததாக மதித்து வைத்திருந்த கோகினூர் வைரத்தைத் தலைப்பாகைக்குள் முடிந்து ஒளித்துவைத்தான். பெட்டி பேழைகளில் இருந்தால் நாதர்ஷா கண்டெடுத்துக் கொள்வான் என்பது கருத்து. அங்ஙனம் மறைத்தும் இழக்கவேண்டியது நேர்ந்தது.

வைரத்தைத் தலைப்பாகையில் ஒளித்து வைத்திருப்பதையுணர்ந்த ஒருவன் நாதர்ஷாவுக்குக் கூறினன். அம்மணியைக் கவரச் சூழ்ச்சியெண்ணினன். மகம்மதுஷாவை நோக்கி, "நாம் இருவரும் நண்பராக இருப்பதற்குப் பொருத்தமாக ஓரிடத்தில் விருந்துண்ணவேண்டும்" என்று அன்போடு அழைப்பதுபோல் அழைத்து உடனிருந்துண்டனர். உண்டபின்னர், "நட்பு நிலைத்திருக்கும்படி தலைப்பாகையை மாற்றிக்கொள்வோம்," என்று நாதர்ஷா கூறினான். மகம்மதியர்களுக்குத் தலைப்பாகை மாற்றுவதென்பது மேலான பெருமை. இப்பெருமையை வேண்டாம் என்று எப்படிக் கூறுவான் மகம்மதுஷா? மதிப்பாகத் தலைப்பாகையை எடுத்துக்கொடுத்தான் முதலில். அத் தலைப்பாகையுள் ஒளித்துவைத்திருந்த வைரம் நாதர்ஷா முடிமேல் ஏறி நின்றது. ஊமை கண்ட கனாப்போல மகம்மதுஷா ஒன்றும் உரையாது சென்றான். நாதர்ஷா அம்மணியை யெடுத்துப் பார்த்தான். எங்கும் ஒளி வீசி மலைபோல ஒளியுயர்ந்து பரவி நிற்கக் கண்டான். ஒளி மலை என்று பொருள்படும் கோகினூர் என்ற பெயரிட்டான் அதற்கு.

பின் சில ஆண்டுகள் சென்றன. நாதர்ஷா கொலையுண்டிறந்தான். ஆப்கான் தேசத்து அரசன் அகமதுஷா அப்தாலி கையேறியது அவ் வைரம். பின்னர் அம் மன்னவன் வழித்தோன்றிய பலரிடம் முறையே இருந்தது. அவர்களில் ஒருவனாகிய காபூல் அரசன் ஷாசூஜாவின் வசம் இருக்கும்போது அவன் தம்பி அரசுரிமையைக் கைப்பற்றி நாட்டைவிட்டுத் துரத்தினன். அரசிழந்த ஷாசூஜா லாஹோர் மன்னன் ஆகிய ரஞ்சிதசிங்கு என்பவனிடம் சரண் புகுந்தான். அவ் வைரமணி அவன்பால் இருப்பது தெரிந்து அவனை ஏற்றுக்கொண்டான். அவன் மனைவி "ஷா-பீகம்" என்பவளும் 'என் கணவனைக் காப்பாற்றினல் அவ் வைரத்தை நானே தருகிறேன்' என்று ரஞ்சிதசிங்கிற்கு வாக்குறுதி தந்தாள். ரஞ்சிதசிங்கு தன் அரண்மனையில் இருத்திப் பகைவரால் ஒரு தீங்கும் நேராவண்ணம் காத்து வந்தான். கணவனும் மனைவியும் தாம் கூறியபடி அதனைக் கொடுக்காமல் காலங்கடத்தினர். ரஞ்சிதசிங்கு விடாப்பிடியாக வற்புறுத்திக் கேட்டான். இன்ன நாளிற் கொடுக்கிறேன் என்றுகூறி அம்மணியைப்போல ஒன்று விலைக்கு வாங்கிக் கொடுத்தான். சூழ்ச்சியறியாது வாங்கிய ரஞ்சிதசிங்கு மணி வணிகன் ஒருவனிடங் காட்டினன். அவன் "இது போலி வைரம்; கோகினூர் வைரம் அன்று. ஏமாற்றிக் கொடுத்துவிட்டான். ஒன்றுக்கும் உதவாத உடைசற் பளிங்குக் கல் இது'" என்று உண்மையை யுரைத்தான். ரஞ்சிதசிங்கு கோபத்துடன் எழுந்தான். ஷாசூஜாவின் மனையை முற்றுகையிட்டான். வருவதை யறிந்து அதனைச் சாம்பர் குப்பைக்குட் புதைத்துவிட்டான். எங்கும் தேடிக் கண்டெடுத்துக்கொண்டு வந்தான். தன் வாகுவலயத்திற் பதித்து வாழ்ந்திருந்தான் நெடுநாள். பின்பு அவனும் இறந்தான். லாஹோர் நாடு சீக்கியர் கைவசம் சேர்ந்தது. வைரமும் அவர்பால் வந்தது.

ஆங்கிலேயர் சீக்கியர்களோடு போர்புரிந்து நாட்டைக் கைப்பற்றினர். வைரமும் ஆங்கிலேயர் வசம் வந்து அமர்ந்தது. கிழக்கு இந்தியக் கூட்டுறவு ஆங்கிலேயர்

அனைவரும் உடன்பட்டு விக்டோரியா மகாராணிக்குக் காணிக்கையாக வழங்கினர்.

விக்டோரியா மகாராணியாரிடம் வந்தபின் அவ் வைரமணி மிகவும் சீர்திருத்தம் ஆயிற்று; அம்ஸ்டர்டாம் நகரத்திலிருந்து வந்த பேர்பெற்ற வைரவேலைக்காரனிடம் கொடுத்தனர். அவன் சாணை பிடித்துக் கடைந்தெடுத்தான். பின் நீராவியந்திரம் ஒன்று இதனைச் சீர்ப்படுத்துவதற் கென்றே யமைத்தனர். அந்நீராவியந்திரத்திற் சுழலும் ஒரு கருவியினால் நாள் ஒன்றுக்குப் பன்னிரண்டு மணி நேரம் வேலை செய்து நாற்பத்தெட்டு நாளில் முடித்துக் கொடுத்தான். இதனால் அம்மணியின் பருமன் மிகவும் குறைந்தது. ஒளியும் அழகும் உருவின் தெளிவும் முன்னை யினும் பன்மடங்கு பெருகியுள்ளது. ரோசா மலர்போல வெட்டப்பட்டு நூற்றிரண்டு காரட்டு எடையுள்ளதாய் இலங்குகின்றது.

1851, 1862 ஆம் ஆண்டுகளில் இங்கிலாந்திற் கூட்டப்பட்ட பொருட்காட்சிச் சாலையில் இவ் வைரமணி காட்டப்பட்டது. கண்டவர் யாவரும் இதுபோன்ற மணி எங்கும் இல்லையெனப் புகழ்ந்து வியந்து களிப்படைந்தனர். அழகும் ஒளியும் சிறந்த இவ் வைரமணி வரலாறு போன்ற நிகழ்ச்சி எங்கும் எவரும் கேட்டறியார் என்பது திண்ணம்.

## கசு. மருத்துவமாமணி
## டாக்டர் எம். ஆர். குருசாமி முதலியார்

[கழகப்புலவர், திரு. ப. இராமநாதபிள்ளை]

டாக்டர் குருசாமி முதலியாரவர்கள் பெங்களூர்க்கு அடுத்த சிற்றூர் என்னும் ஊரில் 1880 ஆம் ஆண்டு பிறந்தனர். பின்னாள் எய்தக் கூடிய சிறப்புக்கள் அனைத்தின் தோற்றக் குறிப்பும் அவர்தம் பிள்ளைமைப் பருவத்தே நன்கு புலனாயின. பள்ளிப்படிப்பினை விரைவிற் கற்றனர். மெட்ரிகுலேஷன் படிப்பில் முதல் வகுப்பாகத் தேறினார். பெங்களூர் "செண்டிரல் கல்லூரியில்" 1902 ஆம் ஆண்டில் பி.ஏ. பட்டம் பெற்றனர்.

மைசூர் அரசினர் வழங்கிய பள்ளி உதவிப்பொருள் பெற்றுச் சென்னை மருத்துவக் கல்லூரியிற் சேர்ந்து நன்கு பயின்றனர். எம். பி. ஸி. எம். என்னும் பட்டம் பெற்றனர். "சிப்பர்பீல்டு" என்னும் தங்கப் பதக்கமும் பெற்றனர்; மைசூர் அரசினரால் பிளேக் நோய் நீக்கத் துறையின் முதல்வராக அமர்த்தப்பட்டார். அவ்வேலையினைச் செம்மையாகச் செய்து பெருமையுற்றார்; பின்னர் இவர் சென்னை மருத்துவ ஊழியத்திற் சேர்ந்தனர். இவ்வூழியத்திற்கு ஆள் தேர்ந்தெடுக்கும் தேர்வில் முதன்மையாகத் தேறினார். லோண்டனில் "ரேடியாலஜியில்" சிறப்புப் பயிற்சி பெற்றனர். தஞ்சை மிராசுதார்களின் மருத்துவப்பள்ளியில் ஐந்தாண்டுகள் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.

சென்னை முதன்மை மருத்துவ நிலையத்தில் இவர் கர்னல் எல்சியின் உதவியாளராக மாற்றப்பட்டார். சில நாட்கள் கழிந்தபின் மீண்டும் தஞ்சைக்கே மாற்றப்பட்டார். அதன்பிறகு சென்னை முதன்மை மருத்துவ நிலையத்தில் மருத்துவராகச் சிவில் சர்ஜன் வரிசையில் அமர்த்தப்பட்டார். சென்னைப் பல்கலைக்கழகத்தார் 1920 இல் எம். டி. பட்டத் தேர்வு ஏற்படுத்தினர். இவர் அதே ஆண்டில் அதில் சேர்ந்து பயின்று எம். டி. பட்டம் பெற்றனர்.

மேல்நிலையிலுள்ள ஐ. எம். எஸ். அலுவல் மேனாட்டு முதன்மையர்களுக்கு என ஒதுக்கப்பட்டு வந்தது. அந்த மருத்துவநூற் பேராசிரியர் பதவியில் முதன்முதலாக நம் முதலியாரவர்கள் அமர்த்தப்பட்டனர். இவர்களுக்குமுன் இவ்வுரிய நிலைக்கு நம் இந்தியர்களில் எவரும் அமர்த்தப் படவில்லை. பிரித்தானியாவுக்குத் "தெரபியூடிக்ஸ்" போதனை முறைகளை ஆராய்ந்துவர அனுப்பப்பட்டனர். இவர் அங்குச் சென்று நன்கு ஆய்ந்து ஓர் ஆண்டுக்குப் பின்னர் மீண்டும் வந்தனர். வந்தது முதல் ஊழியத்திலிருந்து விலகும்வரை "தெரபியூடிக்ஸ்" பேராசிரியராகவிருந்து மிக்க சிறப்புடன் பணியாற்றினர்.

1937 ஆம் ஆண்டு ஊழியத்திலிருந்து விடுதிபெற்றனர். விடுதி பெற்ற நாள் முதல் 1955 ஆம் ஆண்டு சூன் வரை நாட்டு மருத்துவத் துறைக்கண் ஆனரரி டைரக்டராகப் பணியாற்றினர். இவர்தம் இடைவிடா முயற்சியால் சென்னையில் உள்ள இந்திய மருத்துவப்பள்ளி உயர்ந்து கல்லூரி நிலையினை அடைந்தது. இக்கல்லூரியில் இவர்தம் ஆராய்ச்சித் திட்டங்களையும் சிற்றூர்களிற் செய்யும் மருத்துவப் பயிற்சித் திட்டங்களையும் மேற்கொள்ளச் செய்து ஊக்கம் அளித்து மேம்படச் செய்தனர். மேலும் இக்கல்லூரியில் மருத்துவப்பட்டம் பெறும் பாடமுறைகளையும் வகுத்தமைத்தனர்.

முதலியாரவர்கள் தெய்வவழிபாட்டில் அழுத்தமான பற்றுடையவர். திருக்கோவிலிலும், தத்தம் திருமனைகளிலும், அன்போடு கூடிய தூயமனதிலும் தெய்வ வழிபாட்டைச் சிறக்கச் செய்வது எல்லார்க்கும் இன்றியமையாக் கடமையாகும். நன்மாணவர்கள் பாடங்களைக் கல்லூரியிற் கற்பதும், கற்றவற்றை வீட்டில் கருத்துடன் சிந்திப்பதும், மனத்தின்கண் மறவா நினைவிற் பதிப்பதும் மேலவற்றிற்கு ஒப்பாவன. இம்முறையில் முதலியாரவர்கள் மூன்றிடத்து வழிபாட்டினையும் முறையாகக் கொண்டொழுகினர். திருத்தணிகைத் திருக்கோவிற் பணிக்குப் பெரும்பொருள் நல்கினர். திருப்பழனித் திருக்கோபுரத் திருப்பணியிலும் பெரும்

பங்கு எடுத்துள்ளனர். )ப்பணிகளை நேர்நின்றும் ஆற்றி யுள்ளனர்.

ஏழை மாணவர்கள் பலர்க்கு அவர்தம் கல்வி முன் னேற்றத்தின்பொருட்டு அவ்வப்போது வேண்டும் பண வுதவி புரிந்துள்ளார். ஏழைப் பள்ளிப்பிள்ளைகட்குப் பகலுணவு கொடுக்கும்பொருட்டுப் பொருள் வைப்பு வைத் துள்ளார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் சிண்டிகேட் என்னும் அவையின் உறுப்பினராகப் பல்லாண்டுகள் பணி புரிந்துள்ளார். "தொண்டைமண்டலத் துளுவ வேளாளர் உயர்நிலைப் பள்ளி"யின் ஆட்சிக்குழுத் தலைவராகவிருந்து பல ஆண்டுகள் அருந்தொண்டாற்றினர். தம்பெயரால் ஏற் படுத்தப்பட்ட மற்றெரு உயர்நிலைப்பள்ளிக்கு இலட்ச ரூபாய்க்குமேல் பொருளுதவி செய்துள்ளார்கள். சென்னைப் பல்கலைக் கழகத்தார் அக்கழக நூற்றுண்டு விழாவின்போது இவர்கட்கு "டாக்டர் ஆவ் சயன்ஸ்" என்னும் சிறந்த பட்டத் தினை வழங்கியுள்ளார்கள்.

சில தொழில் நிலையங்கள் நம் முதலியாருக்குச் சொந்த மாக உள்ளன. சிலவற்றில் பெரும் பங்குகள் எடுத்துள் ளார். பல தொழில் நிலையங்களில் இயக்குநர் குழுவிற் சேர்ந்து பணியாற்றியுள்ளனர். "இந்தியன் பாங்கி"யின் இயக்குநராகப் பல ஆண்டுகள் பணிபுரிந்துள்ளனர்.

"சென்னைக் கூட்டுறவுப் பால் நல்கும் பண்ணை"யில் பதினெட்டு ஆண்டுகளாக இயக்குநர் குழுவிலிருந்து பணி புரிந்துள்ளனர். சென்னை சட்டசபை மேல்மன்ற உறுப் பினராகவும் பல ஆண்டுகள் இருந்து பணிபுரிந்தனர்.

நம் முதலியாரவர்கள் தெய்வ வழிபாட்டின் ஒரு பகுதி யாகவும், மக்கள் பணியாகவும் நினைத்து உண்மை அன்பு உள்ளத்துக் கொண்டு ஒவ்வொரு நாளும் காலைப்போதில் ஏறத்தாழ ஒன்றரை மணி நேரம் இருநூற்றுக்கு மேற்பட்ட நோயாளர்களை மிக விரைவில் நன்காய்ந்து அவரவர்களுக்கு வேண்டிய சிறந்த மருந்துகளை எழுதிக்கொடுத்து வந்தார்.

அம் மருந்துகள் அவரவர்கள் நோயினைப் போக்கி நலத்தினைத் தப்பாமற் கொடுத்து வந்தன.

நோயாளர்கள் மனமுவந்து ஏதாவது காணிக்கை கொடுத்தாலும் அதனையும் திருமுருகன் திருவடிக்கே சேர்ப்பித்து வந்தனர். முதலியாரவர்கள் நோயாளர்களைப் பார்த்தவுடன் கொள்ளும் சிறுகுறிப்பினாலேயே நோயின் தன்மையினைத் துணிந்து உணர்ந்து விடுவர். அவ்வுணர்ச்சி எந்த இடத்தும் தப்பியது கிடையாது. இஃது அவர்கள் கடைப்பிடித்துள்ள தெய்வ வழிபாட்டின் உறுதியினால் உண்டாகியதென்பர். இவர்கள் எளிதாக வுணர்ந்துரைக்கும் நோய்த் தன்மையினை ஏனை மருத்துவர்கள் தங்கள் ஆராய்ச்சியாலும் சிலவேளை கருவியாலும் ஆராய்ந்து துணிந்துரைப்பதற்கு அருமையாகவிருக்கும். நம் முதலியாரவர்களால் எழுதிக் கொடுக்கப்படும் மருந்துகள் சிறந்த மருத்துவர்கள் அனைவர்க்கும் அரிய துணை செய்துவந்தன.

இத்தகைய பெருந்திருவினர் 1958–ஜூன் 26–ம் நாள் வியாழக்கிழமை இரவு 8-30 மணிக்குத் தம் எழுபத்தெட்டாம் வயதில் இறையடி நீழல் எய்தி இன்புற்றனர்.

மாணவர்களும் ஊக்கமுடன் கற்று வெளிநாடுகள் சென்று ஆங்குள்ளனவற்றைப் பயிலுவதற்கு மனத்துணிவு கொள்ளுதல் வேண்டும். கற்றுவந்து எல்லாவகையாலும் நாட்டுக்கும் மொழிக்கும் பல நன்மைகளை முடிந்த அளவு புரிதல் வேண்டும். இதுவே படிப்பின் பயனென உளங்கொண்டு கற்றல் வேண்டும்.

# க கயிலாசநாதர் கோவில்

[டாக்டர் மா. இராசமாணிக்கம் பிள்ளை]

## கோவில் இடமும் அமைப்பும்

இராசசிம்மன் கட்டிய உலகம் போற்றும் கயிலாசநாதர் கோவில் காஞ்சிமா நகரத்தின் மேற்றிசையில் சமூலரிகளுக்கு இடையில் இருக்கிறது. இதற்குப் பின்புறம் சிறிது தொலைவில் இன்றைய கச்சி நகரின் மேற்கு எல்லை முடிவு பெறுகிறது. ஆயின், இது கட்டப்பட்ட காலத்தில், இந்தக் கோவில், நகரத் தெருக்களுக்கு இடையேதான் இருந்தது என்பது பல கல்வெட்டுக்களால் தெரிகின்றது. இக்கோவிலுக்குப் புறமதில், திருமடைவளாகம் முதலியன இருந்தன. ஏராளமாக நிலங்கள் இருந்தன. கோவிலைச் சுற்றிலும் மாடவீதிகள் இருந்தன. இராசசிம்மன், "மாடெலாம் சிவனுக்காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்தான்" என்று சேக்கிழார் பெருமான் கூறியது முற்றும் உண்மையே ஆகும்.

இதற்கு எதிரில் ஓர் அழகிய குளமும் நந்தியும் இருக்கின்றன. அவை இரண்டும் இன்றுள்ள கோவில் வாயிலுக்கு ஏறத்தாழ 100 அடித் தொலைவில் உள்ளன. நந்தி பெரியது; கல்லால் ஆயது. அஃது உள்ள மேடைமீது இராசசிம்மனுக்குரிய சிங்கத் தூண்கள் குறைந்து நின்ற வண்ணம் இருக்கின்றன. இவற்றை நோக்க, நந்திக்கு மேல் கற்கூரை இருந்திருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது. இன்றுள்ள வாசலுக்கு எதிரில் கோவிற் கிணறு ஒன்றும் இருக்கின்றது. கோவிலுக்குப் பின்புறத்திலும் ஒரு கிணறு உள்ளது. இவை இரண்டும் பண்டைக் கிணறுகளே. மேலும் வாயிலை அடுத்து, இன்றுள்ள மதிற் சுவருக்கு வெளியே வலப்பக்கம் இரண்டும் இடப்பக்கம் ஆறுமாக எட்டுச் சிறிய கற்கோவில்கள் இருக்கின்றன. இவற்றில் லிங்கங்கள் இருக்கின்றன. இவற்றையும் முன் சொன்னவற்றையும் நோக்க, கோவிலின் வெளிச்சுற்று ஒன்று இருந்திருத்தல் வேண்டும் என்பதும், கோவில் மிகப்பெரியதாக இருந்திருத்தல் வேண்டும் என்பதும் நன்கு புலனாகும்.

## இன்றுள்ள கோவிற் பகுதிகள்

கோவில் வாயில் சிறியது. கோவில் நீள் சதுரமாக இருக்கிறது. வாயிலைத் தாண்டியவுடன் எதிரே தனித்துள்ள சிறிய கோவில் ஒன்று இருக்கிறது. அதற்கு இருபுறங்களி லும் உட்செல்ல வழிகள் இருக்கின்றன. அவற்றின் வழி யாக உட்செல்லின், நீள நாற்கோணக் (சதுரம்) கோவில் இருக்கின்றது. அதனைச் சுற்றிலும் ஏறத்தாழ ஆறடி அகல முள்ள திருச்சுற்று அமைந்துள்ளது. திருச்சுற்றில் உள்ள உட்புறச் சுவர்கள் பல சிறு கோவில்களாகவே காட்சியளிக் கின்றன. இறையிடம், முன்மண்டபம் ஆகிய இரண்டும் சுவர்களை உடையவை. முன்மண்டபத்தைச் சேர்ந்த முற் பகுதி பொதுமுறையான (சாதாரண) மண்டபமாகவே இருக் கிறது. இறையிடத்து உட்சுவர்களிலும் புறச்சுவர்களிலும் சிற்பங்கள் பலவாக இருக்கின்றன. இறையிடத்தைச் சுற்றி யுள்ள வெளிச்சுவரில் சிறு கோவில்கள் பல காணப்படுகின் றன. இறையிடத்துக்குமேல் கண்ணைக்கவரும் அழகிய கும்பம் இராசசிம்மன் நினைவையும் பல்லவர்காலக் கட்டடக் கலையையும் உணர்த்தி நிற்கின்றது.

## முன்கோவில்

வாயிலுக்கு எதிரே உள்ள சிறிய கற்கோவில் பல படிக் கட்டுகளை உடையது. உயர்ந்த இடத்தில் பெரிய லிங்கம் நான்கரை அடி உயரத்தில் அமைக்கப்பட்டுள்ளது. அது பதினாறு பட்டைகளைக் கொண்ட லிங்கம். லிங்கம் உள்ள இடத்திற்குப் பின்னுள்ள சுவரில் அம்மையப்பர் அரியணை யில் அமைந்துள்ள கோலம் அழகாகக் காட்டப்பட்டுள்ளது. உள்ளறையை அடுத்த வெளி மண்டபத்தின் வலப்புற இடப்புறச் சுவர்களில் சிவபெருமானைக் குறிக்கும் பெரிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஒன்று சடையை விரித்த சிவனார் உருவம்; மற்றொன்று சிவனார் எட்டுக் கைகளுடன் 'லதாவ்ரிசிக' நடனம் செய்தலைக் குறிப்பது; அஃதாவது, இடக்கால் முன்புறம் மடித்து ஊன்றி, வலக்கால் பின்புறம் மடித்துத் தூக்கி, இடக்கைகளில் ஒன்று தலைமுடிக்குமேல் தூக்கியவண்ணம் நடிக்கும்பொழுதே இடக்கைகள்

பந்தை எறிந்து பிடித்தல். இது விந்தையான நடனவகை ஆகும். இந்த நடனவகையே இக்கோவிலின் பல இடங்களில் காட்டப்பட்டுள்ளது. இவ்விந்தையான நடன வகையே இராசசிம்மனைக் களிப்பித்ததுபோலும்! இக் கோவிலின் புறச்சுவரில் அழகிய லிங்கங்கள், யாழ் (வீணை) வாசிக்கும் விஞ்சையர்கள், தட்சிணாமூர்த்தி, எட்டுக்கைகளை உடைய அகோர வீரபத்திரர் முதலியவரின் பல உருவங்கள் பொலிகின்றன. லிங்கத்திற்குப் பின்னுள்ள புறச்சுவரில் அழகிய அம்மை அப்பர் அரியணைமீது அமர்ந்துள்ள கோலம் சால அழகியது; இருவருக்கும் இரண்டு குடைகள் கவிக்கப்பட்டுள்ளன. இச் சுவருக்கு மேலுள்ள கும்பத்தில் சிவனாரது யானைக்கை நடனம் நேர்த்தியான ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. கும்பத்தின் ஏனைய பக்கங்களிலும் பிற நடன வகைகள் காட்டப்பட்டுள்ளன.

### சுற்றுச்சுவர்கள்

முற்கோவிலுக்கு இடப்புறமுள்ள சுற்றுச் சுவரில் பதினொருவர் ஒரு பொதுப் பீடத்தில் அமர்ந்துள்ளவாறு அமைக்கப்பட்டுள்ள சிற்பம் அரசரைக் குறிப்பதா என்பது விளங்கவில்லை. அதற்கு நேர் எதிரில் வலப்புறச் சுவரில் இங்ஙனமே பன்னிருவர் உருவங்கள் தோன்றுகின்றன. இவை அன்றி நந்தி, அம்மையப்பர் கோலம் முதலிய வற்றைக் குறிக்கும் சிற்பங்கள் பலவாகும்.

### இறை இடம்

கயிலாசநாதரைக் குறிக்கும் பெரிய லிங்கம் பதினாறு பட்டைகளை உடையது; எட்டடி உயரம் உள்ளது. இதன் பின் சுவரில் சோமாஸ்கந்தப் படிமம் இருக்கின்றது. இவ் விடத்தைச் சுற்றிவரும் திருச்சுற்று ஏறத்தாழ இரண்டடி அகலம் உடையது. இடப்பக்கம் உள்ள புழையில் படுத்து நுழைந்து ஊர்ந்து வலப்பக்கம் தரையை ஒட்டினாற்போல் உள்ள சிறிய வழியே வெளிவருதல்வேண்டும். இறை யிடத்தை அடுத்துள்ள வலப்பக்க அறையில் பழுதற்ற மிக்க அழகொழுகும் நடனச் சிற்பம் சுவரில் செதுக்கப்பட்டுள் ளது. வேறு அம்மை அப்பர் சிற்பங்களும் உள்ளன.

புற அறையிலும் நடனச் சிற்பங்கள் இருக்கின்றன அவற்றுட் சில பழுதுபட்டிருக்கின்றன. இந்த இரண்டு அறைகளும் பூட்டப்பட்டுள்ளன.

முன் மண்டபம்

இறையிடத்திற்கு எதிரில் உள்ள மண்டபம் அழகானது. தூண்கள் வேலைப்பாடு கொண்டவை; பிற்காலச் சோழரின் தூண்கட்கு மூலமாக அமைந்தவை. மண்டபத் தரையிலும் கூரைமீதும் கல்வெட்டுகள் இருக்கின்றன. இம் மண்டபப் பகுதியைச் சேர்ந்ததே வெளி மண்டபம் ஆகும். அவ்விடத்தில் பதினாறு தூண்கள் இருக்கின்றன. அவற்றில் பல கெட்டுவிட்டன; கல்வெட்டுள்ள தூண்கள் ஐந்து; அவற்றில் பழுதுற்றிருப்பவை மூன்று.

உள்ளறை மண்டபப் புறச்சுவர்

இறையிடத்தைச் சுற்றிலும் சுவரில் சிறு கோவில் அமைப்புப் பல இடங்களில் உள்ளது. ஒருபுறம் சிவனார் நடனம் அல்லது அமர்ந்த கோலம் அல்லது வேறொரு கோலம் காணப்படுகிறது. அதன் இரு பக்கங்களிலும் உள்ள சுவர்களில் பிரமன் – நாமகள், திருமால் – திருமகள் இவர்கள் சிவனாரை வணங்குதல் போன்ற சிற்பங்கள் காணப்படுகின்றன. ஊர்த்துவத் தாண்டவத்தைக் குறிக்கும் சிற்பங்கள் சில உள. நந்தி நடனம், கணங்களின் நடனம், விஞ்சையர் யாழ் வாசித்தல் முதலியன காணலாம். மண்டபச் சுவரில் நீண்ட வடிகாதுடைய ஆண் உருவம் தலைமீது முடிதாங்கி உள்ளது. அதற்கு இருபுறத்தும் இரண்டு பெண் உருவங்கள் உள்ளன. கீழே ஓர் ஆண் உருவம் (மகன்?) இருக்கிறது. இச் சிற்பம் இராசசிம்மன் ம் பத்தைக் குறிப்பதா என்பது விளங்கவில்லை. அடுத்துப் பதினாறு கைகளையுடைய காளி ன் மீதுள்ள கோலம் அழகாகச் செய்யப்பட்டுள்ளது.

சிறு கோயில்கள் 58

திருச்சுற்றுப்பாதையை அடுத்த கோவில் மதிற்சுவர் உட்பக்க முழுவதும் சிறு கோவில்கள் 58 உள்ளன. இரண்டு கோவில்கட்கு இடையில் சுவரில் அம்மனைக் குறிக்கும் பல

திறப்பட்ட சிற்பங்களே காணப்படுகின்றன. சில அம்மை அப்பரைக் குறிப்பன. அம்மன் இடக்கையில் கிளியேந்தி அமர்ந்துள்ள நிலை-கீழே இரண்டு யானைகளின் தோற்றம் - தோழிப்பெண் தோற்றம் இவை கண்ணைக் கவர்வனவாக உள்ளன.

சிறு கோவில்கள் எனப்படும் மாடங்களில் பாற்கடல் கடைந்த வரலாறு, முப்புரம் எரித்த வரலாறு, மார்க் கண்டனுக்காக யமனை உதைத்த வரலாறு, பரமன் - அருச்சுனன் போர், இராவணன் கயிலையைப் பெயர்க்கும் காட்சி, நால்வர்க்கும் அறம் உரைத்த காட்சி, திருமால் சிவனை வழிபட்டு ஆழிபெற்ற வரலாறு, இராவணன் வழி பட்ட ஆன்மலிங்கத்தை அனுமார் வழிபட்டுக் கவர்ந்து செல்லல் முதலிய வரலாறுகளைக் குறிக்கும் சிற்பங்கள் அழகாக அமைந்துள்ளன.

அம்மை அப்பர் திருமணம், பிரமன் நாமகள் திரு மணம், திருமால் திருமகள் திருமணம் இவை தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. பராசக்தியின் எழுவகை உருவங்கள் ஓரிடத்தில் காட்டப்பட்டுள்ளன. இவ்விடத்திற்கு எதிர்ப் புறச் சுவரில் உருத்திரர் பதினொருவர் உருவங்கள் இருக் கின்றன. அம்மை யாழ் வாசிப்பது சில சிற்பங்களில் காட்டப்பட்டுள்ளது. சிவனார் சடைமுடி மிகத் தெளிவாகப் பல சிற்பங்களில் விளக்கப்பட்டுள்ளது. இச் சிற்பங்களில் எல்லாவற்றிலும் பின்வருபவை பலவாகக் காணப்படுகின் றன. அவை (1) யாழ் வாசித்தல், (2) கையை முடிக்குமேல் உயர்த்தி வைத்துச் சிவனார் நடித்தல், (3) பிள்ளையார், (4) கற்றைவார் சடை என்பன.

எல்லாச் சுவர்களிலும் சிங்கத்தூண்கள் இருக்கின்றன. சிங்கங்கள்மீது வீரர்கள் அமர்ந்துள்ளனர். கோவிலின் புறச்சுவர்ப் பக்கத்தும் இக் காட்சியைக் காணலாம். சிங் கங்கள் பின்கால்கள்மீது நிற்பன. சிற்பங்கள் இற்றைக்குச் சற்றேறக்குறைய 1250 ஆண்டுகட்குமுன் செய்யப்பட்டன வாக இருந்தும் இன்றும் அவை தம்மைப் பார்ப்பவரைப் புன்முறுவலோடு வரவேற்பனபோல இருக்கின்ற நிலை

உள்ளத்தை இன்புறுத்துகிறது. சிற்ப அழகில் ஈடுபட்ட கண்கள், இக்காட்சி இன்பத்தை நன்கு நுகரலாம். இங்குள்ள வாயிற்காவலர் அனைவரும் இரண்டு கைகளை உடையவரே ஆவர்.

## கும்பம்

இக் கும்பம் இராசசிம்மன் கட்டிய மாமல்லபுரத்துக் கரையோரக் கோவில் கும்பத்தை ஒத்தது; ஆனால் அளவிற் பெரியது. இதன் வளர்ச்சியே, இராசராச சோழன் தஞ்சையிற் கட்டிய பெரிய கோவில் கும்பம். இந்தக் கும்பத்தில் சிங்கத் தலைகளே காணப்படுகின்றன.

## கல்வெட்டுகள்

கயிலாசநாதர் கோவில் நிறையக் கல்வெட்டுகள் இருக்கின்றன. அவை கி. பி. 7 ஆம் நூற்றாண்டுமுதல் 13 ஆம் நூற்றாண்டுவரை தமிழகத்தை ஆண்ட பல்லவர், சோழர் கல்வெட்டுகளாக இருக்கின்றன. அவற்றுள் கோவில் கட்டிய இராசசிம்மன் கல்வெட்டுகளும், அவன் மகனான மூன்றாம் மகேந்திரன், அவன் மனைவி ரங்கபதாகை முதலியோர் கல்வெட்டுகளும் உள்ளன. பல்லவரை வென்று தொண்டைநாட்டை ஆண்ட முதற் பராந்தகன், இராசராசன், இராசேந்திரன் முதற் குலோத்துங்கன் இவர்தம் கல்வெட்டுகள் பலவாகக் காணப்படுகின்றன. சோழர் காலத்தில் இக்கோவில், மாடவீதிகள், வெளிச்சுற்று, மடவளாகம், மாட வீதி, மடங்கள் முதலியவற்றையும் அளவிடற்கரிய செல்வத்தையும் பெற்றிருந்தது என்பதை இக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. இரண்டாம் நந்திவர்மன் காலத்திற் காஞ்சியைக் கைப்பற்றிய இரண்டாம் விக்கிரமாதித்தனது கன்னடக் கல்வெட்டும் இருக்கின்றது. அதனில் இராசசிம்மன் கட்டிய கோவிலில் உள்ள பெருஞ் செல்வத்தைக் கண்டு வியந்த வல்லபன், அதனைக் கவராது, அப் பெருமானுக்கே விட்டுவிட்டான் என்பது குறிக்கப்பட்டுள்ளது. இவ்வுண்மையைச் சாளுக்கியருடைய வக்கலேரி, கேந்தூர்ப் பட்டயங்களும் பகர்கின்றன.

சிறப்பு

கயிலாசநாதர் கோவில் திருக்கயிலேயின் அளவைக் கொண்டே கட்டப்பட்டதாகும் என்று விபுலானந்த அடிகள் போன்ருர் கூறுகின்றனர். கயிலாசநாதர் கோவில் கல் வெட்டு இதற்கு மறைமுகமாகச் சான்று பகர்கின்றது. இராசசிம்மன் தன்னை 'வாத்திய வித்தியாதரன்' என்பதற் கேற்ப இக் கோவிலில் யாழ் வாசிக்கும் உருவங்கள் பல செதுக்கப்பட்டுள்ளன. இவன் இசை, நடனம், சிற்பம், ஓவியம் இவற்றிற் பேரறிவுபடைத்த பெருவேந்தன் என்ப தற்குக் கயிலாசநாதர் கோவில் ஒன்றே போதிய சான்ருக அமைந்துள்ளது. இக் கோவில் ஏறத்தாழ வைகுந்தப் பெருமாள் கோவிலுக்கு நேர் எதிரே அமைந்திருத்தல் வியத்தற்குரியது. இங்குள்ள கணக்கற்ற சிற்பங்கள் சுவர் களில் இருத்தல் போலவே அக் கோவிற் சுவர்களிலும் இருத்தல் இங்கு நினைக்கத்தகும். சுருங்கக் கூறின், கயிலாச நாதர் கோவில் பல்லவரது சிற்பக்கலையை உலகத்திற்கு அறிவிக்க எழுந்த சிற்புக் கலைக்கூடம் என்னலாம்.

## கசு. கடன் கோடல்

டி. எஸ். கந்தசாமி முதலியார், எம். ஏ.]

கடன் கோடல் மிகக் கேடு பயக்கும் தீயதொரு பழக்கம். அப் பழக்கத்துக்கு மக்கள் பலர் அடிமையாகி அவ்வடிமை யினின்றும் மீளும் வழியறியாது அல்லற்குட்பட்டு உழல் கின்றனர்கள். சில நாடுகள் கடன் கொண்டு அக் கடனைத் தீர்க்கமாட்டாது விழித்துக் கொண்டிருக்கின்றன. கடன் கொண்டவன் படும் துன்பத்திற்கோர் எல்லையில்லை. வீரருள் வீரனாகிய இலங்கை மன்னன் பட்ட துன்பத்தைக் கடன் பட்டான் கலக்கத்திற்கு உவமையாக்கிக் கூறினர் கவியரசர். நம் நாட்டு மக்களுள் கடன்படாது வாழ்கின் றவர் மிகச் சிலர்; கடன்பட்டு உழல்கின்றவர் எண்ணிறந் தவர்.

கடன் கொண்டார் கூட்டத்தைச் சிறிது ஆராயின், அக் கூட்டத்துள்ளே, நிலக்கிழவரையும், வணிகர்களையும் தொழி லாளர்களையும், வழக்கறிஞர்களையும், அரசவினைஞர்களையும் மற்றும் பலரையும் காணலாம். கடன் கொண்டாரை ஒரு தனிப்பிறப்பாளர் என்னலாம். அவர்கள் ஒரு தனித்த இனத்தினர். மக்களைக், கடன் கொள்வாரும், கொடுப்பாரும் என இரு பெரும் பிரிவுக்குட்படுத்தலாம். ஆகவே அவர்கள், வெவ்வேறு இனத்தைச் சார்ந்தவர்கள்; தனித்தனி மெய்ச் சாயலையுடையவர்கள். ஆங்கிலப் புலவர் ஒருவர், மக்களைக் காக்கேசியர், மங்கோலியர், ஆரியர், அநாரியர் என்று பிரிப் பதில் பயனில்லை என்றும், அவ்வம் மக்கட் கூட்டத்துள்ளும் கடன் கொள்வாரும், கொடுப்பாருமாய இருவகை மக்களைக் காணலாமென்றும், மக்களை அவ்விரு பிரிவின் கீழ்ப் படுத்தலே ஏற்புடைத் தென்றும் கூறுகிறார். அவருள்ளும் கடன் கொள்வாரே உயரிய மக்கள் என்றும் கூறுகிறார். கடன் கொடுப்பவன் மேலும் மேலும் தன் பொருளைப் பெருக்குவதில் கருத்துடையனாய்ப், பகலென்றும் இர வென்றும் பாராது, வட்டிகருதி முதலிழக்கும் உளம்

வாய்ந்து, கடும்பற்றுள்ளமுடையனாய், தன் பெட்டியில் பொருளிருப்பதனால் 'வட்டியின்றி முடங்கியிருக்கின்றதே' எனப் பெரிதும் கவன்று, வட்டிக்குக் கடன்வாங்குவாரை எதிர்நோக்கி நிற்கின்றான் அந்தோ! இவன் ஏழை! கவலைக் கோர் இருப்பிடம், கவலைக்கே பிறந்தவன்.

கடன் கொள்வானோ, 'கடனும் கிடைக்கும்; கொடுப் பாரும் பலர் உண்டு இவ் விரிந்த உலகத்தில்' என்று எண்ணும் மதுகையுடையனாய், வட்டிக்கு வாங்கப்பட்ட தாயினும், "செல்வத்துப் பயன், துய்த்தலே" என்று கருதி அதை ஐம்புலநுகர்ச்சிக்குச் செலவிட்டு இன்பம் துய்க் கின்றான். பொருளைப் பலருக்கும் வழங்குகின்றான். கண்டா ரெல்லாம் அவனைக் கன்னன் என்கிறார்கள். நாளைக்கென் செய்வோம் என்னும் கருத்து அவன் நெஞ்சத்தில் எழுவ தில்லை; அழுத்துவதுமில்லை. எப்போதும் இன்பத்தில் ஆழ்ந்துள்ளான்; கவலையின்றித் திரிகின்றான். அக் கடன் கொள்வார் கூட்டத்துள் இன்னும் வேறு சிலர் எப்பொழு தும் பட்டும் துகிலும் உடுத்துத் திரிவர்; அமிழ்தன்ன அடிசி லுண்டு ஏமாப்பர். அத்தகையாரைக் கண்ட அளவில், கவலைக்கே கொள்கலமாம் கடன்கொடுப்பான், இத்தகை யாருக்கு நம்பொருள் சிறிதேனும் கடன் கொடுக்கப்பட வேண்டுமென ஆசை கொள்கிறான். அவர் வாய் திறந்து கடன்கேட்டு விட்டாலோ, தனக்கு ஒரு பெரும் பேறு வாய்த் தது போல் மதித்துத் தடை சொல்லாது கொடுக்கின்றான்.

இன்னும் சில கடன் கொண்டாருடைய நடையையும் உடையையும் கண்டார் பலர், அவரைச் செல்வத்திற் பிறந்த செல்வத் தோன்றல்கள் என மயங்குகிறார்கள்.

'கடன் கொடுக்கவும் வேண்டாம் கொள்ளவும் வேண்டாம்' என ஆங்கிலப் புலவர் ஒருவர் அறிவுமொழி கூறுகிறார். கடன் கொள்ளும்போது, ஒருவனுக்கு அது கொடுப்பானிடத் துளதாய பற்றும், நன்மதிப்பும், அதைக் கேட்டக்கால் இருப்பதில்லை. இத்தன்மை இன்றுதான் மக்களிடத்துத் தோன்றிய புதியதோ ருணர்ச்சியில்லை; 'கலித் தொகை'க் காலத்திலேயே உள்ளது.

> "உண்கடன் வழிமொழிந் திரக்குங்கான் முகனும்தாங்
> கொண்டது கொடுக்குங்கான் முகனும்வே றுகுதல்
> பண்டுமிவ் வுலகத் தியற்கை; அஃதின்றும்
> புதுவ தன்றே புலனுடை மாந்திர்."

என்ற கலியில், தலைமகன் தலைவியிடத்திற் காதலிரந்து நிற்கும்போது, அவற்கு. உண்டாய முகமலர்ச்சியும், மென்மையும், தலைவி தலைமகனைப் பிரிவதற்கு அஞ்சி அவனைத் தன்னுடனிருக்குமாறு இரந்தக்கால் அழிவதைக், கடன் கொள்வார் கொள்ளுங்கால் கொள்ளும் முகமலர்ச்சி பின் அதனைக் கொடுத்தார் கேட்குங்கால் அழிவதை நிகர்க்குமெனு அழகு பிறங்கக் கூறப்பட்டுள்ளது.

பெருந் திரளான நிதியத்தைக் குவியல்போல் திரட்டல் ஒருவர்க்கு இயலாததாயிருக்கலாம். ஆனால் யாரும் கடன் கொள்ளாது இருக்கலாமே. 'தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்' எனக் கூறினர் ஆன்றோரும். தாளாற்றலால் பெற்ற பொருளைத் துய்த்தல் சரி. அதனை அறவும் செலவிட்டு மேலும் கடன்கோடல் சரியா? சரியன்று, அறமுமன்று.

தமிழ்நாட்டு மக்கள் பெரும்பாலும் தத்தம் வரவும் செலவும் நோக்காதும், மனம்போம் நெறியில் சென்றும், பொருளைச் செலவிட்டுக் கடன்பட்டுழல்கின்றார்கள்.

> "ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
> போகா றகலாக் கடை."

என்ற பொய்யாமொழி அரசர்க்கும் பொருந்தும்; குடிகட்கும் பொருந்தும். அந்நெறியை அரசரும், குடிகளும் ஒருங்கே பின்பற்றினால் அவர்களுக்குப் பெரிதும் நன்மை விளையும். அந்நெறியைக் கடைப்பிடியாமையினாலேதான், வணிகரும், நிலக்கிழவரும், அரசரும், அமைச்சரும், சிற்சிலபோது செய்வதின்னதென் றறியாது தலைமேல் கைவைத்துத் துன்பமெய்துகின்றனர்.

நம் நாட்டு மக்கள், மணம் என்றால் ஆயிரமும், விழவு என்றால் ஐயாயிரமும் எண்ணாது செலவிட்டு, இறுதியில் இடும்பையிற் படுகின்றார்கள். சடங்குகள் வேண்டும்; ஆனால் அச் சடங்குகளுக்கு ஓர் எல்லையும் வேண்டும்

சடங்கு, செய்வானது பொருளளவிற்கு ஏற்றபடி செய்யப் படல் வேண்டும். சடங்குகளின் எண்ணம் மிகக் குறைவு படவேண்டும். பயனில் சடங்குகளைப் போக்குதல் வேண்டும்.

'வருவாயுட் கால் வழங்கவேண்டும்' என்று ஆன்றோர் கூறியிருப்பதைக் கடன் கொள்வார் தங் கருத்தில் ஊன்றி நோக்குதல் வேண்டும். அம் முதுமொழிப்படி ஒவ்வொரு வரும் தத்தம் வருவாயில் காற்பகுதியையே வறியோர்க்கு வழங்குதல் வேண்டும்; காற்பகுதியையேனும் மீதிவைத்தல் வேண்டும். கண்ணிற்கண்ட பொருள் எல்லாம் வாங்குதல் வேண்டுமென்கின்ற பெரும்பித்து ஒழிதல்வேண்டும். செட்டாக ஒவ்வொருவரும் செலவிடல்வேண்டும்.

நிலக்கிழவர்களும், உழவர்களும், இக்காலத்து உழவு ஊதியம் தருவதில்லை எனக் கூறுகிறார்கள். பயிர்த்தொழில் செய்வாரிற் பெரும்பாலோர் கடன் வாய்ப்பட்டிருத்தலே அவர்க்கு அத்தொழில் ஊதியம் தாராமைக்குக் காரணம். பயிர்த்தொழில் செய்வார், உழவு காலமுதல் அறுவடை காலம் வரையில், கையில் பணமில்லாது கடன் வாங்குவ தாகவே இருந்தால் பயிர்த்தொழிலும் அதன் பற்பல வினை களும் அதனதன் பருவத்தில் எவ்வாறு நடைபெறும்? ஆதலின் மக்கள், வாழ்க்கையில் பொருட் செட்டையும், தொழிற்செட்டையும் கைப்பற்றினால் பெருமையை யடை யலாம். நம் நாட்டு மக்கள் மடிமை யெய்திச் சோம்பித் திரிகின்றனர். தொழில் செய்வதில் அவர்க்கு விருப்ப மில்லை. அவர்கள் தங்களுக்கு யாராவது ஒருவர் வலிந்து வந்து வாயில் உணவு ஊட்டவேண்டுமென்று கருதுகி றார்கள். ஊக்கமுடையானுக்கே கடவுள் துணை செய்கிறார். மடியுளானுக்கு மாமுகடி துணை செய்கின்றாள்.

தமிழ்நாட்டு மக்கள் பசித்திருந்தால், அஃது அம்மக் களின் குறை; அது மடிமையின் பிள்ளை. கைசெய்வார்க்கு நிலம் பெரிதும் பயனளிக்கும்.

இன்பத்தை விரும்புவார் கடன் வாங்காதிருத்தல் வேண் டும்; பொருளைச் செட்டாகச் செலவுசெய்தல்வேண்டும்.

# கஎ. சமையற்கலை*

[குமாரி, பத்மாசினி, B.Sc., D.S.S.]

பெண்கள் சமைப்பது என்பது ஓர் எளிய செயல் என்று நினைக்கிறோம், நாம் எல்லோரும். ஏன் சிலர் "அடுப்பூதும் பெண்களுக்குக் கல்வி ஏன்?" என்றுகூடச் சொல்லியிருக்கிறார்கள். நல்ல காலம். பெண்களுக்கு அடுப்பூதும் வேலை யிருந்தாலும் மற்றத் துறைகளிலும் ஒளிவிட்டு முன்னேறும் காலமிது! ஆனாலும், பெண்களுக்குக் கட்டாயமாக உணவை ஆக்குதற்குத் தெரிந்திருக்கவேண்டும். முன் நாட்களில் பெண்ணைப் பார்க்க வந்தால், 'உங்கள் பெண் நன்றாகச் சமைப்பாளா?' என்றுதான் முதலில் கேட்பார்கள். நடுவில் நாகரிகம் என்ற பெயரில் பெண்கள் சிலர் சமையலறைக்குள் நுழையாமல், அப்படி ஏதாவது செய்தாலும் யாராவது பார்த்துவிட்டால் என்ன செய்வது என்று உடனே வெளியே வந்துவிடுவார்கள். வீட்டில் சமையல் செய்ய ஆட்கள் இருந்தாலும், தானும் சமைக்க வேண்டுமென்று வீட்டு அரசி விரும்புவது இயற்கை. சமைப்பது என்பது பெண்களுக்கே உரித்தான வேலை. உலகத்திலுள்ள எல்லாப் பெண்களுக்கும் இது பொருந்தும்.

உலகம் மக்களால் ஆனது. இந்த மக்கள் உடல் நலத்துடன் இருந்தால்தான் உலகத்தில் அமைதி நிலவும். மக்களின் உடல்நலத்திற்கு முக்கியமான காரணம் உணவு. இந்த உணவைச் சுவையுடன் ஆக்கி அளிப்பவள் பெண். ஆகையால் நம் பெண்கள் கையில்தான் உலக சமாதானம் அடங்கி யிருக்கிறது என்று நாம் கூறலாம். பெண்ணைப் பிரமாவிற்கு ஒப்பிடலாம். ஏனென்றால் பிரமா ஒரு புது உயிரைப் படைக்கிறார்; பெண் பல பொருள்களைக்கொண்டு ஓர் உணவை உண்டாக்குகிறாள்.

ஆகவே, சமையல் செய்வது என்பது ஓர் எளிய வேலை அன்று. இது ஒரு தனிப்பட்ட கலைதான். ஒரு பெண்

---

* இக் கட்டுரை 'கலைக்கதிர்' மணியியல் மலரிலிருந்து எடுக்கப்பட்டு ஆசிரியர் திரு. G. R. தாமோதரம் அவர்களின் இசைவுபெற்று எடுத்தாளப்பட்டுள்ளது.

உணவைத் தயாரித்து அதைப் பக்குவமாகவும், கவர்ச்சியாக வும் பரிமாறினால், அவளை ஒரு கலைஞனுக்கு ஒப்பிடலாம். சமைப்பது என்பது ஒருகலை மட்டுமன்று, அது ஓர் அறிவி யலும் ஆகும். ஏன்? அதுதான் நம் வாழ்வை ஒட்டி யிருக்கும் அறிவியல். உடல் நலத்திற்கும், உள்ள அமைதிக் கும் உணவுதான் இன்றியமையாதது. உடல் நலத்திற்காக உணவைப் பக்குவப்படுத்துவதும், எளிய உணவைச் சத் துள்ளதாக மாற்றுவதும், அதை உடல் ஏற்றுக்கொள்ளும் நிலையில் அமைப்பதும் ஓர் அறிவியல்தான்.

சமையற் கலை எப்பொழுது தோன்றிற்று என்று சொல்வது கடினம். முன் காலங்களில் எல்லாம் பச்சை யாகத்தான் உணவை உட்கொண்டார்கள். ஒரு சீனக் கதைப்படி விபத்தால் மனிதன் வேகவைக்கக் கற்றுக்கொண் டான் என்பது அறியப்படுகின்றது. ஒரு குடிசையில் ஒரு பையனின் குறும்பால் தீப்பற்றிக் கொண்டதாம். அஞ்சிய அந்தப் பையன் வெளிவந்த பிறகுதான் அவர்களின் முக்கியச் சொத்தான பன்றி அகப்பட்டுக் கொண்டதென்று மிகவும் வருந்தினான். தீ அடங்கிய பிறகு அப்பாவிற்கு அஞ்சிய அவன் மெல்லப் பன்றியைத் தொட்டுப் பார்த்தான். விரல்கள் சுட்டதால் உடனே வாயில் வைத்துக்கொண்ட அவன், முதன் முதலாக அதன் சுவையை அனுபவித்தான். இதன் சுவையைக் கண்ட சீனர்களும் பன்றியை வேக வைக்க ஒரு குடிசைக்கே தீ வைத்தார்களாம்!

பண்டைய மக்கள் குச்சியில் உணவை மாட்டி நெருப் பில் சுட்டனர். எஸ்கிமோ இனத்தினர் தோல் பைகளில் உணவை வைத்து, அவற்றின்மீது கொதிநீரை விட்டும், சிவப்பு இந்தியர்கள் மரப் பாண்டங்கள் வைத்து அவற்றின் மேல் சூடாக்கிய கற்களை வைத்தும் சமைத்தனர். விவிலிய நூற்களில் பழைய எகிப்தியருக்கு ஆறு விதமான சமையல் தெரிந்திருந்தன என்று குறிக்கப்பட்டுள்ளது.

இப்பொழுது சமையலை ஒரு சிறந்த அறிவியல் பகுதி யாகக் கல்லூரிகளிலும், ஆராய்ச்சி நிலையங்களிலும் கருது கின்றார்கள். பெண்கள் கல்லூரிகளில் சமையலைப்பற்றிப்

படிப்பது அநேகருக்குக் கேலியாக இருக்கிறது. சிலர் "எங்கள் அம்மா, பாட்டி இவர்களெல்லாம் எந்தப் பள்ளிக்கூடத்திற்குச் சென்றார்கள்; அவர்கள் சமைக்கவில்லையா?" என்று கேட்கிறார்கள். கல்லூரிகளில் பெரியவர்களுக்குத் தெரியாததைச் சொல்லித் தரவில்லை. அவர்களுக்குத் தெரிந்ததைத்தான் அறிவியல் முறையில் கற்பிக்கிறார்கள். வாய்க்குச் சுவைமட்டுமன்றி உணவிலுள்ள சத்துக்கள் யாவும் அழியாமல் இருக்க அவர்கள் தெரிந்திருக்க வேண்டியது இன்றியமையாதது. உதாரணமாக முன் காலங்களில் ஏகாதசியன்று பட்டினி இருந்தால், மறுநாட் காலையில் அகத்திக்கீரைப் பொரியலும், நெல்லிக்காய்ப் பச்சடியும் சாத்திரம் என்ற பெயரால் செய்வார்கள். ஆனால் அது வெறும் சாத்திரமில்லை; அதில் ஓர் உண்மை இருக்கிறது. உணவில் நமக்குத் தேவையான கால்சியமும், வைட்டமின் சி-யும் (Vitamin-C) இருக்கின்றன. இதனை அறிவியல் முறையில் தெரிந்தால், நம் பெண்கள் அதை மூட நம்பிக்கை என்று எண்ணிவிடாமல் இருக்கலாம் அல்லவா?

சமையல் ஒரு கலை; சமையல் அறை ஓர் ஆராய்ச்சி நிலையம். பெண்கள் மிகுந்த நேரம் அந்த அறையில் கழிப்பதால், சமைப்பதற்குரிய தகுந்த சாதனங்கள் பெற்றதாகவும் வெளிச்சம் உடையதாகவும் சமையலறை இருத்தல் வேண்டும். நம் வீடுகளில் நுழைந்தவுடன் விருந்தினரை வரவேற்கும் அறைதான் பார்க்கிறோம். ஆனால், அமெரிக்காவில் வீட்டின் முன்புறம் இருப்பது சமையல் அறை தான். அதில் தங்களுக்குத் தேவையான எல்லாச் சௌகரியங்களையும் செய்து கொண்டிருக்கிறார்கள். அதில்தான் டெலிபோன், ரேடியோ முதலியன இருக்கும். ஒரு பெண் சமைத்துக்கொண்டே பாட்டையும் கேட்கலாம்.

சமைப்பதற்குக் கீழ்க்கண்ட பொருட்கள் தேவை. அடுப்பு, விறகு, கரிஅடுப்பு, மண்ணெண்ணெய் அடுப்பு, மின்சார அடுப்பு ஆகியவைகளில் ஒன்றோ பலவோ, பொருள்களை மூடிவைக்க டப்பாக்கள், வாணலி, தோசைக் கல், ஈயம் பூசிய பித்தளைப் பாத்திரங்கள், குக்கர், கெட்டில், தட்டுகள், மூடிகள், கரண்டிகள், பூரிப் பலகை, குழவி,

அரிவாள்மணை, சல்லடை, தண்ணீர், குண்டான், குப்பைத் தொட்டி, பிடித்து இறக்கத் துணிகள், கை துடைக்கத் துணி முதலியவைகள் இருத்தல் வேண்டும்.

உணவைச் சமைப்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. நாம் சாப்பிடும் சில காய்கறிகள், பழங்கள், இவைகளைத் தவிர மற்றவை யாவும் சமைக்கப்படவேண்டும். சமைப்பதனால் உணவு மெதுவாகின்றது. இதனால் செரிப்புச் சக்தி நீர்கள்கூட வேலைசெய்ய உதவுகின்றன. இரண்டாவது, உணவைச் சமைத்தால் அதிலுள்ள மணமும் வெளிப்படுகிறது. எடுத்துக்காட்டாக: வேர்க்கடலையை வறுத்தால் அதன் மணம் வெளிப்படுகிறது. சிறிது மசாலாவையும் சேர்ப்பதால் உணவின் சுவை மிகுதியாகிறது. மேலும் சமையல் மூலம் உணவின் உருவத்தையும் மாற்றமுடியும். புலால்—உணவைச் சுவைபடச் சமைத்தால்தான் சாப்பிடுபவர்களுக்கும் ஆர்வம் உண்டாகும். சமைப்பதால் கிருமிகள் அழிகின்றன. ஆகையால் இதன்மூலம் நோயைத் தடுக்கலாம். முக்கியமாகச் சைவர்களுக்குச் சமையல் இல்லாவிட்டால் உணவு அலுத்துவிடும். சமைப்பதன்மூலம் பல காய்கறித் தயாரிப்புகளை ஏற்படுத்தலாம். சமைப்பதனால் நமக்கு இவ்வளவு நன்மைகள் ஏற்பட்டாலும் சில காய்களைப் பச்சையாகச் சாப்பிட்டால்தான் வைட்டமின்-சி கெடாமல் தடுக்கலாம்; சில காய்களைச் சமைத்தால் வைட்டமின்-சி கெட்டுவிடும்.

உணவைப் பல முறையில் சமைக்கலாம். எவ்வித முறையில் சமைத்தாலும் அதன் சத்துக்கள் குறையாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். சமைக்கும் முறைகளை, உலர் சுட்டுமுறை, ஈரச் சுட்டுமுறை எனப் பிரிக்கலாம். முதல் முறையில் காற்றும், வெப்பமும் சமைக்க உதவுகின்றன. இரண்டாவது முறையில், நீரினாலோ, நீராவியினாலோ வெப்பம் பெறப்படுகிறது.

## 1. உலர் சமையல் முறைகள்

1. **வறுத்தல்:** சட்டியில் வறுப்பது, சுடுவது முதலியன. இம் முறையில் உணவின் உட்பாகம் வெந்து வெளிப்

பாகம் முறுகலாகும். தீ புகை யில்லாமலிருக்கச் சிறிது அளவு உப்புப் போடலாம்.

2. **ரொட்டிபோல் சுடுதல்:** முன் நாட்களில் சூடான சாம்பலில் பனங்கிழங்கு முதலியவைகளைச் சுடுவார்கள். இக் காலங்களில் பேக்கிங் பெட்டிகளும் செங்கல்லினல் கட்டப்பட்ட அடுப்புகளும் இருக்கின்றன. இந்த முறை நம் நாட்டில் மிகுதியாகப் பழக்கமில்லை. ஆனல் இவ்விதமாகச் சமைத்தல் உடம்பிற்கு மிகவும் நல்லது; எளிதில் செரிக்கும். ஏனென்ருல், இதில் நாம் எண்ணெயே பயன்படுத்துவ தில்லை. ஆகையின் செரித்தல் எளிமையாகிறது. எண் ணெய் கலந்தால் சுவை மிகுவது உண்மைதான். ஆனல் வாய்க்கு மட்டும் சுவையாக இருந்தால் போதுமா? காய்கறிகளைச் சுமார் 250–325 வெப்ப நிலையில் சுடலாம். சூடான சாம்பலில் ஒரு காகிதம் போட்டால் 4 நிமிடங்களில் கறுப்பாக மாறினல் அதன் வெப்பநிலை காய்களுக்கு ஏற்றது. காகிதம் ஒரு நிமிடத்தில் மாறினல் அந்த வெப்ப நிலையில் ரொட்டி சுடலாம்.

3. **நெருப்பில் வதக்குதல்:** உணவை நெருப்பின் கதிர் களில் திருப்பி வாட்டுகிறது. இது பழங்கால முறையா னலும் சுவையும் மணமும் நிறைந்த உணவு தயாரிக்க ஏற்ற முறையாகும்.

4. **தகட்டின்மேல் வாட்டுதல்:** நெருப்பின்மேல் ஒரு தட்டை வைத்து உணவை வாட்டுதல். தோசை, அடை முதலியன இவ்வாறு செய்யப்படுகின்றன.

5. **நீராவியில் அவித்தல்:** இம் முறையில் நீராவியைக் கொண்டு பொருள்களை வேக வைத்தல். இதனல் சத்துக்கள் வீணுகாமல் இருக்கும். ஒரு பாத்திரத்தில் தண்ணீரைவிட்டு அதற்குள் அரிசி, பருப்பு, காய்கறிகள் முதலியவையுள்ள இன்னெரு பாத்திரத்தை வைத்து, இவை யாவற்றையும் ஒரு பெரிய பாத்திரத்தால் மூடவேண்டும். ஒரு நேரத்தில் இவை யாவும் வெந்துவிடும். மிகுந்த வேலையு மிருக்காது.

6. **எண்ணெயில் பொரித்தல்:** எண்ணெய் அதிகச் சூட்டிலிருந்தால்தான் எண்ணெய் உணவுப் பதார்த்தத்தில்

கோக்காமல் இருக்கும். எண்ணெய் காய்ச்சியவுடன் வெப்ப நிலை வராமல் இருந்தால் நல்லது. உடனே புகை வந்தால் தேகத்திற்கும் கெடுதல்; உணவிலும் வாசனை வரும். எண்ணெய் காய்ந்திருக்கிறதா எனப் பார்க்க ரொட்டித் துண்டு ஒன்று போட்டால் 40 நொடியில் கறுக்கவேண்டும். பொரித்தவுடன் காகிதத்தின் மேல்வைத்தால் அதிக எண்ணெயை அகற்றிவிடலாம். பொரித்த உணவுகள் முறுகலாகவும் நிறமாகவும் இருக்கும். காய்ந்த எண்ணெயைச் சுத்தப்படுத்த உருளைக் கிழங்குகளைப் பொரித்து வடிகட்ட வேண்டும்.

## 2. ஈர சமையல் முறைகள்

1. நீரில் உணவுப் பொருட்களை வேக வைப்பது: முதலில் தண்ணீரைக் கொதிக்க வைத்துப் பிறகு, மெதுவாகக் காய்கறிகளைப் போடவேண்டும். இம் முறையில் பொருளிலுள்ள சத்துக்கள் வெளிவருவதனால் அந்தத் தண்ணீரைக் கீழே கொட்டாமல் வேறே எதற்காவது பயன்படுத்த வேண்டும். இல்லாவிட்டால் நாம் பொருள்களின் சக்கையைத்தான் உண்போம்.

2. மெல்ல வற்றவைத்தல்: இம் முறையில் நீர் தளதள வென்று கொதிக்காமல் மேலே மட்டும்தான் மெதுவாகக் கொதிக்கும். குழம்பு முதலியவற்றை இம்முறையில் சுண்ட வைக்கலாம்.

3. புழுங்க வைத்தல்: சிறிதளவு நீரில் பொருள்களை வேக வைத்தல். கிழங்கு முதலியவைகளை இம்முறையில் வேக வைக்கலாம்.

"வீட்டில் என்ன உணவுக்குக் குறைவா? ஏன் இந்தக் குழந்தைகள் இப்படி மெலிந்து இருக்கிறார்கள்?" என்று தாய்மார்கள் கூறுவதைக் கேட்டிருக்கிறோம். ஆனால், அதற்குக் காரணம் உணவின்மை அன்று. அதன் சத்தின்மை என்று தாய்மார்கள் அறியவேண்டும். சோற்றினைக் கஞ்சி வடிக்காமல் ஆவியில் வேகவைக்க வேண்டும். இதனால் அதிலுள்ள வைட்டமின்கள் கெடா. காய்கறிகளின் தோலை

மிகுதியாகச் சீவக் கூடாது. மேல்தோல் இல்லாவிட்டால் பொருட்களிலுள்ள சத்துக்கள் கரைந்து வெளிவரும். தண்ணீர் கொதித்தபின் மெதுவாகப் பொருட்களைச் சேர்த்தால் வைட்டமின்–சி சத்துக் கெடாது. உருளைக் கிழங்குகளைத் தோலுடன் வேகவைக்கலாம். சிலர் வேக வைப்பது கடினமென்று சோடா உப்பைச் சேர்ப்பர். இது ஒரு நஞ்சினை நாமாகவே சேர்ப்பதாகும். காய்கறிகளை மிகுதியாகத் துண்டங்களாக்கக் கூடாது. இவ்வித முறையில் நாம் உணவைப் பாழாக்கிச் சத்துக்களை அழிக்கிறோம். நாம் மிகுதியாக மசாலைப் பொருள்களைச் சேர்க்கிறோம். இப்படி மசாலை சேர்ப்பதால் மணத்தையும் சுவையையும் மிகுதிப் படுத்தினாலும், நரம்புகளுக்கு மிகுதியான கெடுதல் ஏற்படும். ஆகையால் இதை நாம் குறைக்கவேண்டும். இதனால் பணம்கூட மிகுதியாகும். காய்களைப் பத்து நிமிடங்களுக்கு மேல் வேக வைக்காமல் எடுத்துவிட வேண்டும்.

எப்பொழுது எதை வாங்கவேண்டும்? எது மிகவும் மலிவு? ஆனால் எது சத்தானது? என்ற நினைப்புகள் குடும்பப் பெண்ணிற்கு எப்போதும் இருக்க வேண்டும். உணவுத் திட்டத்தில் தினமும் கீரை சேர்க்க வேண்டும். மேலும் காய்கறிகளைத் தயாரித்தால் ஒன்று மெதுவாகவும், ஒன்று நார் ஆகவுமுள்ள காயைச் சேர்க்கவேண்டும். உணவில் பல நிறங்கள் வருமா என்று எண்ணிச் சமைக்கவேண்டும். எடுத்துக் காட்டாக, சாதம்–வெள்ளை, காரட்–சிவப்பு, கீரை–பச்சை, ரசம்–மஞ்சள்.

ஆகவே உணவைத் தயாரிப்பது ஒரு பெரிய கலைதான். உணவைப் பெருக்கித் தகுந்த முறையில் பக்குவப்படுத்திச் சமைப்பது மிகவும் இன்றியமையாததொன்று. இவைகளை ஆராய்ந்து ஒரு பெண் சமையல் செய்தால், குடும்பத்தின் நலம் அதிகரிக்கும். மகிழ்ச்சி நிலவும். வருங்காலக் குடி மக்களான நம் சிறுவர்கள் தாய்மார்களால் சத்துள்ள உணவு ஊட்டப்பட்டால் உடலின் நிலைமையும் நலமும் உயரும்.

# கஅ. நல்லமரமும் நச்சுமரமும்

[டாக்டர், ரா. பி. சேதுப்பிள்ளை]

ஒரு நாள் ஓர் அரசிளங் குமரன் தன் தோழனைத் துணைக்கொண்டு கானகத்தில் வேட்டையாடச் சென்றான். அங்கு, அவன் விரும்பியவாறு வேட்டையாட வேங்கையும் வேழமும் அகப்படாமையால், எங்கும் அலைந்து திரிந்து அலக்கணுற்றான். பசியால் மெலிந்து, வெயிலால் உலர்ந்து, இருவரும் தளர்ந்து சோர்ந்தார்கள்; அப்போது, நெடுந் தூரத்தில் ஒரு சிற்றூர் தோன்றக் கண்டு, அவ்வூரை நோக்கி மெல்ல நடந்து செல்வாராயினர். கதிரவன் வெம்மையால் அரசிளங் குமரன் தலைநோயுற்றுத் தன் தோழனது தோளைப் பற்றிக்கொண்டு வழிநடந்தான். அவ் வூரின் அருகே வந்தபோது, இருவரும் மெய் சோர்ந்து, நா வறண்டு, அடிவைத்து நடப்பதற்கும் வலியற்றவ ராயினர். அந் நிலையில் இருவரையும் இன்முகங்கொண்டு எதிர் சென்று அழைப்பதுபோல் இளந்தென்றல் எழுந்து வந்தது. அம் மெல்லிய பூங்காற்றின் இனிமையால் புத் துயிர் பெற்ற நண்பர்கள், அகமும் முகமும் மலர்ந்து, தென்றல் எழுந்துவந்த திசை நோக்கிச் சென்றார்கள். அவ் வழியில், இளந் திரைகளோடு இலங்கிய நன்னீர்ப் பொய்கை யொன்று அமைந்திருந்தது. அப் பொய்கையில் விளங்கிய செந்தாமரையில் அன்னங்கள் அமர்ந்து துயின்ற அழகு கண்ணைக் கவர்ந்தது. நற்றாமரைக் கயத்தில் துயின்ற நல்லன்னத்தைக் கண்ட இளவரசன் துணைவனை நோக்கி,

*"தோயும் திரைகள் அலைப்ப தோடார் கமலப் பள்ளி*
*மேய வகையில் துஞ்சும் வெள்ளை யன்னம் காணாய்."*

என்று தான் பெற்ற இன்பத்தை இனிது எடுத்துரைத்தான். அப் பொய்கையில் இலங்கிய அழகிய மலர்கள் முகமலர்ந்து இருவரையும் அருகே அழைப்பனபோல் அசைந்தன. அவ் வாவியின் தன்மையும் செம்மையும் கண்ட இருவரும், தாய் முகம் கண்ட சேய்போல் மனம் களித்து அந் நன்னீரைப் பருகி மகிழ்ந்தார்கள். அருந் தாகத்தால் வருந்திய இரு

வருக்கும் தண்ணீரை எடுத்து வழங்கும் தன்மைபோல் அடுக்கடுக்காக அலைகள் கரையருகே வந்து சேர்ந்தன. தாகம் தணிந்து, மனமும் மெய்யும் குளிர்ந்த பின்னர், இருவரும் அக் குளத்தின் ஈரக் கரையில் இனிதமர்ந்து அங்கு வீசிய இளங்காற்றை நுகர்ந்து இன்புற்றார்கள்; அப்போது அவ் வாவியின் அருகே கொத்துக் கொத்தாகப் பொன் நிறக் கனிகளைத் தாங்கி, குளிர் நிழல் விரித்து நின்ற மரமொன்றைக் கண்டார்கள். அதன் நிழலிலே தங்கி இளைப்பாற எண்ணி, இருவரும் அங்குச் சென்றனர்.

கதிரவன் வெம்மையைத் தடுப்பதற்கு ஓங்கிய பாசிலைப் பந்தர் வேய்ந்தாற் போன்று விளங்கிய மரத்தின் நிழலில் இருவரும் அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்தார்கள். சில நாழிகை சென்ற பின்னர், தோழன் துயிலொழிந்து எழுந் தான்; எங்கும் பசுமை நிறமும், பறவையின் ஒலியும், பழத்தின் மணமும் நிறைந்திருப்பினும், பசியின் கொடுமை யைப் பொறுக்கலாற்றாது வருந்தினான்; கற்பகத் தரு வெனக் கவின் பெற விளங்கிய மரக் கொம்புகளை நயந்து நோக்கினான்; அவற்றில் பொன்னிறமான பழங்கள் கொத்துக் கொத்தாய் எம் மருங்கும் இலங்கக் கண்டான்; அப்பொழுதே அம் மரக் கிளைகளின் வழியாக மேலே சென்று, இருவரது அரும் பசியையும் தீர்ப்பதற்குப் போதிய கனிகளைக் கொய்து வந்து, துணைவனைத் துயிலினின்றும் எழுப்பினான். கனிகளின் நிறத்தைக் கண்டும், நன் மணத்தை நுகர்ந்தும், தீஞ்சுவையைத் துய்த்தும், இரு வரும் இன்புற்றார்கள். பின்னும் சிறிது பொழுது அம் மரத்தின் நிழலில் அமர்ந்திருக்கையில், அரசகுமாரனது தலைநோய் மிகுந்தது. அதனைத் தீர்க்கும் வகை யறியாது தோழன் திகைத்து, 'எவரேனும் இவ் வழி வாராரோ' என்று எதிர் நோக்கி இருந்தான்.

இவ்வாறு இருக்கையில் அவ்விடத்தை நோக்கி ஒரு முதியவன் வந்து சேர்ந்தான். "தலைக் குத்துத் தீர்க்கும் மருந்து தங்களிடம் உண்டோ?" என்று தோழன் அவனை வினவினான். அப்பொழுது முதியோன் புன்னகை பூத்து, "கையில் வெண்ணெயிருக்க நெய் தேடி அலையும் வெள்

ளியரும் உண்டென்பதை இன்று நேராக அறிந்தேன்; இம் மரத்தின் பட்டையில் சிறிது செதுக்கி, அதன் சாற்றைத் தலையிற் பிழிந்தால் எவ்வகைத் தலைக் குத்தும் தீர்ந்து விடுமே!'' என்று சொல்லி அப்பாற் சென்றான். அதை அறிந்த தோழன் அளவிலா மகிழ்வடைந்து அம் மரப் பட்டையின் சாற்றை மன்னன் மைந்தனது தலையிற் பிழிந்தான்; சிறிது நேரத்தில் அரசிளங் குமரனது தலைக்குத்து அறவே ஒழிந்தது.

அந் நிலையில், தோழன் தலைநோய் தீர்ந்த இளவரசனை நோக்கி, "ஐயனே! நாம் இருவரும் கானகம் சென்றது முதல் இது வரையும் நிகழ்ந்த செயல்களைப் பார்த்தாயா? நாம் பசியாலும் வெயிலாலும் நலிந்து, மெய் தளர்ந்து, வருந்தும் நிலையில் இப் பொய்கை நம்மை அன்புடன் அழைத்து இன்முகம் காட்டித் தாகம் தணித்துத் தளர்வை மாற்றியது. அப்பால், இம் மரம் நாம் தங்கியிருக்கக் குளிர் நிழல் தந்து பசியாறப் பழங்கள் அளித்துத் தலைநோய் தீர்க்கவும் தனி மருந்தாய் அமைந்தது. இத் தன்மையை நோக்குங்கால், நல்லார் கைப்பட்ட செல்வத்தின் தன்மை நன்கு விளங்குமன்றோ? வறுமையால் வருந்தி வந்தவரை இனிய முகத்தோடு ஏற்று, அவரது குறையை நிறை செய்வதே அறிவுடைய செல்வர் செயலாகும். ஆற்றுவழியாகவும், ஊற்று வழியாகவும் நன்னீரைத் தன் அகத்தே நிரப்பிக்கொள்ளும் இப் பொய்கைபோல், அறிவுடையார், நல்வழிகளால் ஈட்டிய பெரும்பொருள் நிறைந்த பண்ணைகளாய் விளங்குவார்கள். நீர் நிறைந்த பொய்கை எப்பொழுதும் தண்மை வாய்ந்து விளங்குதல்போல, அறிவுடைய செல்வரும் ஈரம் வாய்ந்த நெஞ்சினராய் இலங்குவார்கள். தாகத்தால் வருந்தி வருவோர்க்குத் தடையின்றி நீர் வழங்கும் தடாகம்போல், கல்வியும் செல்வமும் பூத்த மேலோர் வறிஞர்க்கு வரையாது பொருள் வழங்கும் வள்ளல்களாய் விளங்குவார்கள். இன்னும், தமக்கென வாழாது பிறர்க்குரியாளராய் வாழும் பெரியார்பால் அமைந்த செல்வம், ஊருணியின் நீர்போல ஊரார்க்கே முழுவதும் பயன்படுவதாகும். இதனாலேயே,

'ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு'

என்று திருவள்ளுவர் அருளிப்போந்தார். இன்னும் பழுதறு பழங்களைத் தாங்கி நிற்கும் இப் பயன்மரம் தன் இனிய பழங் களால் பசிநோய் அகற்றி, குளிர் நிழலால் களைப்பை மாற்றி, பட்டையால் பிணியைப் போக்கி, பலவகையாகப் பயன் படுதல்போல, அறிஞரிடம் அமைந்த செல்வம் வறியார்க்குப் பலவகையிற் பயன்படுதலாலேயே,

'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின்'
'மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.'

என்னும் நாயனர் பொருளுரை எழுந்தது. ஆகவே, தண்மை வாய்ந்த தடாகம் போலவும், பழங்கள் நிறைந்த பயன்மரம் போலவும், வாழ்வதே பண்புடைமையாகும்" என்று இனிதாக எடுத்துரைத்தான். அரசிளங் குமரனும் அதன் உண்மையை அறிந்து தோழன் கூறிய பொரு ளுரையைப் பொன்போற் போற்றினன்.

அப்பால், இருவரும் தமது ஊருக்குச் செல்லும் வழி யில் ஒரு சிற்றூர் குறுக்கிட்டது. அதன் நடுவே இருவரும் முன் கண்டறியாத ஒரு மரத்தினைக் கண்டு வியந்து நின் றூர்கள். அம் மரம் கவையாகிக் கொம்பாகிக் காட்டு மரம் போல் ஓங்கி வளர்ந்திருந்தது. அதன் கொம்புகளிலும், கிளைகளிலும் கூரிய முள் நிறைந்திருந்தது. இலைகளும் தழைகளும் இல்லாமல் பட்டமரம்போல் நின்ற அதன் கிளை களில் செவ்வையாய்ப் பழுத்த பழங்கள் கொத்துக் கொத் தாய் அமைந்து கண்களைக் கவர்ந்தன. அம் மரத்தைக் கண்டு இருவரும் வியந்து நிற்கையில் அவ் வழியாக ஓர் இளைஞன் வந்து சேர்ந்தான்.

அவன், மரத்தருகே நின்ற இருவரையும் இனிது நோக்கி, "ஐயா! நீங்கள் இருவரும் அயலூரார் என்பதை அறிந்தேன். ஏனெனில், இவ்வூரார் எவரும் இப் பாழான பழுமரத்தைக் கண்ணெடுத்தும் பாரார்கள். இம் மரத்தில் எந்நாளும் இலைகளும் தழைகளும் இல்லாமையால் விலங்கு

களும் இதனடியில் நில்லாமல் விலகிப்போகும்; கண்களைக் கவரும் வனப்பு வாய்ந்த இக் கனிகளும் நச்சுக் கனிகளாய் இருத்தலின், உண்டாரைக் கொன்றுவிடும். இம் மரத்தின் கொம்புகளை விறகாய் வெட்டி எரிப்பதற்கும் இதனிடம் அமைந்த முள் இடையூறு யிருக்கின்றது. இப்பாழ் மரம் கடுங் காற்றில் அகப்பட்டு முறிந்து வேரற்று விழவேண்டுமென்று இவ்வூரார் இறைவனை நாளும் வழிபடுகின்றனர். இம் மரம் என்று விழுமோ, அன்றே இவ்வூராருக்கு நன்றாகும்," என்று அதன் தன்மையை விரிவாகக் கூறி முடித்தான்.

அதைக் கேட்ட அரசிளங் குமரன் முன்னே தங்கி இளைப்பாறிய மரத்தின் நலத்தையும், பின்னே கண்ட மரத்தின் கொடுமையையும் ஒப்புநோக்கி, நச்சு மரத்தில் அமைந்த நன்னிறக் கனிகள், பேதையர் கைப்பட்ட செல்வம்போல் பிறர்க்கு இடர் விளைப்பனவாகும் என்று எண்ணி வருந்தினன்;

"நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று."

என்னும் பெய்யா மொழியின் பொருளைத் தெளிந்தான்.

இத்தகைய செல்வம் நிறைந்த பேதையர் நிலத்துக்குச் சுமையாகவும், உலகத்திற்கு உற்ற வசையாகவும் அமைந் திருத்தலால், அன்னார் அழிந்து ஒழிவதே நாட்டுக்கு நன்மை பயப்பதாகும். அறிவுடைய செல்வரை உலகம் போற்றும்; அறிவற்ற செல்வரை உலகம் தூற்றும். அறிவுடைய செல்வனது ஆக்கம் கண்டு உலகம் களிக்கும்; அறிவிலாச் செல்வனது அழிவைக் கண்டு உலகம் மகிழும். அறிவுடைய செல்வன் தன் பொருளைத் தக்கவாறு பயன்படுத்தி இம்மை யிற் புகழும், மறுமையில் இன்பமும் எய்துவான். அறிவிலாச் செல்வன் பயன்பட வாழும் பண்பறியாப் பேதையனாய் இம்மையிற் பழியும், மறுமையில் துன்பமும் எய்துவான்.

"நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு."

என்பது என்றும் பொய்யா மொழியே யாகும்.

## ௧௪௯. தென்னையின் செல்வம்

[திரு. P. A. முஹம்மது இப்ராஹீம்]

**முன்னுரை:** உலகத்தில் பயிர்த்தொழில் முன்னேற்றம் அடைந்த நாடுகளே செல்வாக்குள்ள நாடுகளாக விளங்குகின்றன. அமெரிக்காவும், இரஷியாவும் பயிர்த்தொழில் துறையில் புதிய முறைகளை மேற்கொண்டு உணவு உற்பத்தியைத் தம் மக்களின் தேவைக்குமேல் அதிகமாக்கி, எஞ்சியதைப் பற்றாக்குறை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றன. நம் இந்தியாவிலோ பயிர்த்தொழில் வருந்தத் தக்க அளவில் பிற்போக்கில்தான் இருக்கிறது. உணவுப் பற்றாக்குறையை நீக்கப் பிற நாடுகள்தாம் இந்தியாவிற்கு உதவி செய்கின்றன.

நம் நாட்டில் தேங்காய் உற்பத்தியும் பற்றாக்குறையாகத்தான் இருக்கிறது. மக்கள் தொகைப் பெருக்கத்தாலும் தேங்காயைப் பயன்படுத்தும் வழக்கம் மிகுந்துகொண்டிருப்பதனாலும், நாட்டில் தேங்காய் எண்ணெயின் தேவை ஆண்டுதோறும் மிகுந்து கொண்டே வருவதனாலும் தேங்காய் அதிகம் வேண்டியிருக்கிறது. தேங்காய் எண்ணெய்த் தேவையை நிறைவு செய்ய இலங்கை, மலேயா முதலிய நாடுகளிலிருந்து ஆண்டுதோறும் ஏறத்தாழ 40,000 டன் எண்ணெய் அடிப்படையில் இறக்குமதி செய்யப்படுகிறது. நம் நாட்டில் பொருளாதார நெருக்கடி இருக்கும் இந்த நேரத்தில் கோடிக் கணக்கில் நம் நாட்டுப் பணம் வெளி நாடுகளுக்குச் செல்வது வருந்தத்தக்க செய்தியாகும். இவ்வைந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் நாட்டின் பற்றாக்குறை 80,000 டன் தேங்காய் எண்ணெய் எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இந் நிலையைத் தவிர்க்க, தமிழ் நாட்டில் தென்னை வளரத்தக்க நிலங்களில் கன்றுகளை நட்டுப் பயிர் செய்யவேண்டும். இப்போது உள்ள தென்னை மரங்களில் காய்ப்பை அதிகரிக்க முயற்சி செய்யவேண்டும்.

**இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்:** தேங்காய் உற்பத்தியைப் பெருக்கி, நாட்டின் பற்றாக்குறையைப் போக்கும்

நோக்கத்துடன் சென்னை அரசாங்கத்தார் பல திட்டங்களை வகுத்துள்ளனர். அவைகளில் சில நடைமுறைக்கு வந்து விட்டன. இன்னும் சில திட்டங்கள் மிகுவிரைவில் நடை முறைக்குவரும். இப்பொழுது நடைமுறையில் இருப்பது மிக விரிந்த தென்னை நாற்றங்கால் திட்டமாகும். இத் திட்டப்படி ஆண்டுதோறும் 1,26,000 பொறுக்குத் தென்னங் கன்றுகள் நான்கு நாற்றங்கால்களிலிருந்தும் கீழ்க்கண்ட கணக்குப்படி விலைக்குக் கொடுக்கப்படுகின்றன.

| | நாற்றங்கால் உள்ள இடம் | தென்னங் கன்றுகள் |
|---|---|---|
| (1) | பட்டுக்கோட்டை (தஞ்சை மாவட்டம்) | 36,000 |
| (2) | திண்டிவனம் (தென் ஆற்காடு மாவட்டம்) | 30,000 |
| (3) | மத்திய பண்ணை (கோயம்புத்தூர் மாவட்டம்) | 30,000 |
| (4) | நாகர்கோவில் (கன்னியாகுமரி மாவட்டம்) | 30,000 |
| | ஆகமொத்தம்............... | 1,26,000 |

பொறுக்குத் தென்னங் கன்றுகள்: தென்னை பயிரிடும் போது முதன்மையாகக் கருதவேண்டியது, பொறுக்குத் தென்னம் பிள்ளைகளை நடுவது. அது மிக மிக இன்றி யமையாததாகும். நல்ல வீரியமுள்ள கன்றுகளில்தான் காய்ப்பு அதிகம் இருக்கும். வீரியம் உள்ள கன்றைப் பெற, நல்ல வீரியமும் காய்ப்பும் உள்ள தென்னை மரங்களிலிருந்து முதிர்ந்த நெற்று எடுத்து நடவேண்டும். மரங்களிலிருந்து முற்றின நெற்றுக்களைப் பாதுகாப்புடன் இறக்கி, நாற்றங் காலில் நட்டு, ஒன்பது மாதத்திற்குப்பின், அதிக வளர்ச்சி யும் அதிக இலைகளும் அடிப்பாகம் பருத்தும் உள்ள வீரிய முள்ள கன்றுகளைப் பொறுக்கித் தோட்டங்களில் நட வேண்டும். இவ்விதம் பொறுக்கினவைகளை நடுவதால், எல்லா மரங்களும் அதிக விளைவைக் கொடுத்து, தோட் டத்தின் வருவாயைத் தவருமல் உயர்த்தும். இம்முறையை மேற்கொள்ளாமல் முன்பின் அறியாத மரங்களிலிருந்து நெற்று எடுத்து நாற்றங்காலில் புதைத்து, முளைத்த எல்லாக் கன்றுகளையும் தோட்டத்தில் நட்டால், பத்து ஆண்டுக ளுக்குப் பின் சில அதிகக் காய்ப்பு பிடிப்பதையும், சில காய்ப் பில்லாமல் இருப்பதையும் கண்டு தண்ணீர் இறைத்துப் பாடுபட்டு வளர்த்தவர்கள் ஏமாற்றம் அடைகின்றனர்.

தோட்டக்காரர் தொடக்கத்தில் பொறுக்குக் கன்றுகள் நடாத சிறு தவறினால், மரங்கள் உயிரோடு இருக்கும் எண்பது ஆண்டுகள் வரை, தோட்டத்தின் வருவாய் மிகக் குறைந்து தங்கள் முயற்சிக்குத் தகுந்த பலன் இல்லாமல், சோர்வடைகின்றனர்; தென்னை வளர்ப்புத் தொழிலில் ஊக்கம் குறைகின்றனர். ஆகவே, அரசாங்கப் பண்ணைகளில் உற்பத்தியாகும் பொறுக்குத் தென்னங் கன்றுகளை வாங்கி நட்டால் நல்ல பயன் கிடைக்கும்.

தென்னங் கன்றுகளை நடும் முறையும், அவற்றைப் பாதுகாத்தலும்: தென்னங் கன்றுகளை 25 அடிக்கு ஒன்றாக வரிசையாக நடவேண்டும். இம்முறையில் ஏக்கர் ஒன்றுக்கு 70 கன்றுகள் நடலாம். குழிகளை 3′×3′×3′ என்ற அளவில் தோண்டிக் குறைந்தது 1′ ஆழத்தில் தென்னங்கன்றுகளை நடவேண்டும். சூரியனின் வெப்பம் காலையிலும் மாலையிலும் தாக்காவண்ணம் கிழக்கிலும் மேற்கிலும் ஓலைகளை நட்டு நிழல் கொடுக்க வேண்டும். ஆடுமாடுகள் கெடுத்துவிடாதபடி வேலி அடைத்துக் காப்பாற்ற வேண்டும். வெயிற் காலத்தில் தண்ணீர் தவறாது இறைக்கவேண்டும். இம்முறைகளைக் கையாண்டால் எல்லா மரங்களும் 8 அல்லது 10-ஆம் ஆண்டில் விளைவைக் கொடுக்கத் தொடங்கும்.

உழவு: தென்னை மரங்கள் அதிக விளைவைக் கொடுப்பதற்கு ஓர் ஆண்டில் குறைந்தது மும்முறையாவது உழுதல் வேண்டும். முதல் உழவு ஜூன் மாதத்திலும், இரண்டாவது உழவு செப்டம்பர் மாதத்திலும், மூன்றாம் உழவு டிசம்பர் மாதத்திலும் தவறாது செய்யவேண்டும். காசர்கோடில் உள்ள ஆராய்ச்சிப் பண்ணையில் உழவே செய்யாத தொண்டியில் தேங்காயின் விளைவு நூற்றுக்கு ஏழு பங்கு குறைந்து விட்டதையும் முறைப்படி உழுத தொண்டியில் 170 பங்கு அதிக விளைவு கிடைத்ததையும் ஆராய்ச்சி மூலம் கண்டு பிடித்துப் பதிவு செய்திருக்கிறார்கள். ஆதலால் தேங்காயின் விளைவை மிகுதிப்படுத்த ஒவ்வோர் ஆண்டிலும் நிலத்தை உழுதல் வேண்டும்.

உரம்: தொடக்கத்திலிருந்தே தென்னங் கன்றுகளுக்கு ஒவ்வோர் ஆண்டிலும் உரம் இட்டு வந்தால் விரைவில்

பலன் அடையலாம். வருடந்தோறும் ஒரு கன்றுக்கு 10 ராத்தல் சாம்பல் வீதம் பாளைவிடும் பருவம் வரையில் போடவேண்டும். பாளை விட்டபின் ஒரு மரத்திற்கு 20 அல்லது 30 ராத்தல் சாம்பலும், அம்மோனியம் சல்பேட்டு 3 ராத்தலும், எலும்புத்தூள் அல்லது சூபர் பாஸ்பேட் 2 ராத்தலும், தொழு உரம் 100 ராத்தலும், பசுந்தாள் உரம் 100 ராத்தலும் வருடந்தோறும் போட்டு வந்தால் விளைவு அதிகரிக்கும். கொளிஞ்சி, கேலபோகோனியம் முதலிய பசுந்தாள் உரப் பயிரை உண்டாக்கி மடக்கி உழுவதும் நல்ல முறையாகும்.

பல பயிர்கள் ஆண்டுக்கு ஒரு முறைதான் விளையும். ஆனால் தென்னையோ ஒவ்வொரு மாதமும் ஒரு தேங்காய்க் குலையைக் கொடுக்கிறது. ஆகவே தொடர்ச்சியாகப் பாளை விடும் மரங்கள் அதிகமாய் உள்ள தோட்டங்கள் மாதந்தோறும் விளைந்து நமக்கு மாத வருமானத்தைக் கொடுக்கும். இச் சிறப்பான தன்மை தென்னையிலிருப்பதைப்போல் வேறு எந்தப் பயிருக்கும் இல்லை. இப்படிப்பட்ட சிறப்புத் தன்மை வாய்ந்த மரத்திற்கு மாதம் ஒருமுறை உரம் அளிக்கா விட்டாலும், வருடம் ஒரு முறையாவது உரம் இட்டு மாத வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளுங்கள். உரம் இடுவதில் தவற வேண்டாம்.

இடைப்பயிர்: தென்னை செங்குத்தாக வளர்வதால், 25 அடி இடைவெளி விட்டு நட்ட தோட்டங்களில் வருவாய் கிடைக்க இடைப்பயிர்த் தொழில் செய்யலாம். இடைப் பயிருக்காகக் கையாளும் பயிர்த்தொழில் முறைகள் தென்னைக்கும் பலன் கொடுக்கின்றன. தென்னந்தோட்டத்தில் வாழை, கரும்பு, கடலை முதலியவைகளைப் பயிரிடுவதற்காகச் செய்யும் உழவு, உரம் போடுதல், நீர் பாய்ச்சுதல் முதலியவை தென்னையின் விளைவைத் தவறாமல் அதிகப்படுத்தும். இவ்விதப் பயிர்த்தொழிலை வெற்றிகரமாகவும், இலாபகரமாகவும் நடத்துவதற்கு இன்றியமையாதவை தக்க இருமண்பாடான நிலமும், போதிய நீர் வசதியும் ஆகும். இவ்விரண்டு வாய்ப்பும் உள்ள இடங்களில் இரண்டு பயிர்களை உண்டாக்கி அதிக வருவாய் அடையலாம்.

பூஞ்சாளம்: தென்னையைத் தாக்கும் பூச்சிகளில் முக்கியமானது கருப்பு நிறமுள்ள ரைநாசிரஸ் வண்டு. இது மரத்தின் குருத்துப் பாகங்களைக் குடைந்து சென்று, வெடிக்காத இளம் பாளைகளைச் சேதப்படுத்துவதால் தேங்காயின் விளைவு குறைந்துவிடும். கொக்கியுள்ள இரும்புக் கம்பியைக் கொண்டு, வண்டை மரத்தின் தலைப்பாகத்திலிருந்து கிளப்பிக் கொல்லவேண்டும். பி. ஹெச். ஸி. 10 சத மருந்தை மணலில் கலந்து மரத்தில் தலைப்பாகத்தில் அடிக்கடி தெளிப்பதால், இவ்வண்டின் தாக்குதலைத் தடுக்கலாம்.

சில இடங்களில் சாறுவடியும் நோயினால் மரங்கள் பாதிக்கப்படுகின்றன. மரத்தில் சிவப்பு நிறமான சாறு வடிவதைக் கண்டவுடன், ஓர் உளியைக் கொண்டு புண்பட்ட பாகத்தைச் செதுக்கி எடுத்துவிட்டுத் தார் எண்ணெய் அல்லது போர்டோப் பசையைப் பூசவேண்டும். இம் முறையைக் கையாண்டால் மரம் வளம்பெற்று விளங்கும்.

தேங்காய் உற்பத்தியைப் பெருக்கி நாட்டின் வளத்தைப் பெருக்குங்கள்.

அரசர் பெயர் ஹிரோஹிட்டோ (Hirohito) என்பதாகும்; அரசியார் பெயர் நகாகோ (Nagako) என்பது.

புனிதம் மிக்க பூஜியாமா

ஜப்பானில் நோக்கும் திசையெல்லாம் மலைகளைக் காணலாம். எனினும், ஏழு மலைகளே அங்குக் குறிப்பிட்டுக் கூறத் தக்கவையாகும். அவற்றுள் தலையானதும் உலக மக்கள் கவனத்தைக் கவர்ந்திருப்பதுமான பூஜியாமா (Fujiyama) என்னும் மலை 12,392 அடி உயரமுடையதாகும். அடிப்புறத்தில் இதன் சுற்றளவு 63 மைல்களாகும். ஜப்பான் மலைகள் அனைத்தும் எரிமலைகளே ஆதலின் பூஜியாமாவும் எரிமலையேயாகும். எனினும் பூஜியாமா கொதித்து எரி கக்கும் மறநெறியைக் கைவிட்டு நீண்டகாலமாயிற்று என்னலாம். இன்று உச்சியில் பனி படர்ந்து, உலகோர் உள்ளத்தில் உவப்பூட்டி ஈர்க்கும் வண்ணம் அமைதி மிக்க தொரு வெள்ளிப் பனிமலையாகக் காட்சி அளிக்கின்றது. இதன் உச்சியில் இன்றும் எரி கக்கும் வாய் ஐந்நூறு அடி ஆழமுடையதாகப் பனி படர்ந்து, 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்பதைக் கற்றறிந்தது போல, அறநெறி காக்கும் அமைதிச் சின்னமாய் அமர்ந்திருப்பதைக் காண லாம். பூஜியாமாவின் கொடுமுடி, எட்டிதழ் கொண்ட தாமரை மலரொன்று இதழ்களை விரித்து மலர்ந்திருப்பது போன்று எழில் மிக்க தோற்றம் அளிப்பதாகும். தொலைவில் நின்று நோக்குவார்க்குப் பூஜியாமா ஐந்தாறு கொடுமுடிகளை உடையது என்றே தோன்றும்.

ஜப்பானியர் இதனைப் புனிதம் மிக்கதாகக் கருதி, ஆண்டுதோறும் இம்மலைக்கு யாத்திரை செய்கின்றனர். இந்த மலையைக் கடவுள்தன்மை வாய்ந்ததென்றே அம் மக்கள் கருதுகின்றனர். இம்மலைமீது ஏற எட்டுமணி நேரம் ஆகிறது. இரவில் யாத்திரிகர்கள் மலைமீது ஏறத் தொடங்கினால், கதிரவன் தோன்றும் நேரத்தில் மலையுச்சி அடைவர். பூஜியாமாவின் உச்சியில் கதிரவன் தோன்றும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாயிருக்கிறது. யாத்திரிகருக் கென்று மலைமீது ஆங்காங்கே சிறு குடில்கள் அமைக்கப்பட்

டிருக்கின்றன. யாத்திரிகர் இக்குடில்களில் தங்கி ஓய்வெடுத்துக்கொள்ளலாம். இம்மலைமீது ஏறிச் செல்வதற்கு வழி முழுமையும் படிகள் வெட்டப்பட்டிருக்கின்றன.

இம்மலையைப் பார்க்கச் செல்பவர்கள் இதன் அடியில் உள்ள ஐந்து அழகிய ஏரிகளைக் காணுமல் இருக்க முடியாது. இவ்வைந்தினையும் சேர்த்தால் 63 சதுர மைல்களாகின்றன. இந்த ஏரிகள் பனிக் காலத்தில் உறைந்துவிடுமாதலின், சறுக்கி விளையாடுவோர் இவற்றைப் பயன்படுத்திக் கொள்வர்.

இதற்கடுத்தது அசமாயாமா (Asamayama) என்னும் எரிமலையாகும். இதன் உயரம் 8500 அடியாகும். இந்த மலை அடிக்கடி தீக்குழம்பைக் கக்கிப் பல முறை ஜப்பான் நாட்டில் பெருஞ் சேதத்தை விளைவித்தது. நான்டாய் சான் (Nantai san), ஓயாமா (Oyama), ஷுகுபா சான் (Tsukuba san), ஆன்சன்கடகே (Onsengatake), மிஹாரா (Mihara) என்பவை அந் நாட்டிலுள்ள ஆயிரக்கணக்கான மலைகளுள் குறிப்பிடத் தக்கவையாகும்.

## ஆற்று வளம்

ஜப்பான், பெரும்பாலும் மிகச் சிறு தீவுகளாலான நாடே எனினும், ஆறுகள் பலவற்றைக் கொண்டது. அவற்றுள் மிக நீண்டதும் அகன்றதுமான ஆறு ஷினுனோ (Shinano) என்பது. இது 229 கல் தொலைவு ஓடிக் கடலில் கலக்கிறது. அதற்கடுத்தது டோனெகவா (Tonegawa) என்னும் ஆருகும். இந்த ஆறு கோட்சுகே (Kodzuke) என்னும் இடத்தில் தோன்றிக் கிழக்குத் திசை நோக்கி 170 கல் தொலைவு பாய்ந்து கடலில் கலக்கிறது. இவை இரண்டும் ஜப்பானில் பாயும் ஆறுகளில் நீண்டவை. பூஜிகாவா (Fugikawa) என்னும் ஆறு மிக விரைந்து பாய்கின்றது. இந்த ஆற்றில் தண்ணீர் ஓடிவரும் விரைவினை உலகில் வேறு எந்த ஆற்றுடனும் ஒப்பிட இயலாதாம். ஜப்பான் ஆறுகள் அனைத்தும் என்றும் வற்றுதனவே. வேனிற் காலத்திற்றுன் அங்குள்ள ஆறுகளில் தண்ணீர் பெரு வெள்ளமாக வருகின்றது. அங்குள்ள ஆறுகள் அனைத்தும்

மலைகளினின்றே தோன்றுவதால், கோடையில் அம்மலைகளின்மீது படிந்துள்ள பனி உருகி வெள்ளப்பெருக்கு ஏற்படுகின்றது.

ஏரி வளம்

ஜப்பானில் ஏரிகள் பல இருக்கின்றன. அவற்றுள் பீவா (Biwa) ஏரி என்பதே மாபெரும் ஏரியாகும். இந்த ஏரி ஐம்பது கல் நீளமும் இருபது கல் அகலமும் உடையதாகும். கடல் போன்ற இந்த ஏரி ஓமி (Omi) மாகாணத்தில் இருக்கின்றது. இதன் நீர் மூலம் ஜப்பானியர் மிகப் பெரிய அளவு மின்சார சக்தியை உற்பத்தி செய்கின்றனர்.

இயற்கைச் செல்வம்

ஜப்பான் நாட்டில் தங்கம், வெள்ளி, இரும்பு, செம்பு, நிலக்கரி, மணிகள் முதலியவை நிறையக் கிடைக்கின்றன. ஓஷியு (Oshiu), சுருகு (Surugu) மாகாணங்களில் தங்கக் கனிகள் இருக்கின்றன. அவற்றினின்று தங்கம் )ககபபடுகிறது

ஜப்பான் நாட்டில் குதிரை, எருது, பசு, பன்றி, ஆடு, கழுதை, நாய், பூனை முதலியவை வீட்டில் வளர்க்கப்படும் விலங்குகள் ஆகும். ஜப்பானியக் காடுகளில் காட்டுப் பன்றிகள், மான், நரி, குரங்கு போன்ற விலங்குகள் வாழ்கின்றன.

யாமாகுச்சி மாகாணத்தில் (Yamaguchi) வெள்ளைப் பாம்புகள் இருக்கின்றன. இவை ஆறடி நீளம் உடையவை. அந்நாட்டில் பறவை இனங்கள் பலவகையாக உள்ளன. மக்கள் தங்கள் வீடுகளில் கோழி, வாத்து, புரு முதலியவற்றை வளர்க்கின்றனர். இருபது 'அடி நீள வாலுள்ள ஒருவகைச் சேவலும் அந்நாட்டில் இருக்கிறது.

காடுகளில் கற்பூர மரங்கள் அடர்ந்து வளர்கின்றன. ஜப்பானியர் இந்த மரங்கள் மூலம் கற்பூரம் உற்பத்தி செய்து, வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றனர். கற்பூர மரங்கள் தொண்ணூற்றேரடி உயரம் வளர்கின்றன

வேறு பல மரங்களும் ஜப்பானில் நிறைய வளர்ந்து, ஜப்பான் செல்வத்தைப் பெருக்குகின்றன.

### கடல் தரும் செல்வம்

கடலிலிருந்து உப்பு, வகைவகையான மீன்கள், முத்து, பவழம் முதலியவை கிடைப்பதாலும், அவை அம்மக்களுக்குப் பெருஞ்செல்வம் ஈட்டித்தரும் பொருள்களாக விளங்குவதாலும், ஜப்பானியர் கடலைத் தங்கட்குக் கிடைத்துள்ள இயற்கையின் பெரும்பேறு என மதிக்கின்றனர். ஜப்பானியர் கடலில் மீன்பண்ணை, முத்துச்சிப்பிப் பண்ணை முதலியவற்றை அமைத்து, அவற்றை வளர்த்துப் பெருவாணிகம் செய்கின்றனர்.

### பழங்குடி மக்கள்

ஜப்பான் நாட்டின் பண்டைமக்கள் பெயர் அய்னு (Ainu) என வழங்கப்படுகிறது. இம்மக்கள் இனம் இன்று அளவில் குறைந்துள்ளது. இவர்கள் இன்று ஹொக்கைடோ (Hokkaido) தீவில் வாழ்கின்றனர். இவர்கள், உடலில் மயிர் அடர்ந்தவராய் அச்சமூட்டும் தோற்றத்துடன் காணப்படுகின்றனர்; எனினும், நட்புக்கு உகந்தவரா யிருக்கின்றனர்; பிற மக்களுடன் கலந்து உறவாடுகின்றனர்; கல்வி பயிலுகின்றனர்; சிறிது சிறிதாகத் திருந்தி வருகின்றனர்.

### இன்றைய ஜப்பானியர் யாவர்?

இந்த அய்னு மக்களே ஜப்பான் நாட்டின் பண்டைக் குடிகள். ஜப்பானில் இன்றுள்ள மக்கள் கி. மு. ஆறு, ஏழாம் நூற்றுண்டுகளில் குடியேறினர். இன்றுள்ள ஜப்பானியர் மஞ்சு, மங்கோலிய, மலேய இனத்தவர்களின் கூட்டுறவால் தோன்றியவர் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

### முதல் ஜப்பானிய மன்னர்

இங்ஙனம் குடியேறிய மக்களுள் ஜிம்மு டென்னோ (Jimmu Tenno) என்பார் பெருவீரராய்த் திகழ்ந்தவர். இவர் அய்னுக்களைப் போரில் முறியடித்து, மீண்டும் அவர்கள்

தொல்லை ஏற்படாவாறு, அவர்களை வட தீவுகளுக்கு ஓட்டி விட்டுக் கி. மு. 660 பிப்ரவரி 11–ஆந் தேதி யன்று இத்தீவு களின் மன்னரானார். அதனாற்றான் இன்றும் ஜப்பானில் இந்த நாள் அரசாங்கப் பொது விடுமுறைக்குரிய நாளாக விளங்குகிறது. ஜிம்மு டென்னோ வெற்றி பெற்ற பிறகு, இன்றுள்ள மக்கள் இத்தீவுகளில் கூட்டம் கூட்டமாகக் குடியேறி வாழலாயினர். துவக்கத்தில் சில அய்னூ மக்க ளுடன் இம்மக்கள் தொடர்புகொண்டமையால், இன்றுள்ள ஜப்பானியர் அய்னூ இரத்தக்கலப்பும் சிறிதளவு உடைய வர்கள் என்று கூறலாம்.

நாற்பெருந் தீவுகள்

எண்ணற்ற ஜப்பான் தீவுகளில் நான்கே சிறப்பிடம் பெற்றுள்ளவை என்று முன்னரே கூறினோம் அல்லவா? இவற்றுள் முதன்மைபெற்றுப் பெரும் நிலப்பரப்பு உடைய தாகவும் நடுத்தீவாகவும் இருப்பது ஹோன்ஷூ. இதுவே இன்று ஜப்பானின் தலைமைத்தீவு. ஹொக்கைடோ என்பது வடகோடித் தீவாகும். ஷிக்கோகு என்பது மற்றொரு தீவு. கியுஷூ என்பது நான்காம் தீவு. இவை நான்குமே இன்று ஜப்பான் நாடென விளக்கம் பெற்றுள்ளன.

ஜப்பான் நாட்டுத் தலைநகர்

ஜப்பானின் தலைநகராக விளங்குவது டோக்கியோ நகர மாகும். இது ஹோன்ஷூ என்னும் நடுத்தீவில் துறை முகப்பட்டினமாக அமைந்திருக்கிறது. இன்று இதன் நிலப்பரப்பு 2,063 சதுரக் கிலோ மீட்டர்களாகும்.* 15 ஆம் நூற்றாண்டு வரை இஃது ஒரு மீன் பிடிக்கும் சிற்றூரா யிருந்தது. அதன் பிறகே இது தலைநகரமாக மாற்றி அமைக்கப்பட்டது. இங்கு 1457 ஆம் ஆண்டில் ஜப்பான் மன்னரது அரண்மனை கட்டப்பட்டது. இன்று இந்நகரம் உலக நாகரிக நகரங்களுள் ஒன்றாக விளங்குகிறது. இது மேல்நகர், கீழ்நகர் என இரு பிரிவுகளாக மிகப் பரந்திருக் கிறது. அறுபது லட்சம் மக்கள் இந்நகரில் வாழ்கின்றனர்.

* =3280 89. அடி.

# குறிப்புரை

## செய்யுட் பகுதி

### க. வாழ்த்து

### 1. கடவுள் வாழ்த்து

ஆசிரியர் மாணிக்கவாசகர்; சைவ சமய ஆசிரியர் நால்வரில் ஒருவர்; திருவாதவூரிற் பிறந்தவர்; ஆதலால் இவருக்குத் திருவாதவூர் அடிகள் என்ற பெயரும் உண்டு. பாண்டிய மன்னனிடம் அமைச்சராய் இருந்து பின்னர் இறைவன் திருவருள் பெற்றுத் திருவாசகம், திருக்கோவையார் என்னும் இரண்டு நூல்களை இயற்றியவர். காலம் கி. பி. மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டு என்று அறிஞர் கூறுவர். இச் செய்யுள் திருவாசகத்தில் உள்ளது.

அருஞ்சொற் பொருள் :

வான் - ஆகாயம். வளி - காற்று. ஒளி - நெருப்பு. ஊன் - உடம்பு. கோன் - தலைவன். யான் எனது என்பன அகப்பற்று புறப் பற்றுக்கள். வாழ்த்துவன் : தன்மை ஒருமை வினைமுற்று.

### 2. தமிழ்த்தாய் வாழ்த்து

ஆசிரியர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்; தன வணிக மரபினர்; கி. பி. 1953ஆம் ஆண்டு வரை இருந்தவர். திருவாசகத்துக்கு விரிவுரை எழுதியும், வடமொழி நூல்கள் சிலவற்றை மொழி பெயர்த்தும், தமிழ் நூல்கள் சிலவற்றுக்கு உரை எழுதியும் தமிழ்த் தொண்டு புரிந்தவர். செய்யுள் நயம் புலப்பட விரிவுரை ஆற்றும் வல்லமை உடையவர். சைவ சமயத்தினர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பல ஆண்டுகள் பேராசிரியராய் இருந்தவர்.

அருஞ்சொற் பொருள் :

சால : உரிச்சொல் (மிகுதி என்னும் பொருள் உடையது.) மணி மிடறு - அழகிய கழுத்து. மடவரல் - பெண்; இங்குத் தமிழ்த் தாயை உணர்த்தியது. தமிழ்த் தாய் இறைவனுடைய மகள் என்பது கருத்து. அரண் - பாதுகாப்பு.

### 3. தமிழ்நாடு.

ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தரனார்; தமிழ்நாடு முழுவதும்புகழ் பெற்று வாழ்ந்த தனிப் பெருந்தலைவர். நல்ல தமிழ் நடையில் நூல்கள் பல இயற்றியுள்ளார். தமிழ்மொழி, தொழிலாளர் உலகம், பெண்கள் முன்னேற்றம், நாட்டு விடுதலை முதலிய பல துறைகளிலும் பணி புரிந்து வெற்றி கண்டவர். மக்கள் உள்ளத்தைக் கவரும் முறையில் சொற்பொழிவு ஆற்றி மகிழ்விப்பவர்: 1953 ஆம் ஆண்டு வரை இருந்தவர்.

**அருஞ்சொற் பொருள் :**

கேளிர் - சுற்றத்தார். ஒக்கும் உயிர் பிறப்பு - பிறப்பினால் உயிர்கள் யாவும் ஒப்பு உடையன. குடி அல்லோம் - அடிமை அல்லோம். தீது இல்லாமொழி - இலக்கணக்குற்றம் முதலியன இல்லாத தமிழ்மொழி. செந்தண்மை - குளிர்ந்த கருணை. செய்க ; வியங்கோள்

...கள் :

1. இறைவன் எவ்வெப் பொருள்களாய் இருக்கின்றான் ?
2. இறைவன் மக்களை எவ்வாறு கூத்தாடும்படி செய்கின்றான் ?
3. தமிழ் அன்னை என்ன என்ன சிறப்புக்களை உடையவள் ?
4. தமிழ்நாடு என்ன என்ன பெருமைகளை உடையது ?

## உ. அறவுரை

### 1. திருக்குறள்

திருக்குறள் என்பது சிறந்த குறள் வெண்பாக்களால் இயற்றப் பட்ட நூல் எனப் பொருள்படும். இந் நூல் அறத்துப்பால் பொருட் பால், காமத்துப்பால் என்னும் மூன்று பிரிவுகளை உடையது. இல்லற வியல் முதலிய ஏழு இயல்களையும் 133 அதிகாரங்களையும் உடையது. ஓர் அதிகாரத்துக்குப் பத்துக் குறளாக ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட்பாக்கள் இந் நூலில் உள்ளன. இந் நூலாசிரியர் திருவள்ளுவர். இவர் உண்மை வரலாறு கிடைக்கவில்லை. இவர் கி. பி 2 ஆம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்தவர்.

**அருஞ்சொற் பொருள் :**

**அறத்துப்பால்—பாயிரம்**

1. வேண்டுதல் - விருப்பம். வேண்டாமை-வெறுப்பு. சேர்தல்-விடாது நினைத்தல். இடும்பை - துன்பம்.
2. விசும்பு - ஆகாயம் துளி - மழைத்துளி. காண்பு-காணுதல் : தொழிற் பெயர்.
3. இருமை வகை-பிறப்பு வீடு என்ற இரண்டின் இன்ப துன்பக் கூறுபாடுகள். அறம்பூண்டார் - துறவறத்தை மேற்கொண்டவர். பிறங்கிற்று. - உயர்ந்தது
4. சிறப்பு - வீடுபேறு. ஆக்கம்-மேன்மை. அறத்தினூஉங்கு : உயிர் அளபெடை.
5. ஒல்லும் வகையான் - அவரவர்க்கு இயன்ற வகையில். செல்லும்வாய் - மனம், மொழி, மெய்கள் ஆகிய இடம்.

**இல்லறவியல்**

6. புறத்து ஆறு - இல்லத்தைவிட்டு வனத்துச் செல்லும் நிலை. போஒய் : உயிர் அளபெடை.

7. பெண் - மனைவி. பெருந்தக்க - மேன்மையுடையவை. திண்மை - கலங்காநிலை ; மன உறுதி.

8. சிறை - மதில், வாயிற்காவல் முதலியன. நிறை - நெஞ்சைக் கற்பு நெறியில் நிறுத்துதல். காப்பு - காவல் ; தொழிற் பெயர்.

9. மாநிலம் - பரந்த இவ்வுலகம் ; உரிச்சொல் தொடர். 'தம் மக்கள் அறிவுடைமை, மாநிலத்து மன் உயிர்க்கெல்லாம் தம்மின் இனிது' என்று கூட்டுக.

10. அறத்திற்கே அன்பு சார்பு - அறம் செய்வதற்கே அன்பு துணையாகும் மறத்திற்கும் அஃதே துணை - பாவம் செய்யாமல் காத்தற்கும் அன்பே துணை ஆகும்.

11. ஓம்பி - பொருளைப் பாதுகாத்து. விருந்து - விருந்தினர். வேளாண்மை - உபகாரம்.

12. ஈரம் அளைஇ - அன்பு கலந்து. படிறு - வஞ்சனை. செம்பொருள் - அறம்.

13. அல்லவை தேய - பாவங்கள் குறைய. அறம் - புண்ணியம்.

14. செய்யாமல் செய்த உதவி - பிறர் செய்யாதபோது ஒருவன் முதலில் செய்யும் உதவி. வையகம் - இம் மண்ணுலகம். வானகம் - வானுலகம். இவ்விரண்டு உலகத்தையும் சேரக் கொடுத்தாலும் அவ்வுதவிக்கு ஈடு ஆகாது என்பது கருத்து.

15. நடு ஓரீஇ - நடுவுநிலையின் நின்று நீங்கி. அல்ல - நடு அல்லாதவை. கெடுவல் - கெடுவேன் : தன்மை ஒருமை வினைமுற்று. ஓரீஇ : சொல்லிசை அளபெடை.

16. பொருளா - சிறந்த பொருளாக. ஆக்கம் - செல்வம். ஊஉங்கு : இன்னிசை அளபெடை.

17. பணிதல் - அடங்கியிருத்தல். செல்வம் தகைத்து - வேறு ஒரு செல்வம் போன்ற சிறப்பு உடையதாகும்.

18. ஒறுத்தாரை - துன்பம் செய்தவரை எதிர்த்துத் தண்டித்தவரை. ஒன்றாக - ஒரு பொருளாக. வையாரே × வைப்பர் : முரண் தொடை.

19. இழுக்காறு - தீய வழி. ஏதம் - துன்பம். படுபாக்கு - உண்டாதல் : தொழிற்பெயர்.

20. அஃகாமை - குறையாமல் இருத்தல். இது காரணத்தை உணர்த்தியது ; இஃது தொழிற்பெயர். வெஃகாமை - விரும்பாமல் இருத்தல்.

21. ஒப்புரவு - உலக நடை அறிந்து பொருள் உதவி செய்தல். கேடு - வறுமை. விற்றுக் கோள்தக்கது - ஒருவன் தன்னை விற்றாயினும் கொள்ளத்தக்கது.

22. குறி எதிர்ப்பை - அளவு குறித்து வாங்கி வாங்கியவாறே கொடுப்பது. நீரது உடைத்து - தன்மையை உடையதாகும். நீரது - இதில் 'அது' பகுதிப் பொருள்விகுதி.

23. இலன் - பொருள் இல்லாதவன். எவ்வம் - தாழ்வான சொல். குலன் உடையான் - உயர்குடியிற் பிறந்தவன்.

24. அற்றார் - வறியவர். அழி பசி-மிக்க பசி. தீர்த்தல்-நீக்குக. வைப்பு உழி - வைக்கும் இடம். பொருள் பெற்றான் ஒருவன் என மாற்றிப் பொருள் கொள்ளுக.

25. ஒன்றா உயர்ந்த - தனக்கு இணை இன்றி ஒன்றாக ஓங்கிய. பொன்றாது - அழியாது.

26. இசை - புகழ். எச்சம் - தான் இறந்தபின்னும் எஞ்சியிருக்கும் பொருள். வசை - பழி; குற்றம். என்ப-என்று கூறுவர். பெருஅவிடின்: உயிர் அளபெடை.

துறவறவியல்

27. ஊன் - தன் உடம்பு. பெருக்கல்: தொழிற்பெயர். ஆளும் - ஆள்வான்; இது செய்யும் என்னும் வாய்பாட்டு வினை முற்று, ஆண்பாலுக்கு வந்தது.

28. வேண்டிய - வேண்டியவற்றை. வேண்டியாங்கு - விரும்பின படி. ஈண்டு - இப்பிறவியில்.

29. மழித்தல் - தலைமயிரை நீக்குதல். நீட்டல் - சடையாக வளர்த்தல். உலகம் பழித்தது - உலகத்தார், தவத்திற்கு ஆகாது என்று குற்றங் கூறிய செயல்; அது அவா.

30. வாய்மை - மெய்ம்மை. தீமை இலாத-பிற உயிர்க்குத் தீங்கு பயவாத சொல்.

31. சினம் காக்க-தன் மனத்துச் சினம் வராமல் காக்க. கொல்லும்- கெடுக்கும். காவாக்கால்: கால்விகுதி பெற்ற வினையெச்சம்.

32. நோய் - துன்பம். நோய் இன்மை - துன்பம் இன்றி இருத்தல். வேண்டுபவர் - விரும்புவோர்; இது வினையாலணையும் பெயர். செய்தார் என்பதும் அது. நோய் என்னும் சொல் பலமுறை பயின்று வருதலால் இச் செய்யுள் 'சொற்பொருட் பின் வருநிலை' யணி.

33. நெருநல் - நேற்று. உடைத்து - உடையது: குறிப்பு வினை முற்று.

34. காமம் - விழைவு; வெகுளி - வெறுப்பு. நோய் - வினைப் பயன்கள்.

35. நன்று ஆம்கால் - நல்வினை விளையும் காலத்து. நல்லவாக் காண்பவர்-இவை நல்லன என்று இயைந்து அனுபவிப்பவர். அன்று ஆம்கால் - தீவினை விளையும் காலத்து. அல்லல் - துன்பம். எவன் - என்ன காரணம்.

பொருட்பால்—அரசியல்

36. காட்சிக்கு எளியன் - நீதிமுறை பெற விரும்புவோர்க்கும், தம் குறையைக் கூற விரும்புவோர்க்கும் காண்டற்கு எளியனாய். மன்னன் நிலம் - அரசன் ஆளும் நாட்டை. மீக்கூறும் - (உலகம்) மேன்மையாக உயர்த்துக் கூறும்.

37. எண் - கணக்கு. எழுத்து - இலக்கணம். என்ப - என்று சொல்லப்படுபவை. ஈற்றடியில் உள்ள என்ப - என்று சொல்வார்: பலர் பால்வினை முற்று; வினையாலணையும் பெயர்.

38. உவப்ப தலைக்கூடி - பிறர் மகிழுமாறு கூடியிருந்து. உள்ள - நினைக்கும்படி.

39. தகைமை - தன்மை; தன்னை அறிவுடையவனாக மதிக்கும் மதிப்பு தலைப்பெய்து - கூடியிருந்து. சொல்லாட - உரையாடும் பொழுது. சோர்வுபடும் - கெட்டுவிடும்.

40. விலங்கை நோக்க மக்கள் உயர்ந்தவர் ஆவர், கல்லாதவரை நோக்கக் கற்றவர் உயர்ந்தவர் ஆவர் என்பது கருத்து.

41. நுணங்கிய கேள்வியர் அல்லார் - நுட்பமான கேள்வி அறிவைப் பெறாதவர். வணங்கிய வாயினர் - வணக்கமான மொழி பேசுவோர்.

42. எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் - யாதொரு பொருளை யாவர் யாவர் சொல்லக் கேட்பினும். அப்பொருள் மெய்ப்பொருள் - அப்பொருளின் மெய்யாய பயனை.

43. உலகம் எவ்வது உறைவது-உலகம் எவ்வாற்றான் ஒழுகுகின்றதோ? உலகத்தோடு அவ்வது உறைவது - உலகத்தோடு பொருந்தி அவ்வழியில் நடப்பது.

44. தம்மின் பெரியார் - அறிவு முதலியவற்றால் தம்மினும் பெரியவர். தமரா ஒழுகுதல் - தமக்குச் சிறந்தவராகத் தாம் அவர் அவ்வழியில் நடத்தல்.

45. இடிப்பார் - இடித்துக் கூறும் பெரியோர். ஏமரா - காவல் இல்லாத.

46. ஆக்கம் கருதி - மேல் வரக்கூடிய ஊதியத்தை நினைத்து. முதல் இழக்கும் - முதற்பொருளை இழக்கின்ற. ஊக்கார் - மேற் கொள்ளார்.

47. நன்று ஆற்றல் - நல்ல உபாயங்களைச் செய்தல். பண்பு - தன்மை. ஆற்றாக் கடை - செய்யாவிடின்.

48. கொம்பர் - கிளை. கொம்பு - கொம்பர் எனப் போலியாக வந்தது. அஃது இறந்து - அவ் வெல்லையைக் கடந்து. ஊக்கின் -மேலும் சென்றால். இச் செய்யுள் பிறிது மொழிதல் அணி.

49. ஆகு ஆறு - பொருள் வரும் வழி. போகு ஆறு - செலவாகும் வழி. இட்டிது-சிறியது. அகலாக்கடை - பெருகாதெனின்.

50. அருவினை - அருமையான செயல். உளவோ - இருக்கின்றனவோ (இல்லை). ஓ : எதிர்மறை.

51. கூம்பும் பருவம் - செயலின்றி அடங்கி இருக்கும் காலம். சீர்த்தவிடம் - செயல் மேற்கொண்ட காலத்தில்.

52. எஞ்சாமை - குறைவு இன்றி. அஞ்சாமை - திண்மை.

53. தேற்றம் - வினையைச் செய்யும்போது கலங்காமை.

54. பற்று அற்ற கண்ணும் - செல்வம் தொலைந்து வறியவன் ஆனபோதும். பழைமை பாராட்டுதல் - செல்வம் இருந்த காலத்துத் தமக்குச் செய்த உதவியைப் பாராட்டுதல்.

55. அச்சம் உடையவர்க்கு, காடு மலை முதலிய அரண்கள் பயன் படமாட்டா. அங்ஙனமே மறதி உடையவர்க்குச் செல்வம் இருப்பினும் பயனில்லை என்பதாம்.

56. கொடியவரைக் கொன்று வேந்தன் நல்லோரைக் காத்தல் களையை வெட்டி எடுத்துப் பசிய பயிரைக் காத்ததுபோன்ற தாகும்.

57. அருஞ்செவ்வி - காண்டற்குக் காலம் அரியவனாகி இன்னா முகத்தான் - கண்டபோது கடுமையான முகம் உடையவன். தனக்கும் பிறர்க்கும் பயன்படாமையின் அவன் செல்வம் பேய் பெற்ற செல்வம் போன்றது என்றார்.

58. உலகியல் - இந்த உலகம் ஒப்புரவு செய்து நடத்தல். கண் ணோட்டத்து உள்ளது - கண்ணோட்டத்தின்கண் உள்ள தாகும். உதவி செய்யார் வாழ்ந்தும் பயனில்லை ஆதலின் அவர் இருத்தல் இந் நிலத்திற்குப் பெரிய சுமை என்றார்.

59. உரம் - திண்ணிய அறிவு. உள்ள வெறுக்கை - ஊக்கமிகுதி. மக்களாதலே வேறு - மக்கள் உடம்பே இவர்க்கும் மரத்துக் கும் உள்ள வேறுபாடு ஆகும்.

60. தாளாண்மை - முயற்சி. தகைமை - பண்பு. வேளாண்மை - உதவி செய்தல். செருக்கு - மேன்மை.

61. தெய்வம் - ஊழ்வினை. மெய் - உடம்பு.

### அங்கவியல்

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்ற ஆறும் அரசர்க் குரிய அங்கங்கள். அவற்றின் இயல்பு கூறுதலால் இஃது அங்கவியல் எனப்பட்டது.

62. அறிகொன்று - அறிந்தவர் கூறிய சொல்லை அழித்து. அறி யான் எனினும் - அரசன் தானும் அறியாதவனாய் இருந் தாலும். உழையிருந்தான் - அமைச்சன்.

64. வினைத்திட்பம் - வினைசெய்தற்கண் உறுதி. மனத்திட்பம் - மன உறுதி. பிற - படை, அரண், நட்பு முதலியவற்றின் திண்மை.

65. அடுத்தது - தன் முன்வைத்த பொருள். நெஞ்சம் கடுத்தது- ஒருவன் நெஞ்சத்தில் மிகுந்ததனை.

66. விழுப்புண் - போரில் முகத்திலும் மார்பினும் பட்டபுண். வழுக்கு - பயனின்றிக் கழிந்த நாள்.

67. நவில் தொறும் - கற்குந்தோறும். நயம்போலும் - இன்பம் செய்தலை ஒத்தது.

68. ஊதியம்-பேறு, இலாபம். பேதையார் - அறிவு இல்லாதவர். ஓரீஇவிடல் - நீக்கிவிடுதல். ஓரீஇ : சொல்லிசை அளபெடை.

69. நோதக்க - தாம் வெறுக்கத் தக்கனவற்றை. பேதைமை - அறியாமை; பெருங்கிழமை - மிக்க உரிமை.

70. சிறுமை - துன்பம். சீர் அழிக்கும் - புகழைக் கெடுக்கும்.

## ஒழிபியல்

ஒழிபியல் - அரசியல் அங்கவியல்களில் அடங்காது ஒழிந்தவற்றின் இயல்பு கூறுதல்.

71. இகழ்வார் - தன்னை இகழ்கின்றவர். நிலை - நிற்றல். புத்தேள் - தேவர். உய்யாது - செலுத்தாது.

72. நோன்மை - தவம். கொல்லா நலத்தது - கொல்லாமை என்னும் அறத்தின்கண்ணது. சான்றாண்மை பிறர் குற்றம் சொல்லாத குணத்தின் கண்ணது.

73. இன்னா - துன்பம். சால்பு என்ன பயத்தது - சால்பு என்ன பயனையுடையது.

74. பீடு நடை - பெருமிதத்தை உடைய நடை. பிணி - கண்டார்க்கு நோயாம்.

75. குடி செய்து வாழ்வான் - தன் குடியை உயரச் செய்து வாழ்பவன்.

76. இலம் என்று - யாம் வறுமை உடையோம் என்று நினைத்து. அசைஇ இருப்பார் - சோம்பி இருப்பவர். அசைஇ: சொல்லிசை அளபெடை. நகும்=சிரிப்பாள்: இது செய்யும் என்னும் வாய்ப்பாட்டு வினைமுற்று, பெண்பாலுக்கு வந்தது.

77. நற்பொருள் - மெய்ந்நூற் பொருள். சோர்வுபடும் - பயன்படாது ஒழியும். நல்கூர்ந்தார் - வறுமையடைந்தவர்.

78. இரவு - இரந்து நிற்றல். கரவு - இரப்பார்க்கு இல்லை யென்று கூறி மறைத்தல். உள்ளதூஉம் - உருகும் அளவும். உள்ளதூஉம்: இன்னிசை அளபெடை. இரவு, கரவு: தொழிற்பெயர்கள்.

79. கயவர் - கீழ்மக்கள். மேவன - விரும்பிய செயல்கள்.

80. மறை - மறைத்துக் கூறுஞ்சொல் (இரகசியம்). அறைபறை - அடிக்கின்ற பறை; ஒரு தோல் கருவி.

க்கள் :

1. யாருக்கு எப்பொழுதும் துன்பம் இல்லை?
2. அறம் உயிர்க்கு அளிக்கும் நன்மைகள் எவை?
3. இல்வாழ்க்கையே சிறந்தது என்று ஏன் கூறினர்?
4. ஒருவன் பெறும் பேறுகளுள் சிறந்தது எது?
5. சிறைக்காவல், நிறைக்காவல் இவற்றுள் எது ஏன்?
6. மாநிலத்து மன்னுயிர்க்கு எது நாகும்
7. அன்பு மறத்துக்கும் எவ்வாறு துணையாகும்?
8. இல்லில் இருந்து வாழ்வது எதற்காக?

இன்சொல் என்பது யாது?

10. மண்ணுலகமும் விண்ணுலகமும் எதற்கு ஈடு ஆகாது?
11. ஒருவன் அடக்கத்தை ஏன் மேற்கொள்ள வேண்டும்?
12. பொறுத்தார்க்கும், ஒறுத்தார்க்கும் வரும் நன்மை தீமைகள் எவை?
13. ஒருவன் தன் செல்வம் குறையாமல் இருக்க என்ன செய்ய வேண்டும்?
14. ஒருவன் தன்னை விற்றேனும் கொள்ளத்தக்கது எது?
15. எது ஈகை ஆகும்? எது குறி எதிர்ப்பை ஆகும்?
16. குலன் உடையான்கண் உள்ளன யாவை?
17. பொருள் பெற்றவன் பாதுகாப்பாக வைக்கும் இடம் எது?
18. இவ்வுலகத்தார்க்கு எது பழி ஆகும்?
19 இவ்வுலகத்தில் ஏன் தவம் செய்ய வேண்டும்?
20 வாய்மை என்று எதனைக் கூறவேண்டும்?
21. ஒருவன் ஏன் தன் மனத்திற் சினம் வராமல் பாதுகாக்க வேண்டும்?
22. இவ்வுலகம் என்ன பெருமை உடையது?
23 எந்த மன்னனுடைய நிலத்தை உலகோர் புகழ்வர்?
24. அறிஞர் எவற்றைக் கண் என்று கூறுவர்?
25 புலவர் தொழில் யாது?
26. கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் கூறப்பட்ட உவமை யாது?
27. யாவர் வணக்கமான மொழியினைக் கூறமாட்டார்?
28 எவை அறிவுடைமை யாகும்?
29. ஒருவனுக்குச் சிறந்த வன்மை என்பது எது?
30. கெடுக்கும் பகைவர் இன்றியே கெடும் மன்னன் யார்?
31. அறிவுடையவர் எதனைச் செய்யமாட்டார்?
32. எது உயிர்க்கு முடிவைத் தரும் செயலாகும்?
33. யாருக்குப் பொருள் வரும் வழி சிறிதாய் இருப்பினும் குற்றமில்லை?
34. எப்படிச் செய்தால் செய்தற்கரிய செயல் ஒன்றுமில்லை யாகும்?
35. மன்னன் யாரிடத்தில் மனத்தெளிவு கொள்ள வேண்டும்?
36. சுற்றத்தாரிடத்து எவை இருக்கும்?
37. அச்சம் உடையார்க்கும் மறதி உடையார்க்கும் எவை பயன் படா?
38. வேந்தன் கொடியவரைக் கொல்லுதல் எதற்கு ஒப்பாகும்?
39. யாருடைய செல்வம் பேய் பெற்ற செல்வம் போன்றதாகும்?
40. உலகில் எது நிலைத்து இருக்கும்?
41. எதனைப் பெறாதவர் மரத்துக்கு ஒப்பாவர்?
42. வேளாண்மை என்னும் பெருமிதம் எவ்விடத்து நிலைத்திருக்கும்?

43. அமைச்சனுக்கு எது கடன் ஆகும்?
44. ஈன்றாள் பசி காணினும் எதனைச் செய்தல் கூடாது?
45. வினைத்திட்பம் என்று எதனைக் கூறவேண்டும்?
46. முகம் எதனை எடுத்துக் காட்டும்? அதற்கு உவமை எது?
47. விழுப்புண் என்பது என்ன? அப்புண்படட நாளை வீரன் எதனுள் சேர்ப்பான்?
48. பண்புடையாளர் தொடர்பு எதுபோன்றது?
49. ஒருவனுக்கு எது ஊதியம் தரும் செயலாகும்?
50. நண்பர் துன்பம் தரும் செயலை நமக்கு ஏன் செய்கின்றனர்?
51. சூது எத்தீமைகளை நமக்கு நல்கும்?
52. நம்மை இகழ்வார்பின் சென்று நிற்றலால் வரும் தீங்குகள் எவை?
53. நோன்பும், சால்பும் எந் நலத்தின்கண் உள்ளன?
54. உயர்ந்தோர் யாரைச் சுற்றமாகக் கொள்வார்கள்?
55. நிலம் என்னும் நல்லாள் யாரைக் கண்டு நகைப்பாள்?
56. கயவர் தேவர்க்கு ஒப்பாவர் - எவ்வாறு?
57. கயவர் எதற்குச் சமம் ஆவார்கள் - எதனால்?

## 2. நாலடியார்

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று; நான்கு அடிகளையுடைய வெண்பாக்களால் இயற்றப்பட்டது. இந் நூலில் நானூறு செய்யுட்கள் உள்ளன. அதனால் நாலடி நானூறு என்ற பெயரும் இதற்கு உண்டு. இந் நூலும் திருக்குறளைப் போன்று அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பகுதிகளையுடையது. இந் நானூறு செய்யுட்களும் சமண முனிவர்களால் தனித் தனியே செய்யப் பட்டவை. பதுமனார் என்னும் புலவர் அச் செய்யுட்களைத் தொகுத்து நூலாக்கி நாலடியார் என்னும் பெயர் வைத்தார். காலம் கி. பி. 7 ஆம் நூற்றாண்டு.

அருஞ்சொற் பொருள்:

1. நட்டக்கால் - நட்புச் செய்தபொழுது. தேற்றா ஒழுக்கம் - தெளிய இயலாத தீய ஒழுக்கம். ஆற்றும் துணையும் - பொறுக்கும் அளவும். தூற்றாதே தூரவிடல் - பழித்துக் கூறாது விலக்கிவிடுக.
2. தொன்மை+சிறப்பு - தொல் சிறப்பு. ஆள்வினை - முயற்சி.
3. கடமா - யானை. தொலைச்சிய - வலிமையைக் கெடுத்த. மானம் அழுங்க - மானங்கெட.
4. அழல் - வெயிலின் வெப்பம். மண்டுதல் - மிகுதல். பழுமரம்- பழுத்த மரம் - துய்ப்ப - அனுபவிக்க. நல்ல+ஆண் மகன் - நல்லாண் மகன்: தொகுத்தல் விகாரம்.
5. துய்த்துக் கழியான் - தான் அநுபவித்துச் செலவழிக்காமல்: ஈகலான் - ஈயாமல். கழியான், ஈகலான் என்ற வினைமுற்றுக் கள் வினையெச்சப் பொருளைத் தந்தன.

1. நண்பரிடத்துத் தீய ஒழுக்கம் காணின் நாம் யாது செய்தல் வேண்டும்?
2. ஒருவனுக்கு எவற்றால் குல உயர்வு உண்டாகும்?
3. வேங்கை எதனை உண்ணாது?
4. விழுமியோர் இயல்பு என்ன?
5. நல்ல ஆண் மகனுடைய கடமை என்ன?
6. பொருளும், அருளும் எவனைக் கண்டு நகும்?

## 3. நீதிநெறி விளக்கம்

இந் நூல் திருக்குறளின் கருத்துக்களை எடுத்து விளக்கிச் சுருக்கமாகக் கூறும் நூல். இது திருமலை நாயக்கருடைய வேண்டுகோளுக்கு இணங்கிக் குமரகுருபர அடிகளால் இயற்றப்பட்டது; நூறு செய்யுட்களை யுடையது. காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டு.

**அருஞ்சொற் பொருள்:**

1. புறங்கடை - வீட்டிற்கு வெளியில். இசை - புகழ். உறும் கவல் - மிகுந்த கவலை. ஊங்கு - மேலானது. சிறுமை+ உயிர் - சிற்றுயிர்.
2. பெருஞ்சுட்டு - நன்மதிப்பு. வேண்டுவான் - விரும்புவோன். நோற்பது - உறுதியாகக் கொள்ள வேண்டுவது. சீர் - பெருமை. சிறுமை - குற்றங்கள். தாழ்ச்சி சொலல் - வணக்கம் கூறுதல்.
3. கவளம் - யானை உண்ணும் உணவு உருண்டை. தப்பின் - தவறிச் சிந்தினால். தூங்கும் களிறு - அசையும் யானை. கிளை - சுற்றமாகிய கூட்டம். அயின்று - உண்டு. யானை கவளத்திற் சிறிது கீழ் விழுந்தால் அதனை யுண்டு பல கோடி யெறும்புகள் பிழைப்பதுபோலச் செல்வர்கள் தமது செலவிற் சிறிது தந்தால் பல ஏழை மக்கள் பிழைப்பர் என்ற நீதி தோன்றிற்று: இது பிறிது மொழிதலணி.
4. மெய் - உடம்பு. துஞ்சார் - தூங்கமாட்டார். இமை - இடையூறுகள். செவ்வி - காலம்.
5. குலமகள் - நல்ல குடியிற் பிறந்த பெண். கொழுநன் - கணவன். அறவோர் - அற நெறியிற் செல்வோர். அடிகள்: ஆசிரியர். இலமுகம் - இலை வடிவம். பசுமை+பூண் - பைம்பூண். பூண் - ஆபரணம். இறை - அரசன்.

1. மக்களுக்குச் சிறந்த துணை எது? ஏன்?
2. பிறரால் நன்கு மதிக்கப்படுதலை விரும்புவோன் யாது செய்தல் வேண்டும்?
3. யானை சிந்திய சிறிது உணவால் எவை வாழ்கின்றன? இதனால் நாம் தெரிந்து கொள்ளும் கருத்து என்ன?
4. கருமமே கண்ணாயிருப்பவர் எவற்றைச் செய்யமாட்டார்கள்?
5. யாருக்கு யார் தெய்வம் ஆவர்?

# ௩. தொடர்நிலைச் செய்யுள்

## 1. ஆசிய ஜோதி

ஆசியஜோதி ஆசியாக் கண்டத்தில் தோன்றிய ஒளி. இது ஒளி போலப் புகழ் பெற்று விளங்கிய புத்தரை யுணர்த்திற்று. இந் நூல் அவருடைய வரலாற்றைக் கூறுவது. ஆசிரியர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை; இவர் எளிமையும் இனிமையும் வாய்ந்த கவிகளை இயற்றுவதில் வல்லவர்; பல செய்யுள் நூல்களும், உரைநடை நூல்களும் இயற்றியுள்ளார். ஊர் - நாஞ்சில் நாட்டில் உள்ள தேரூர். அண்மையில் கி. பி. 1950 வரை இருந்தவர்.

பிம்பிசாரன் என்னும் மன்னன் தான் செய்ய இருந்த யாகத்தில் பல ஆடுகளைப் பலியிட விரும்பினான். அதனை அறிந்த புத்தர் அவனுக்கு உயிர்க்கொலை புரிதலின் தீமையை விளக்கி அறிவுரை புகன்று அவனை நல்வழிப்படுத்தினர். அவ் வரலாற்றைக் கூறும் பகுதி இது.

**அருஞ்சொற் பொருள் :**

1. வாங்கிவிடல் - நீக்கிவிடுதல். வீழும் - இறக்கும்.
2. இனிமை + உயிர் - இன்னுயிர். அன்னது - அந்த உயிர்.
3. நேரிய - நேர்மையான. மாரி - மழை.
4. அவி உணவு - தேவர்க்காக யாக நெருப்பில் இடும் உணவு. ஈட்டும் கருணை - நிறைந்த கருணை.
6. வாடை - வாடைக்காற்று, குளிர் காற்று. கொடுகுவது - நடுங்குவது.
7. உணர்ந்திலீர் - அறியாமல் இருக்கின்றீர்.
8. பழி செய்வது - கொலைத்தொழில் செய்வது. சண்டாளர் - கீழ் மக்கள்.

   கருமங்கள் - பாவ வினைகள்.

**வினாக்கள் :**

1. யாவர்க்கும் எளிதான செயல் யாது?
2. வேந்தனாலும் செய்யமுடியாத செயல் எது?
3. கருணை இறையவர் எதனை ஏற்றுக்கொள்ள மாட்டார்? ஏன்?
4. ஆடு நமக்குச் செய்யும் நன்மைகள் யாவை?
5. கொலைத் தொழில் கூடாது என்பதற்குப் புத்தர் கூறிய காரணங்கள் எவை?

## 2. நளவெண்பா

நளன் + வெண்பா - நளவெண்பா. நளன் என்னும் நிடதநாட்டு மன்னனுடைய வரலாற்றைக் கூறும் நூல். இது 424 செய்யுட்களையும் சுயம்வர காண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்ற

மூன்று பிரிவுகளையும் உடையது. இந் நூலின் ஆசிரியர் புகழேந்திப் புலவர். இவர் தொண்டை நாட்டுப் பொன்விளைந்த களத்தூரில் பிறந்தவர். வெண்பாப் பாடுவதில் வல்லவர். "வெண்பாவிற் புகழேந்தி"—என்னும் சிறப்புரை பெற்றவர். காலம் கி. பி. 12 ஆம் நூற்றாண்டு. சந்திரன் சுவர்க்கி என்னும் சிற்றரசன் இவரை ஆதரித்தவன் ஆதலால் அவனைப் புகழ்ந்து இந் நூலிற் சில இடங்களில் கூறியுள்ளார்.

அருஞ்சொற் பொருள் :

1. நீள்+நிறம் - நீணிறம்; அன்னத்தின் மிகுந்த வெள்ளை நிறம். தாள்+நிறம் - தாணிறம்; அப்பறவையின் கால் சிவப்பு நிறமுடையது. மாண்+நிறத்தான் - சிறந்த மார்புடையவன். அப்பு - நீர். முளரி - தாமரை. அன்னப்புள் - அன்னப் பறவை.
2. அஞ்சல் - அஞ்சாதே. மடம் - இளமை. வஞ்சி - வஞ்சிக் கொடி. விஞ்சியது - மேன்மையுற்றது. காண் : முன்னிலை அசை. தார் - மாலை.
3. திரு - திருமகள்; இலக்குமிதேவி. தையல் - பெண். அடும் - கொல்லுகின்ற. மாற்றம் - உரை. தடுமாற்றம் - மனக் கலக்கம்.
4. திசை முகந்த - திசை தோறும் பரவிய. வெண்மை+கவிகை- வெண்கவிகை : பண்புத் தொகை கவிகை - குடை. இசை முகந்த - புகழ் பெற்ற. அமை - மூங்கில். அந்தி - அழகு உடையவள். அணங்கு - தெய்வப் பெண்; தமயந்தியை உணர்த்தியது : உவமை ஆகுபெயர்.
5. நான்கு+குணம் - நாற்குணம். அவை : நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன. நாற்படை : யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால் வகைப் படை.
   ஐந்து+புலன் : ஐம்புலன் - இங்கு ஐம்பொறிகளை உணர்த்தியது; மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. மதி+குடை - மதிக்குடை: உவமைத் தொகை. வதனமதி - முகமாகிய சந்திரன் ; இது உருவகம்.
6. இவ்வளவு - இவ்வளவு நேரத்தில் மூன்று+மதம்-மும்மதம் : பண்புத் தொகை. கொல்யானை : வினைத்தொகை.
7. வடிவில் திகழ்கின்ற - அழகோடு விளங்குகின்ற நன்னுதல்-நல்ல நெற்றியை உடைய தமயந்தி. நன்மை+நுதல் - நன்னுதல் : பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. தன் ஆடல் - தன்னுடைய விளையாட்டு. என்+நாடல் - என்னாடல் - நாடிவந்தது என்ன ?
8. செம்மை+மனத்தான் - செம்மனத்தான். தடம்+தோள் : தடந்தோள் : உரிச் சொற்றொடர் மேல்+நிலம் - மேனிலம், வானுலகம். நான்கு+நிலம் - நானிலம். இம் மண்ணுலகம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு பிரிவுகளை உடையது.
9. மறம் - வீரம். திண்மை+தோள் - திண்டோள். திறம் - வலிமை.

10. வாவி - குளம். ஆவி - உயிர். கா - சோலை. உரைத்தி - உரைப்பாய்: பார்வேந்தன் - இந் நிலவுலகத்தை ஆளும் வீமன் என்னும் மன்னன். பாவை - பாவைபோன்றவள்; தமயந்தி : உவமை யாகுபெயர்.

11. ஆர்ப்ப - ஒலிக்க. புரிவளை - முறுக்குடைய சங்கு. ஏங்க - ஒலிக்க. நல்லாள் மனை - தமயந்தியின் கன்னிமாடம். வளை - வளையல் : முதல் அடி முரண்தொடை அமைந்தது.

12. சோர்கின்றது - வழிகின்றது. பிறை நுதல்: உவமைத் தொகை. பாரா - பார்த்து: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

13. மால்-பெரிய; தாமம் - மாலை. சந்திரன் சுவர்க்கி: புகழேந்திப் புலவரை ஆதரித்த சிற்றரசன்.

14. அரி - கண்களில் இருக்கும் வரிகள். பூமகள் - பூமிதேவி. பொன் - இலக்குமிதேவி. பொரு - போன்ற.

15. வையம் - இம் மண்ணுலகம் பொய்கை - குளம். நீள்கழி - நீண்ட உப்பங்கழி. வெற்பு - மேற்கு மலை.

16. வில்லி - மன்மதன். கணை-அம்பு. வேட்டிடும் - விரும்புகின்ற. குணவாயிற் குன்று - கிழக்கு மலை.

17. பொன்னின் - இலக்குமி போன்ற. மடப் பாவை - தமயந்தி. சிறை - சிறகு. புக்காள் - புகுந்தாள். புகு : பகுதி. ஆள் : விகுதி, புகு என்ற பகுதி ஒற்று இரட்டி இறந்தகாலம் காட்டியது.

18. சேடி - தோழி. ஈரிருவர் - நால்வர். மாசு+இலா - மாசிலா குற்றம் இல்லாத. காணுநின்று - கண்டு. உள்ளம் ஊசல் ஆடுற்றாள் - மனம் தடுமாறினள்.

19. கண்+இமைத்தலால் - கண்ணிமைத்தலால். காசினி - நிலம். தோய்தல் - படுதல். வண்ணம் - நிறம். தாமரை விரும்பும் நன்னுதல் - தாமரையில் விரும்பி வாழும் திருமகள்.

20. விண் அரசர் - தேவர். வெள்கி - வெட்கம் கொண்டு. மனம் சுளிக்க - மனம் வருந்த. கண் அகல் - இடம் அகன்ற. ஞாலம் - இவ்வுலகத்தில் உள்ள மக்கள்: இடவாகு பெயர். வன்மாலை - மிகுந்த மயக்கம். வயம் - வெற்றி. பொன்மாலை- அழகிய மணமாலை பொன் : திருமகள் போன்ற தமயந்தி ; உவமை ஆகுபெயர்.

## 3. திருவிளையாடற் புராணம்

இந்நூல் மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கலிங்கப் பெருமானுடைய அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் விளக்கிக் கூறுவது. இந்நூல் மதுரைக் காண்டம், கூடற்காண்டம், திரு ஆலவாய்க் காண்டம் என்ற மூன்று காண்டங்களை யுடையது. செய்யுட்கள் சொற் சுவையும் பொருட் சுவையும் அமையப்பெற்றவை. 3310 செய்யுட்களைக் கொண்டது இந்நூலை இயற்றிய ஆசிரியர் பரஞ்சோதி முனிவர். இவர் சோழ நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் உள்ள

ரியம் என்னும் திருமறைக் காட்டில் பிறந்தவர். சைவ வேளாள மரபினர். தந்தையார் பெயர் மீனாட்சிசுந்தர தேசிகர். காலம் 300 ஆண்டுகளுக்கு முற்பட்டது. பெரும்பற்றப் புலியூர் நம்பி என்பவர் இயற்றிய திருவிளையாடற் புராணமும் ஒன்று உண்டு.

அருஞ்சொற் பொருள்:

1. கழிந்த பெருங்கேள்வியினான்-மிகுந்த பெருமையான கேள்வி அறிவு உடையவன்; பாண்டிய மன்னவன். கேண்மை-நட்பு. தென்சொல் - தமிழ்ச்செய்யுள். காண்டும் - காண்போம். தொடுத்த பனுவல்-இயற்றிய செய்யுள் நூல். மூரி-முதிர்ந்த. தீந்தேன் - இனிய தேன்.

2. வழுக்காத - குற்றம் இல்லாத. அருந்த வல்லோன் - கேட்டறியவல்ல பாண்டியன். அழுக்காறு - பொறாமை. சிரம் துளக்கான் - தலை அசைக்காதவனாய். அகம் - மனம். எழு - கணையமரம். கோயில் - சிவன் கோயில்.

3. நன்மை+நிதி - நன்னிதி - நல்ல செல்வம் போன்றவனே. திருவாலவாய் - மதுரை. நகுதார் வேம்பன் - விளங்கும் வேப்பமாலை தரித்த பாண்டியன். பொன்+நிதி-பொன்னிதி; பொருட்செல்வம்.

4. பரிவாய் - அன்புடன். விரிவாய - பரந்த. தட+கடல் - தடங்கடல்: உரிச்சொல் தொடர். கான விலங்கு - காட்டு விலங்கு. பொரி - மரத்தின்மேல் இருக்கும் சுரசுரப்பு. பரு+அரை - பராரை-பருத்த அடிப்பாகம். மரநிரை - மரவரிசை. குடுமி-உச்சி. பொருப்பு - மலை. கொடுமை+சுரம் - கொடுஞ்சுரம் - கொடிய பாலை நிலம்.

5. இடம் - இடப்பாகம். இமையப் பாவை: பார்வதி தேவியார். முனிவு ஈர்ப்ப - சினம் பிடித்து இழுக்க. ஊறுபாடு என - புண்படுத்தியதுபோல.

6. அகத்து - மனத்தின்கண். உவகை - மகிழ்ச்சி. நங்கை - பெண். வானவர் தம்பிரான் - சிவபெருமான். அங்கண் - அவ்விடத்தில். மன்+ஓ: அசைகள்.

7. சைல வேந்தன் மங்கை - மலையரசனுடைய மகளாகிய உமை. கங்குல் - இரவு. வைகறை - விடியற்காலம்; பொழுது எழுவதற்கு முன் உள்ள நேரம். சேவிப்பார் - வழிபடுகின்றவர்.

வழுதி - பாண்டியன். அடி இற - அடிஅற்றுப்போக. வீழ் - வீழ்கின்ற. பழுமரம்போல் - பழுத்த மரத்தைப்போல. யாக்கை - உடம்பு. ஓல்லைப்பொழுது - சிறிது பொழுது. கைப்போது - கையாகிய மலர்: உருவகம். அண்ணல் - தலைவனே.

9. கொலையினை ஓர் - கொலைத்தொழிலை நினைக்கின்ற. அவுணர் புரம் - அசுரருடைய முப்புரம். குனித்த - வளைத்த. சிலை - வில். வெள்ளிமலை - கைலைமலை.

10. அலர்வந்தோன் - மலரிற் பிறந்த பிரமதேவன். கேள்வித்தலை வந்த புலவர் - கேள்வியின் முதன்மை பெற்ற சங்கப் புலவர்

மலைவந்த வல்லி - மலை அரசன் மகள் பார்வதிதேவி. இறை கொண்டு - தங்கி. உறைகின்றான் - இருக்கின்றான்.

11. அச்சத்து ஆழ்ந்து - அச்சத்தில் மூழ்கி; தெவ்வர் - பகைவர். முடித்தொகை - கூட்டமான பொன்முடிகள். கௌவை - ஒலி. திரைக்கரம் - அலையாகிய கை: உருவகம். கடிமலர் - மணம்வீசும் மலர்: உரிச்சொற்றொடர். தூஉய்: சொல்லிசை அளபெடை. மௌவல் - முல்லை. இளமை+முகை - இள முகை: பண்புத் தொகை. முகை - அரும்பு. மூரல் - பல். மணி - மணிபோன்ற இறைவன்.

12. கள்-தேன். கடுக்கை கொன்றை: முதலாகு பெயராய் மலரை உணர்த்திற்று. வெண்மை+ஏறு - வெள்ளேறு: பண்புத் தொகை. விடை - காளை. அருள்விகிர்தா - கருணைக்கடவுளே. புள்ஏறு - (பறவைகளிற் சிறந்த) கருடன். புனிதன் - திருமால். அயன் - பிரமதேவன். மதிநுதல் - பிறைத்திங்கள் போன்ற நெற்றி: உவமைத் தொகை. அங்கயற்கண்ணி - மீனாட்சி அம்மை.

13. இணை - இரண்டு. போதம் - ஞானம். நால்வர் - சநகர், சநந்தநர், சநாதநர், சநற்குமாரர் என்னும் நால்வர்.

14. கூடல் மன்னவன் - மதுரைக்குத் தலைவனாகிய சொக்கலிங்கப் பெருமான். ஆகாயவாணி - வான்மொழி. சோத்தம் - வழி பாட்டு மொழி; வணக்கம்.

15. பணை - வயல். நீபவனம் - கடம்ப மரம் நிறைந்த காடு. நீத்து - நீங்கி. காடன்: இடைக்காடன்.

16. மீனவன் - மீன் கொடி உடைய பாண்டியன். வானோர் புண்ணிய - தேவர் செய்த புண்ணியத்தின் பயனாய் இருப் பவனே.

17. கோமளவல்லி - இளமையான கொடி போன்றவள்; இது பார்வதியை யுணர்த்தியது. ஒல்லை - விரைவு. புக்கான் - புகுந்தான். போக்கி: பிறவினை.

18. சங்கவாணர் - சங்கப் புலவர். பொன்மகள் - திருமகள். காணிகொண்ட - இருப்பிடமாகக் கொண்ட. புரிசை - மதில். கோயில் - அரண்மனை.

19. சிங்கமான்-சிங்கமாகிய விலங்கு: இருபெயரொட்டுப் பண்புத் தொகை. கொங்கு - மகரந்தம். தாமம் - மாலை. தூசு - ஆடை. மணிஆரம் - மணிமாலை. முழவம் - மத்தளம். ஆக்கம் - வாழ்த்து.

20. பொறுக்க+என - பொறுக்கென: தொகுத்தல் விகாரம். மன்ன: அண்மை விளி; சொல்லாம் அமுது, கோபத்தீ: உருவகங்கள்.

21. பன்ன+அரும்-பன்னரும்: தொகுத்தல் விகாரம்; பன்னரும்-சொல்லுவதற்கருமையான. குன்று-குறையாத. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். குலேசன்: பாண்டியன் பெயர்.

22. எரி-நெருப்பு. மருத்து-காற்று; அவனி-மண். முன்னும் - முதலான. எண்வகை மூர்த்தி - எட்டுப் பொருளான வடிவ

முள்ள இறைவன். மருத்துவன் - இந்திரன். இந்திரன் பழிதீர்த்த படலத்தில் இவ்வரலாறு காண்க. மருந்து+அன்- மருத்துவன்; மென்றொடர்க் குற்றியலுகரம் வன்றொட ராயிற்று. அரிமருத்தனன் என்பது பாண்டியன் பெயர். அரிக்குருளை - சிங்கத்தின் குட்டி.

வினாக்கள் :

1. பாண்டியன் அழுக்காற்றால் எவற்றைச் செய்யாதிருந்தான்?
2. இடைக்காடர் சிவபெருமானிடம் எவ்வாறு கூறி முறை யிட்டார்?
3. இடைக்காடன் முறையீட்டைக் கேட்டு இறைவன் என்ன செய்தார்?
4. இறைவன் ஆலயத்தில் இல்லை என்பது அறிந்த பாண்டியன் எவ்வாறு வருந்தினான்?
5. இறைவன் வாய்மொழியால் பாண்டியனுக்குக் கூறியன யாவை?
6. சங்கப் புலவர்கள் பிழை பொறுத்து மன்னனை எவ்வாறு வாழ்த்தினர்?

## 4. குசேலோபாக்கியானம்

குசேல+உபாக்கியானம் - குசேலருடைய வரலாற்றைக் கூறும் நூல் (குசேல+உப+ஆக்கியானம்). உபாக்கியானம் - கிளைக்கதை. குசேலர் - கிழிந்த ஆடை உடையவர். அவர் மனைவி பெயர் சுசீலை என்பது. இந்நூலை இயற்றிய ஆசிரியர் **வல்லூர் தேவராசப் பிள்ளை** என்பவர். இவர் தொண்டை நாட்டில் உள்ள வல்லூரில் பிறந்தவர்; கருணீகர் குலத்தினர்; தந்தை பெயர் வீராசாமிப் பிள்ளை என்பது. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுடைய மாணவர். காலம் 19 ஆம் நூற்றாண்டு.

அருஞ்சொற் பொருள் :

1. எண் அனை - அடியார்களால் நினைக்கப்படும் அன்னையாகிய திருமகள். திகிரி - சக்கரம். கள்+நனை - கண்ணனை. கள் - தேன், நனை - அரும்பு. தாமம் - மாலை.
2. விசைகொடு - வேகமாக. நீத்தம் - நீர் வெள்ளம். நீத்து - நீங்கி. மாதவன் - கண்ணபிரான்.
3. திலகம் - பொட்டு. புளகம் - மயிர்சிலிர்த்து நிற்றல். கூர்ந்த - மிகுந்த. வாய்மை - உண்மை.
4. மலர்அடி : உவமைத்தொகை. கழி மகிழ் - மிகுந்த மகிழ்ச்சி: உரிச்சொல் தொடர். வருடினான் - தடவினான்.
5. வதனம் - முகம். வரவு : தொழிற்பெயர்.
6. மறை அனைத்தும் - வேதம் நான்கும். பெறல் அரும்பேறு - பெறுதற்கரிய பேற்றை.

7. அறம்+மறம் அறத்தையும் பாவத்தையும். பாத்து-பிரித்து. வீயினும் - இறப்பு நேர்ந்தாலும். மேதையோர் - மேன்மையுடைய பெரியோர். இ+நானிலம்-இந் நானிலம். நானிலம்-பூமி.

8. நல்லார்க்கு+ஒன்று - நல்லார்க்கொன்று. நவிற்றிய - கூறிய. உறல் - அடைதல்.

9. புந்தி-புத்தி. இரும்தவர்-பெரிய தவத்தையுடைய நல்லோர். என் உள்ளான் ஆவன் - என்ன உடையவன் ஆவான்.

10. அரிது+அரிது - அரிதரிது. தூயோர் - நற்குணம் உடைய அறிஞர். அருமை+தவம் - அருந்தவம் : பண்புத் தொகை. எண்மையின் - எளிமையில்.

11. வித்து - விதை. சித்திக்கும் - கிடைக்கும். செப்ப+அரிது - செப்பரிது ; சொல்ல இயலாது. நினக்கு - உனக்கு. ஆயிற்று+ஏ-ஆயிற்றே: ஏகாரம் வினாப் பொருளில் வந்தது.

12. நீர்மை - தன்மை. மன்னுடைய சொல் - கணவனுடைய சொல். சோர்வு - தளர்ச்சி. மாண்பு - பெருமை. உஞற்றுதல் செய்தல். "மனைத்தக்க மாண்புடையளாகி" என்னும் திருக்குறள் கருத்து இதில் அமைந்துள்ளது.

13. பசுமை+குதலை - பைங்குதலை - இளமையான மழலைச்சொல். பேரவையோர் - பெரிய மன்றத்தில் இருக்கும் அறிஞர். அணிதரச்செய் செயல் - கல்வியில் மேம்படச் செய்தல். சிங்கல் அற - குறைவு நீங்க. "தந்தை மகற்காற்றும்" என்னும் திருக்குறட் கருத்து இதில் உள்ளது.

14. என் நோற்றான் - என்ன தவம் செய்தானோ? உவர் - உப்பு. உவர் - இவர். "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி" என்ற செய்யுட் கருத்து இதில் உள்ளது.

**வினாக்கள் :**

1. குசேலர் கண்ட கண்ணன் எச் சிறப்புக்களை உடையவன்?
2. கண்ணன் குசேலரை எவ்வாறு வரவேற்றான்?
3. உலகம் கூறிய வாய்மைகள் எவை? அவற்றைக் கண்ணன் எவ்வாறு காத்தான்?
4. கண்ணன் குசேலனைப் பார்த்துக் கூறிய முகமன் உரைகள் யாவை?
5. நண்பர் எவற்றை எடுத்துக் கூறுவார்கள்?
6. நல்லோர் எவற்றை நன்று என்று கூறுவர்?
7. நல்ல தவம் உடையவர் நட்பைப் பெறுவதால் வரும் நன்மைகள் யாவை?
8. தூயோர் நட்பைப் பற்றி என்ன கூறுவர்?
9. குசேலருடைய மனைவியைப்பற்றிக் கண்ணன் கேட்டவை யாவை?
10. குசேலருடைய மைந்தரைப்பற்றிக் கண்ணன் எவ்வாறு கேட்டான்?

## 5. பெரிய புராணம்

பெரியார் + புராணம்-பெரியபுராணம். செய்தற்கரிய செயல்களைச் செய்த அறுபத்து மூன்று சிவனடியாராகிய பெரியோர்களின் வரலாற்றைக் கூறும் நூல் ஆதலின் இது பெரியபுராணம் எனப் பட்டது. திருத்தொண்டர் புராணம் என்பது இதற்கு வழங்கும் மற்றொரு பெயர்.

இந்நூலை இயற்றிய ஆசிரியர் சேக்கிழார். அவர் தொண்டை நாட்டில் உள்ள குன்றத்தூரில் சைவ வேளாளர் மரபில் பிறந்தவர். சேக்கிழார் என்பது அவர் பிறந்த குடியின் பெயர். அப் பெயரே அவருக்குப் பெயராக வழங்கலாயிற்று. அவரது இயற்பெயர் அருண் மொழித் தேவர் என்பது. அவர் அநபாய சோழனிடம் முதல் அமைச்சராய் இருந்தவர். காலம் கி. பி. 12 ஆம் நூற்றாண்டு.

[சிவனடியாருடைய மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள் என்று கொண்ட நாயனாருடைய வரலாறு இங்குக் கூறப்படுகிறது.]

**அருஞ்சொற்பொருள் :**

1 மாது ஒரு பாகர் : சிவபெருமான். மலாடர் - ஒரு நாட்டினர். கருத்து - எண்ணம். ஏவல் - அவர் இட்ட பணிகள்.

2. வரை - மலை. நெடுந்தோள் : பண்புத்தொகை. மாற்றலர் - பகைவர். முனைகள் மாற்றி - போர்முனைகளை வென்று. நீர்மை - தன்மை. திரை - அலை.

3. ஏழ் இசைகளும், பாடல் ஆடல்களும் கோயில்களில் நடை பெறச் செய்து பாதுகாத்தார். தாள்-திருவடி. சார்பு-பற்று.

4. நாடிய - பொருந்திய. தில்லை - சிதம்பரம். மன்று - சபை. நாயன்மார் - சிவனடியார்.

5. இகல் - பகை. அமர் - போர். ஓடை - யானையின் நெற்றியிற் கட்டும் பட்டம். பொருபரி - போர் செய்யும் குதிரை. பரி பவம் - அவமானம்.

6. சீலம் - ஒழுக்கம். வெண்மை + நீறு = வெண்ணீறு : பண்புத் தொகை. அற்றம் - உபாயம்; தந்திரம். செப்ப அரும் நிலை - சொல்லமுடியாத கெட்ட எண்ணம்.

7. நீறு - விபூதி. வேணி - சடை. படை - ஆயுதம். கரந்த - மறைத்த. கவளி - பை. கறுப்பு - வஞ்சகம். முத்திநாதன் : பகைவன் பெயர்.

8. வன்கண்மை - கொடுமை. கோதை - மாலை. அளகம் - கூந்தல். குழை - காதணி. சோதி - ஒளி. மறுகு - தெரு. சேதியர் பெருமான் : மெய்ப்பொருள் நாயனார்.

9. உடையவர் - சிவன் அன்புக்கு உடையவர். தடை - வாயிற் படிகள். இடை தெரிந்து அருளவேண்டும் - நேரம் அறிந்து போகவேண்டும். துயில் - தூக்கம்.

10. உறுதி - நன்மை. புரவலன் - அரசன். மாடு - பக்கத்தில். மன்றல் - மணம். குழல் - கூந்தல். மென்சாயல் - மென்மைத் தன்மை.

11. அண்டர்-தேவர். தொண்டர் - சிவனடியார். கொள்கையின் - முறைப்படி.
12. மங்கலம் - நன்மை நாயகனார் - சிவபெருமான். கொடுவந் தேன் - கொண்டு வந்தேன். இயம்ப - சொல்ல.
13. நாறும் - மணம் வீசுகின்ற. பூ + கோதை = பூங்கோதை; பூமாலை. மாது: அரசன் மனைவி.
14. பரிவு - அன்பு. ஏவி - கட்டளை இட்டு. தவிசு - ஆசனம். போற்றி - வணங்கி.
15. பத்திரம் - வாள். நினைந்த - நினைத்த. அப்பரிசே - அவ்விதமே. தவ வேடமே உண்மைப்பொருள் என்று வணங்கி வெற்றி பெற்றார்.
16. இறைப்பொழுது - நொடிப் பொழுது. எறியல் உற்றான் - வெட்டத் தொடங்கினான். குருதி - இரத்தம் சோர - வடிய. நமர் - நம்மவர்; சிவனடியார். வீழ்கின்றார்: வினையாலணையும் பெயர்.
17. வேதனை - துன்பம். தாதன் - அடிமைப் பணியாளன். இடை விலக்கா வண்ணம் - இடையில் யாரும் தடுக்காதபடி.
18. பொய்த்தவன் - பொய் வேடம் புனைந்தவன் புடை - பக்கத் தில். இறைவனது ஆணை - அரசனுடைய கட்டளை.
19. அவ்வழி - அவ்விடத்தில். வடி - கூர்மை. கானம் - காடு. வெம்மை + வினை = வெவ்வினை: கொடிய செயல். போந்தான்- வந்தான்.
20. செற்றவர் - சினம் கொண்டவர். சொல்திறம் - சொற்களின் வகை. சோர்கின்ற - நீங்குகின்ற கொற்றவர் - அரசர்.
21. விட்டனன் - விட்டேன்: தன்மை ஒருமை வினைமுற்று. ஐயன்: தத்தனாகிய பணியாளன். கருணை கூர்ந்தார் - கருணை மிகுந்தார்.
22. அரசியல் ஆயத்தார் - அரசியல் அதிகாரக் கூட்டத்தார். அழிவுறும் - வருந்துகின்ற. காதலார் - அன்புடைய சுற்றத் தார். விரவிய - கலந்த. புரவலர் - அரசர்.
23. இமையப்பாவை - இமயமலை அரசன் மகள்; பார்வதிதேவி. கழல் - திருவடி.

1. மெய்ப்பொருள் நாயனாருடைய ஊரும், சிறப்புக்களும் யாவை?
2. நாயனார் இறைவனிடத்தும் அடியாரிடத்தும் எத்தகைய அன்பு பூண்டிருந்தார்?
3. முத்திநாதன் செய்த சூழ்ச்சி யாது? ஏன் அவ்வாறு செய் தான்?
4. நாயனாரிடத்து முத்திநாதன் என்ன கூறினான்?
5. தத்தன் நாயனாருக்குச் செய்த உதவி யாது?
6. அரசியல் ஆயத்தார்க்கும், சுற்றத்தாருக்கும் நாயனார் முடி வில் என்ன கூறினார்?

## 6. மணிமேகலை

காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்த கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மகள் மணிமேகலை. மணிமேகலையின் வரலாற்றைக் கூறுவதால் இந்நூல் மணிமேகலை என்னும் பெயர் பெற்றது. இஃது ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று. ஐம்பெருங் காப்பியங்களாவன: சீவகசிந்தா மணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன. ஆசிரியர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்பவர். சங்ககாலப் புலவர் இளங்கோவடிகளுக்கும் அவர் தமையன் சேரன் செங்குட்டுவனுக்கும் நெருங்கிய நண்பர். சீத்தலை என்னும் ஊரில் பிறந்தவர். மதுரையில் வாழ்ந்தவர். பௌத்த சமயத்தினர்.

மணிபல்லவத் தீவில் கோமுகிப் பொய்கையில் ஆபுத்திரனால் இடப்பட்ட அமுதசுரபி என்னும் பாத்திரத்தை மணிமேகலை பெற்ற வரலாறு இங்குக் கூறப்படுகின்றது.

**அருஞ்சொற்பொருள் :**

வரி. 1—5. மணிமேகலா தெய்வம் - கோவலனுடைய குலதெய்வம். பொய்கை - குளம். தாழ்ந்தனள் நோக்கி - மெல்ல நோக்கிக் கொண்டு. காவதம் - ஒரு காத தூரம், (ஏறத்தாழப் பத்து மைல்.

6—18. கடவுட் கோலம் - தெய்வ வேடம். செவ்வனம் - செவ்விதாக; நன்றாக. கலம் - மரக்கலம். தொடி - வளையல். பூமியங் கிழவன் - நிலவுலகினை ஆண்ட மன்னன். ஆய பிறவி - இப் பிறப்பு.

19—29. ஆய்இழை - ஆராய்ந்தெடுக்கப்பட்ட அணிகளை அணிந்த மணிமேகலை: அன்மொழித் தொகை. இதன் - இந்த மணி பல்லவத் தீவின். சமந்தத்து உச்சி - சமந்த மலையின் உச்சி யில். மீமிசை: ஒருபொருட் பன்மொழி அறவியங்கிழவோன்: அறத்திற்கு உரிமையுடையவனாகிய புத்த தேவன். விடூஉம் - நீக்குவிக்கும். அறவி நாவாய் - அறத்துடன் கூடிய மரக்கலம். காட்சி - தோற்றம். பீடிகை - பீடம்.

30—35. தலைமையின் - முதன்மையாக. பிறழா - தவறாத. நோன் பினர் - விரதத்தையுடையவர்கள். கண்டு கை தொழுதற்கு உரியவர் ஆவர் என்க. பண்டைப் பிறவியர் ஆகுவர் - முற் பிறப்பை அறிந்தோர் ஆவர். பசுமை+தொடி-பைந்தொடி: பசிய வளையலை யணிந்தவள். ஒருதலை - உறுதி.

36—39. பெரும் பெயர்-புகழ். மயங்கிய - கலந்த. கொழுநீர் இலஞ்சி - அழகிய நீரையுடைய குளம்.

40—45. ___ இளவேனில் - இளவேனிற் பருவம். எரிகதிர் இட பத்து - ஞாயிறு இடபராசியில் இருக்கும் வைகாசித் திங்கள். ஒரு பதின்மேலும் ஒரு மூன்று சென்ற பின் - பதின்மூன்று நாண்மீன்கள் சென்றபின். மீனத்து இடைநிலை மீனத்து அகவையின் - பதினான்காவது நாளாகிய விசாகத்தன்று. (கார்த்திகை முதலாக எண்ணும் வழக்கம் அக்காலத்து [illegible] போதித் தலைவன்-அரசமரத்தடியில் வீற்றிருந்த

முதல்வன்; புத்ததேவன். அவன் பிறந்த நாள் வைகாசி விசாகம். அந் நாளில் இப்பாத்திரமும் தோன்றும் என்பது கருத்து.

46—52. அந்நாள் - அந்த விசாகநாள். அப்பொழுது - பாத்திரம் பொய்கையினுள் இருந்து வெளிவரும் நேரம். நின்னுங்கு - உன்னிடம் ஆருயிர் மருந்து - உணவு. தொலைவு இல்லா - அழிதல் இல்லாத தகைமையது - தன்மையுடையது. நறு மலர்க் கோதை: அண்மைவிளி; அறவணன்: அறவண அடிகள் என்னும் பௌத்தப் பெரியார்.

53—58 தொழுதனள் வணங்கி - கும்பிட்டு வணங்கி. கொள்கையின் - முறைப்படி. தொழுதகை மரபு - யாவரும் தொழத்தக்க முறைமையுடைய.

**வினாக்கள்:**

1. தீவதிலகை கேட்ட வினாவுக்கு மணிமேகலை அளித்த விடை என்ன?
2. மணிமேகலைக்குத் தீவதிலகை தன் வரலாறாக எவற்றைக் கூறினாள்?
3. யார் பழைய பிறவியை அறியப் பெறுவர்?
4. அமுதசுரபி என்னும் பாத்திரம் எந்த நாளில் எவ்விடத்தில் தோன்றும்?
5. அமுதசுரபியின் சிறப்பு யாது?

## ௬. பல்சுவை

### 1. வருணனை

**அருஞ்சொற் பொருள்:**

1. நீர்வளமுடைய வயலும் வயல்சார்ந்த இடமும் மருதநிலம் எனப்படும். தண்டலை - சோலை. விளக்கம் - விளக்கு. கொண்டல் - மேகம். முழவு + இன் = முழவின் - மத்தளம் போல ஏங்க - ஒலிக்க. திரை - அலை. எழினி - திரைச்சீலை. தேம்பிழி - இனிமை மிகுந்த.
2. பொங்கர் - சோலை. வாவி - குளம். பங்கயம் - தாமரை. பசுமை+கடி - பைங்கடி. கடி - மணம்; உரிச்சொல். பந்தர் - பந்தல் என்பதன் ஈற்றுப்போலி. கொங்கு-மகரந்தப்பொடி.

### 2. சீட்டுக்கவி

சீட்டுக்கவி: பழங்காலத்துப் புலவர் பெருமக்கள் தங்கள் கடிதங்களைக் கவிகளாகவே எழுதியனுப்புவது உண்டு. அவை சீட்டுக்கவி என வழங்கப்பட்டன.

அந்தகக் கவி வீரராகவ முதலியார் தொண்டை நாட்டில் பூதூர் என்னும் சிற்றூரில் பிறந்தவர். கண்ணின்றிக் குருடராய்

கல்வி கற்றுப் புலமை பெற்றுச் சிறந்த கவிகளை இயற்றியவர். காலம் 17 ஆம் நூற்றுண்டு.

ஆயிரம்கோடி என்பது பல என்னும் பொருள்தருவது. வீரகன்- வல்லமை யுடையவன். இமம் சேது பரியந்தம் - இமயமலை முதல் தெற்கே உள்ள சேது என்னும் அணை உள்ள இடம்வரை. சேட + அதிபன் - சேடாதிபன் - பாம்புகளுக்குத் தலைவனுகிய ஆதிசேடன். திரிபதகை - கங்கை. செழியன் - பாண்டியன். கந்தருவம், கந்துகம், கோணம் முதலியவை குதிரையின் வேறு பெயர்கள்.

## 3. சிலேடை

நெல்லை - திருநெல்வேலி. கோலம் - அழகு. கொங்கு + ஆர்- கொங்கார் - மணம் பொருந்திய. பொழில் - சோலை.

வாவிகள் : நீலம் மணி வால் + நந்து + ஏய் - நீலப்பூவும், முத்துக்களையுடைய வெண்மையான சங்குகளும் தங்கு கின்ற.

பொழில்கள் : நீலம் அணிவானம் தேய் - நீலநிறமாகிய அழகிய வானத்தைத் தேய்க்கின்ற.

பால் + உற - இடப் பாகத்திற் பொருந்த.

வேய்த்தோளி + உடல் + நாடினுன் - மூங்கில் போன்ற தோளை யுடைய உமையின் உடம்பை விரும்பினுன்.

காளி உடன் ஆடினுன் - காளியுடனின்று நடித்தான்.

தேங்காய்க்கு, கல்லில் உடைக்கப்படுதலாலும், மூன்று கண் ணிருப்பதனுலும் கடவுள் பூசைக்கு எடுப்பதனுலும், வலிய ஓட்டைக் கொண்டிருப்பதனுலும் என்று பொருள் கொள்க. சிவனுக்கு, கல்லால மரத்தின் அடியில் இருப்பதினுலும், மூன்று கண்கள் இருப்பதனுலும், பூசைக்குரிய தெய்வமாக எல்லாரும் சிறந்தெடுத்துக் கொள்வதனுலும், வலிய நான் முகன் தலையோட்டைக் கையில் ஏந்தியிருப்பதனுலும் என்று பொருள் கொள்க.

கள் + இதழியான் - தேன் பொருந்திய கொன்றை மாலையுடை யவன்; சிவன்.

## 4. சிறுபிரபந்தம்

1. திருக்கருவை - பாண்டிய நாட்டில் உள்ள ஓர் ஊர். அங்கு உள்ள சிவபெருமானைக் குறித்துப் பாடிய நூல் இது. அந்தம் + ஆதி - அந்தாதி. ஒரு செய்யுளின் ஈற்றுச்சொல் அடுத்த செய்யுளின் முதற் சொல்லாக வருமாறு பாடுதல் அந்தாதி எனப்படும்.

   இணை - இரண்டு. மேயினும் - பொருந்தினும்.

2. திரு ஈங்கோய் மலை சோழ நாட்டில் உள்ளது. தேவாரப் பாடல் பெற்றது.

   இலவத்தண்போது - இலவம் ஆகிய குளிர்ந்த மலர். தூங்கு வது - தொங்குகின்ற. கடுவன் - குரங்கு. இறுத்து - ஒடித்து. ஓச்சுதல் - வீசுதல். சங்கக் குழை - இறைவன் சங்கினுலாகிய குண்டலத்தை உடையவன். இறுத்தான் - தாங்கியவன்.

3. பளிங்கு - கண்ணாடிபோன்ற பளிங்குக் கல். ஈண்டி - ஒன்று கூடி. உகிர் - நகம். அரா - பாம்பு.

4. அகிலாண்டநாயகி - திருவானைக்காவில் உள்ள அம்மை. பிள்ளைத்தமிழ் என்பது, கடவுள், அரசர் முதலியோரைக் குழந்தையாக அமைத்துப் பாடப்படும் நூல். பத்துப் பருவங்களில் ஒரு பருவத்துக்குப் பத்துப் பாடலாக நூறு ஆசிரிய விருத்தச் செய்யுட்களை உடையது. அஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப் படும்.

புரந்தாய்-பாதுகாத்தாய். வழுதியர்கோன்-பாண்டியன். அலர் மடவார் - கலைமகள், திருமகள் என்னும் இருவர். மாதங்கம் - யானை. மாதங்கவனம் - திருஆனைக்கா என்னும் ஊர்.

5. திருவெங்கை - திருச்சி மாவட்டத்தில் உள்ள ஊர். மனைவியை விற்றவன் - அரிச்சந்திரன் கலை - ஆடை. சிறைப்புக விட்டவன் : இராமன். விமலர் : சிவபெருமான். மிச்சில் - எச்சில்; கண்ணப்ப நாயனார் அளித்தது. சிவபெருமான் எங்கள் எச்சில் உண்டபின் அவர் மகன் முருகனுக்கு யாம் வளர்த்த பிள்ளையைக் கொடுத்தோம். பெற்ற பிள்ளையை மன்னர்க்குக் கொடுப்போமோ ; கொடுக்க மாட்டோம் என்பது கருத்து.

## 5. வழிபாட்டுப் பாடல்

1. ஆவடு தண்துறை - திருவாவடுதுறை.
2. ஊன் - உடம்பு. உள்ஒளி ' அறிவு என்னும் உலப்பு இலா - கெடுதல் இல்லாத. புறம் புறம் - வெளியில். சிக்கென - உறுதியாக.
3. ஆழி மாயன் - பாற்கடலில் பள்ளிகொள்பவன். முகில் - மேகம். முளரி - தாமரை மலர்.
4. கருணாகரன் - கருணைக்கடல். நிகர் - ஒப்பு ; உவமை.
5. வாரிதி - கடல். சுவடு - காலடி வைத்த அடையாளம். - பெருஞ்செல்வத்தை அளிக்கும் மரம்.

வினாக்

1. மருதம் வீற்றிருந்தபோது நடந்த நாடகக் காட்சி யாது ?
2. கலைகள் தேரும் அறிஞனுக்கும் தென்றலுக்கும் உள்ள ஒப்புமை என்ன ?
3. கவி - வீரராகவருடைய பெருமைகள் எவை ?
4. சீட்டுக்கவியில் வந்துள்ள குதிரையின் பெயர்கள் எவை ?
5 "வாவிகளும், பொழிலும் நீலமணிவானம் தோய் நெல்லையே" என்பதற்குச் சிலேடைப் பொருள் என்ன ?
6 சிவனுக்குத் தேங்காய் எவ்வாறு ஒப்பு ஆகும் ?

7. ஈங்கோய் மலை எச் சிறப்புக்களை உடையது ?
8. அகிலாண்டநாயகியின் சிறப்புக்கள் எவை ?
9. வேடன் ஏன் அரசர்க்குப் பெண் கொடுக்க மறுத்தான் ?
10. வேலருக்கு வளர்ப்புப் பெண்ணை வேடர் ஏன் கொடுத்தனர் ?
11. அப்பர் தேவாரத்தில் சிவபெருமான் பெருமை எவ்வாறு கூறப்பட்டுள்ளது ?
12. இறைவன் தமக்கு என்ன நன்மைகள் செய்ததாக மாணிக்க வாசகர் கூறுகிறார் ?
13. திருமால் எச் சிறப்புக்களை உடையவர் ?
14. வீரமாமுனிவர் ஏசுநாதரை எவ்வாறு புகழ்ந்துள்ளார் ?
15. சீறாப்புராணம், முகம்மது நபியை எவ்வாறு வாழ்த்துகிறது?

# உரைநடைப் பகுதி

## க. வள்ளற்கோமான், டாக்டர், அழகப்பச் செட்டியார்

*ஆசிரியர் :* கழகப்புலவர், திரு. ப. இராமநாதபிள்ளை அவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த குலசேகரன்பட்டினம் என்பது இவருடைய ஊர். தமிழ் ஆராய்ச்சித் துறையில் வல்லவர். உரைநடை நூல்கள் பல இயற்றியுள்ளார். சித்தாந்த பண்டிதர் என்னும் பட்டம் பெற்றவர். திருமூலர் திருமந்திரத்துக்கு அரிய உரை இயற்றியுள்ளார்.

**அருஞ்சொற் பொருள் :**

நகரத்தார் - தனவணிகர் என்னும் மரபினர். தொட்டு - தோண்டி. கலம் - கப்பல். கோநகர் - தலைநகர். பயின்று - பழகி. பாரிஸ்டர் பட்டம் - வழக்கறிஞர் பட்டம். திருவினை ஆக்கும் - செல்வத்தை வளர்க்கும். அறங்காவற் குழு - அறத்தைப் பாதுகாக்கும் ஒரு ட்டத்தார்.

**ாக்கள் :**

1. நகரத்தார் தம் நாட்டின்கண் செய்துள்ள சீர்திருத்தங்கள் எவை ?
2. கல்லூரியில் படிக்கும் காலத்தில் டாக்டர் செட்டியாரிடம் இருந்த நற்பண்புகள் எவை ?
3. தொழில் துறை வளர்ச்சிக்கு அவர் அளித்த நன்கொடைகள் எவை ?
4. தமிழ்த்துறை வளர்ச்சிக்கு அவர் செய்த உதவி என்ன ?
5. காரைக்குடியில் அவர் ஏற்படுத்திய நிலையங்கள் எவை ?
6. அவருக்குக் கிடைத்த பட்டங்கள் எவை ?
7. இவ் வரலாற்றால் நாம் தெரிந்துகொள்ளும் படிப்பினை யாது?

## உ. பெற்றோர்ப் பேணல்

*ஆசிரியர் :* திரு. வி. கலியாணசுந்தரனர் அவர்கள். தமிழ்த் துறைப் பேரறிஞர். இவரைப்பற்றிய குறிப்புச் செய்யுட்பகுதியில் தரப்பட்டுள்ளது.

**அருஞ்சொற் பொருள் :**

வால் அறிவன் - தூய்மையான அறிவு உடையவன். மாற்றம் மனம் கடந்து நிற்பவர் - சொல்லுக்கும் மனத்துக்கும் எட்டாதவர். புனல் - நீர். வளி - காற்று.

பரிந்து - விரும்பி. ஒருப்படுதல் - ஒத்துக்கொள்ளுதல். அரும்பி - தோன்றி. உணர்வு - அறிவு. சாலும் - போதும். மறச்செயல் - பாவச்செயல். ஒறுத்துக்கொண்டு - தண்டித்துக்கொண்டு. உகுப்பது - சிந்துவது. சத்தியசோதனை - காந்தி அடிகள் எழுதிய தம் வரலாற்று நூல். மனமாசு - மனக்குற்றம். கரவாது - மறைக்காமல். நனி - மிகவும்.

...ன் :

1. கடவுள் இருக்கும் எட்டு வடிவங்கள் எவை ?
2. அடிகள் இளமையில் அன்னையாரிடம் எங்ஙனம் பணிந்து நடந்தார் ?
3. தீண்டாமையைப்பற்றி அடிகள் இளமையில் கொண்ட கருத்து யாது ?
4. புலால் உண்ணும்பழக்கம் அடிகளுக்கு எவ்வாறு ஏற்பட்டது?
5. எந்த மனிதன் நாளடைவில் இருகால் விலங்கு ஆவன் ?

## ௩. கடிதம் : தம்பிக்கு

...ரியர் : டாக்டர் மு. வரதராசனுர் அவர்கள். சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத்தலைவர். உரைநடை ஆராய்ச்சி நூல்கள் பல இயற்றியுள்ளார் தமிழ்நாட்டு மக்களின் முன்னேற்றத்துக்கு அரிய தொண்டாற்றி வருபவர்.

*அருஞ்சொற் பொருள் :*

மாய்ந்து - அழிந்து. இன்னல் - துன்பம். உரமாக - வலிவாக. அல்லல் - துன்பம் அறிவுக்கலை - விஞ்ஞானம் முதலிய கலைகள். நல்கினோம் - கொடுத்தோம். உள்ளுக - நினைக்க.

**வினுக்கள் :**

1. அண்ணன் தனக்கும் தம்பிக்கும் உள்ள வேறுபாடு என்று எதனைக் கூறினன் ?
2. வல்லவனுகவும் இருக்கவேண்டும் என்பதற்கு ஆசிரியர் காட்டும் காரணங்கள் எவை ?
3. உள்ளம், உடல் என்ற இரண்டையும் ஏன் ஒருவன் உரப்படுத்த வேண்டும் ?
4. திருக்குறளைக் கற்றிருந்தும் மக்கள் தாழ்வு அடைவதற்குக் காரணம் என்ன ?
5. தமிழ்மொழிக்கு நாம் எந்த எந்த வகையில் ஆக்கம் தரவில்லை?
6. பொது மக்கள் விருப்பம்போல் ஆட்சி நடக்கவில்லை என்பதற்கு ஆசிரியர் காட்டும் சான்றுகள் எவை ?

## ௪. திருக்காளத்திக் காட்சி

ஆசிரியை : திருமதி நீலாம்பிகை அம்மையார். மறைத்திரு. மறைமலை அடிகளின் அருந்தவப் புதல்வியார். தமிழ்ப்புலமை பெற்று உரைநடை நூல்கள் இயற்றித் தமிழ்த்தொண்டு புரிந்தவர். காலம்—1903—1945.

*அருஞ்சொற் பொருள் :*

அண்மையில்-அருகில். மிளிரும்-விளங்குகின்ற. குழவி-குழந்தை. மரங்களின் ஊடே - மரங்களின் இடையிலே. மலைமுகடு-மலை உச்சி. அ + வாவி-அவ்வாவி. அங்கு + அங்கே-அங்கங்கே. புறம்பே-வெளியில். பகலவன் - சூரியன். பாவை - பதுமை.

1. திருக்காளத்தி மலைப் பள்ளத்தாக்கில் இருந்த குளம் எவ்வாறு காணப்பட்டது ?
2. புறாக்களின் அன்புடைமை எவ்வாறு விளக்கப்பட்டுள்ளது ?
3. இறைவன் உறைதற்குத் தகுதியான இடம் எது? ஏன்?
4. மலையிலிருந்து இறங்கி வந்தபோது கண்ட காட்சிகள் எவை ?
5. குரங்கு தாயன்பு உடையது என்பது எவ்வாறு புலப்படுகிறது?

## ரு. ஆறுமுக நாவலர்

ஆசிரியர் : திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள். தஞ்சை மாவட்டத்தைச்சேர்ந்த கருப்பக்கிளர் என்னும் பதியினர். தமிழ்ப் புலவர் வரிசை முதலிய உரைநடை நூல்கள் பல எழுதியுள்ளார்.

அருஞ்சொற் பொருள் :

யாண்டு - ஆண்டு ; வருடம். தமையன் - அண்ணன். உள்ளம் உவந்து - மனம் மகிழ்ந்து. சிவமணி - உருத்திராக்கமணி. குறி - அடையாளம். நிந்தனை புரிவது - பழித்துப் பேசுவது. தம்+சமயம் - தஞ்சமயம். பைபிள் - கிறித்துவ வேதநூல். குன்றுவதற்கு - குறைவதற்கு. அழுக்காறு - பொறாமை. ஊதியம் - பொருள் வருவாய். இறை அன்பு - கடவுட்பற்று. நவிலற்கரிய - சொல்லமுடியாத. இளவல் - தம்பி. சமய குரவர் - சமய ஆசிரியர். திருஅருட்பாக்கள் - திருவருளால் பாடிய தேவாரம் முதலிய பாடல்கள். ஓர்+அவை - ஓரவை. அவை-சபை. பற்று - விருப்பம். வாழ்+நாள் - வாணாள். சிவ+ஆலயம் - சிவாலயம். பிணிக்கும் - தன் வயப்படுத்தும்.

ககள :

1. பார்சிவல் பாதிரியார் நாவலருடைய எவ்விருப்பங்களை ஒப்புக் கொண்டார் ?
2. மகாலிங்க ஐயர் என்ற புலவர் எதனைப் பாராட்டிக் கூறினர் ?
3. நாவலரிடம் கல்வி கற்றுத் தேறிய புலவர்கள் யாவர் ?
4. இவர் ஏன் புதிய பாடல் இயற்றும் வழக்கத்தை மேற்கொள்ள

5. இவர் பதிப்பித்த நூல்கள் எவை ?
6. 'நாவலர்' என்ற பட்டம் இவருக்கு எவ்வாறு

## சு. முரசு கட்டில்

ஆசிரியர் : திரு. "புலவர் அரசு" அவர்கள். பூவிருந்தவல்லி (பூந்தமல்லி) உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழ்ப்புலவராய்ப் பல ஆண்டுகள் பணிபுரிந்தவர் ; இப்பொழுது சென்னைத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் வெளியிடும் கலைக்களஞ்சியத்தின் துணை ஆசிரியராய்ப் பணிபுரிந்து வருபவர் ; நாடக உரைநடை நூல்கள் பல இயற்றி யுள்ளார்.

சொற் பொருள் :

முரசுகட்டில் - அரண்மனையில் உள்ள முரசு என்னும் தோற்கருவி வைக்கும் பீடம். பஞ்சை - ஏழை மகன். பீலி - மயில் தோகை. உண்டி - உணவு. நுகராமல் - அனுபவிக்காமல். பொன்பணிகள் பொன் ஆபரணங்கள்.

1. முரசு கட்டிலில் படுத்திருந்த புலவரைக் கண்டு மன்னன் எவற்றைக் கூறினன் ?
2. முரசை வழிபடுவதைவிடப் புலவரை வழிபடுவது சிறப்பு என ஏன் மன்னன் கூறினன் ?
3. மன்னனுடைய தமிழ் அன்பைப் புலவர் எவ்வாறு பாராட்டினர் ?
4. மன்னன் புலவரிடம் கூறிய வேண்டுகோள் யாது ?

## எ. கடலும் கடலையும்

ஆசிரியர் : க. ப. சந்தோஷம் அவர்கள். வேலூர் ஊரிஸ் உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராய் இருந்தவர். தமிழ் உரைநடை நூல்கள் நகைச்சுவைப்படவும், ஆராய்ச்சி முறையிலும் எழுதியவர்.

அருஞ்சொற் பொருள் :

பர்வதராஜன் - மலை அரசன். ஆக்ஞாபித்தார் - கட்டளை இட்டார்.

வினாக்கள் :

1. அகத்தியர் ஏன் தென்திசைக்கு வந்தார் ?
2. அகத்திய முனிவர் ஏன் கடலைக் குடித்தார் ?

## அ. அப்பர் அச்சகத் திறப்புவிழா

ஆசிரியர் : ஓமந்தூர், இராமசாமி ரெட்டியார் அவர்கள் ; சென்னை அரசாங்க முதல் அமைச்சராய் இருந்து ஓய்வுபெற்று உள்ளவர். தமிழ் நூல்களில் நல்ல தேர்ச்சியுடையவர் ; சித்தர் நூல்களை ஆராய்வதில் விருப்பம் கொண்டவர். நாட்டு மக்களின் கல்வி முன்னேற்றத்தில் ஆர்வம் கொண்டு இப்பொழுது வடலூருக்கு அருகில் குருகுலம் ஒன்று தோற்றுவித்துப் பணியாற்றி வருபவர்.

அருஞ்சொற் பொருள் :

புலன் அடக்கம் - ஆசைகளை அடக்கி வாழ்தல். கருவூலங்கள் - பொருள் வைக்கும் இடங்கள். வைப்பு - சேர்த்துவைத்த செல்வம். உரம் - மன வலிமை. கட்டடம் - புத்தகக் கட்டமைப்பு (Bind). வனப்பின - அழகுடையன. பொதிந்து - மூடி. பதின்மர் - பத்துப்பேர்.

வினாக்கள் :

1. நம் முன்னோருக்கு ஏன் அச்சகம் தேவை இல்லாமல்
2. படிப்பு எவற்றால் பரவ வேண்டும் ?

3. அப்பர் பெருமான் சிறப்பு யாது?
4. சித்தர் பாடல்களைப்பற்றி நீ அறிவன யாவை?
5. சரசுவதி மகாலைப்பற்றி நீ அறிந்தவற்றை எழுது?
6. பெரியவன் என அழைக்கப்படுபவன் யார்?
7. ஏழைப் பிள்ளைகளுக்கு நூல் கிடைக்க என்ன செய்ய வேண்டும்?

## கூ. சீவகசிந்தாமணி யெழுந்த வரலாறு

ஆசிரியர் : திரு பண்டித வித்துவான், தி. சங்குப்புலர் அவர்கள். மதுரை மாவட்ட நாட்டாண்மைக் கழக உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றிருப்பவர். சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தில் புலமையாளராகப் பணியாற்றி வருபவர். மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த உத்தமபாளையம் இவருடைய ஊர்.

**அருஞ்சொற் பொருள் :**

தொன்மை - பழமை. புலமை - அறிவு. ஐவகைச் சீலம் : கொலை, களவு, பொய், சூது, புலால் உண்ணல் என்ற ஐந்து தீச் செயல்களையும் நீக்கி வாழ்தல். கைவர - தேர்ச்சிபெற. பயின்று - பழகி. பிழையாது - தவறாது. பல + உயிர் - பல்லுயிர். அளவளாவி - கலந்து பழகி. நுண்மை + உணர்வு - நுண்ணுணர்வு - கூர்மையான அறிவு. அத்துணை - அவ்வளவு. நச்சினார்க்கினியர் : பழையகால உரையாசிரியர். குருக்கள் - ஆசிரியர். இலம்பகம் - நூலின் உட்பிரிவு. ஓம்படைச் செய்யுள் - வாழ்த்துச் செய்யுள். திட்பம் - உறுதி. பழிப்புரை - குற்றச்சொல். எரி - நெருப்பு. சிந்தாமணி - மாணிக்கக் கல்.

**வினாக்கள் :**

1. திருத்தக்கதேவர் இன்பச்சுவை அமைந்த நூல் இயற்றக் காரணம் என்ன?
2. ஆசிரியர் தம் மாணவரை ஏன் நரிவிருத்தம் பாடச் சொன்னார்?
3. நச்சினார்க்கினியர் உரையால் நமக்கு விளங்குவது எது?
4. சீவகசிந்தாமணியில் எவை கூறப்பட்டு உள்ளன?
5. சிந்தாமணியை இயற்றியபின் தேவருக்கு வந்த சிறப்புக்கள் எவை?
6. சிந்தாமணி என்பதன் பொருள் என்ன?

## க0. மண்ணும் விண்ணும்

ஆசிரியர் : என். கே. வேலன் அவர்கள். B A., பட்டம் பெற்றதோடு தமிழ் நூல்களைக் கற்றுத் தேர்ச்சிபெற்றவர். விஞ்ஞான நூற்கருத்துக்களை எளிமையும் இனிமையும் வாய்ந்த தமிழ்நடையில் எழுதுபவர். இவர் உரைநடை நூல்கள் சில எழுதியுள்ளார்.

**அருஞ்சொற் பொருள் :**

அண்டங்கள் - உலகங்கள். விண்மீன் - நட்சத்திரம். இனிமை + இசை - இன்னிசை. ஆணைக்கு - கட்டளைக்கு. அனல் பிழம்பு - நெருப்பு உருண்டை.

வினாக்கள் :

1. ஆண்டவனுக்கு எது திருவிளையாடலாக இருக்கிறது?
2. எவற்றில் உயிர்ப்பொருள்கள் நிறைந்துள்ளன?
3. ஆராய்ச்சியாளர் மக்கள் தோற்றத்தைப்பற்றிக் கூறுவது யாது?
4. கடலின் அடியில் வாழும் உயிர்களின் தன்மை எவ்வாறு உள்ளது?
5. விண்ணுலக உயிர்கள் எப்படி இருக்கும் என ஆசிரியர் கூறுகின்றார்?
6. ஆராய்ச்சியாளர் பொருள்களின் உருவ மாற்றத்தைப்பற்றி என்ன கூறுகின்றனர்?

## கக. நற்குணத் தாமரையும், நன்மண ரோசாவும்

ஆசிரியர் : வித்துவான் புன்னைவனநாத முதலியார் அவர்கள். நாவலர் என்னும் பட்டம் பெற்றவர். திருநெல்வேலித் திருவள்ளுவர் மன்றத் தமிழ்க் கல்லூரியில் பேராசிரியராய் இருப்பவர். சிற்றிலக்கியங்கள் சிலவற்றுக்கு உரை எழுதியுள்ளார்.

அருஞ்சொற் பொருள் :

பொய்கை - குளம். செம்மாந்து - இறுமாந்து. நளினம் - தாமரை. நிறைமொழி - நிறைந்த மொழி அறிவு. கொக்கரித்தல் - ஆரவாரம் செய்தல். கதிரவன் - சூரியன். மன்மதன் - ஐந்து மலர் அம்புகளை உடையவன்.

1. ரோசாமலர் முதலில் தாமரையைப் பார்த்துக் கேட்ட வினாக்கள் எவை?
2. மனிதருடைய பிறவி நோயைத் தாமரை எவ்வாறு நீக்குகிறது?
3. நல்ல பசுவானால் உள்ளூரில் விலையாகும்—இப்பழமொழியால் நாம் அறிவது என்ன?
4. தாமரைக்கு வழங்கும் பெயர்கள் எத்தனை? எவை?
5. ரோசா எவற்றுக்குப் பயன்படுகிறது?
6. தாமரை எவைகளுக்குப் பயன்படுகிறது?
7. தாமரை எத் தேவர்களால் பயன்படுத்தப்படுகிறது?
8. ரோசா மலர் முடிவில் என்ன கூறி மன்னிப்புக் கேட்டது?

## கஉ. ஒரு வணிகனும் குறளியும்

ஆசிரியர் : மறைமலை அடிகள் சென்னையை அடுத்த பல்லாவரத்தில் பொதுநிலைக் கழகம் நிறுவித் தமிழ்த்தொண்டும் சமயத் தொண்டும் செய்தவர். தனித்தமிழ் நடையில் அரிய ஆராய்ச்சி நூல்களும், மொழி பெயர்ப்பு நூல்களும், சிறுவர்க்கேற்ற எளிய நூல்களும் இயற்றியவர். மேல்நாட்டுக் கலை நூல்களைக் கற்று ஆராய்ந்து தொகுத்து வைத்துள்ளார். தமிழ்நாட்டின் தலைசிறந்த பெரும் புலவராய் விளங்கியவர். காலம்—கி. பி. 1875—1950.

**அருஞ்சொற் பொருள் :**

வாணிகம் - வியாபாரம். அவா - ஆசை. அல்லும் பகலும் - இரவும் பகலும். இம்மி அளவு - சிறிது அளவு. குறளி - சிறிய பேய். ஏவல் கொள்ளுதல் - வேலைவாங்குதல். இறும்பூது - ஆச்சரியம். போந்து - வந்து. இரத்தக் கா - உயிர்களைக் கொன்று இரத்தம் கொடுத்தல். கருக்கொண்ட - கருப்பம் கொண்ட. மாறுசொல்ல - மறுத்துச்சொல்ல. பயில்வோர் - படிப்போர். அரவம் தென்பட்டது - ஒலி கேட்டது. இயக்கம் - செயல்கள். வெருக்கொண்டு - அஞ்சி. நின்பால் - உன்னிடம். போந்து - வந்து. மடிந்த பின் - இறந்த பின். என் வழி - என் குடும்பத்தில் உள்ளவர். வேறு + உளதோ - வேறுளதோ. ஓம்புதற்கு - பாதுகாப்பதற்கு. சிவத்தின் அருளால் - சிவபெருமான் அருளால். திண்ணம் - நிச்சயம். இல்லம் - வீடு.

1. வணிகன் மேலும் பொருள் திரட்ட என்ன செய்தான் ?
2. மந்திரகாரனிடம் வணிகன் கற்றுக்கொண்டது என்ன ?
3. வணிகன் மனைவி ஏன் அஞ்சி நடுங்கினாள் ?
4. துறவியார் வந்து வணிகனிடம் என்ன கூறினர் ?
5. கள்வரைக் கண்ட வணிகன் வருந்தி எவற்றைக் கூறினான் ?
6. துறவியார் வணிகனுக்கு இறுதியிற் கூறிய அறிவுரைகள் யாவை ?

## கரு. கோகினூர் வைரத்தின் வரலாறு

ஆசிரியர் வரலாறு கூ-ஆம் பாடக் குறிப்பிற் காண்க.

**அருஞ்சொற் பொருள் :**

வச்சிரம் - வைரம் ; உறுதியானது. வெண்பொற் காசு - ரூபா. ஈட்டியது - சம்பாதித்தது. நவமணி - வைரம் முதலிய ஒன்பது கற்கள். பருக்கைக்கல் - கூழாங்கல். வராகன் - மூன்றரை ரூபா. வாகுவலயம் - மன்னர் தோளில் அணியும் ஒருவகை வளையமான அணி.

1. நவமணிகள் எவை ?
2. மற்ற மணிகளைவிட வைரத்திற்கு என்ன சிறப்பு உண்டு ?
3. வைரத்துக்கு உரிய குற்றங்கள் எவை ? குணங்கள் எவை ?
4. வைரம் எவ்விடங்களில் எடுக்கப்படுகின்றது ?
5. ஷாஜஹான் வைர வேலைக்காரனுக்கு ஏன் தண்டனை விதித்தான் ?
6. நாதர்ஷா—கோகினூர் வைரத்தை எவ்வாறு பெற்றான் ?
7. விக்டோரியா மகாராணியாரிடம் வந்த பிறகு அந்த வைரம் என்ன சிறப்புப் பெற்றது ?

## கச. மருத்துவ மாமணி
## டாக்டர். எம். ஆர். குருசாமி முதலியார்

*ஆசிரியர் வரலாறு க-ஆம் பாடக் குறிப்பிற் காண்க.*

**அருஞ்சொற் பொருள் :**

*பிள்ளைமைப் பருவம்-குழந்தைப் பருவம். புலன் ஆயின-வெளிப் பட்டன. மருத்துவக் கல்லூரி-வைத்தியக் கல்லூரி. ஊழியம்-வேலை: தொண்டு. தேர்வு-பரீட்சை. மிராசுதார்-விளைநிலம் உடைய செல்வர். மருத்துவ நிலையம் - ஆஸ்பத்திரி. கர்னல் எல்சி : மருத்துவத் துறையில் புகழ் பெற்ற ஒருவர். அலுவல் - வேலை. இந்திய மருத்துவப்பள்ளி - இந்திய மருந்து முறை கற்பிக்கும் பள்ளிக்கூடம். தம்+தம்=தத்தம். திருமனை - வீடு. பொருள் வைப்பு - நிலையான செல்வம். இயக்குநர் - நடத்துவோர். காணிக்கை - அன்போடு அளிக்கும் பொருள்.*

**வினாக்கள் :**

1. டாக்டர் குருசாமி முதலியார் பிறந்த ஊர் எது? ஆண்டு எது?
2. மைசூர் அரசினர் இவருக்குச் செய்த உதவிகள் யாவை?
3. இவர் பெற்ற பட்டங்கள் எவை? பதவிகள் எவை?
4. இந்திய மருத்துவப் பள்ளிக்கு இவர் செய்த தொண்டு என்ன?
5. மாணவர் கல்வி வளர்ச்சிக்கு இவர் செய்த உதவிகள் யாவை?
6. மருத்துவத்துறையில் இவரிடம் இருந்த சிறந்த பண்புகள் எவை?

## கரு. கயிலாசநாதர் கோவில்

'யர் : டாக்டர், மா. இராசமாணிக்கம் அவர்கள். தமிழ்ப் புலமையோடு ஆங்கில நூலறிவும் பெற்றவர். தமிழ்மொழியிற் சிறந்த அறிஞர் எனப் பொருள்படும் டாக்டர் பட்டம் பெற்றவர். பல துறை நூல்கள் தமிழில் எழுதியுள்ளவர். சிறந்த சொற்பொழிவாளர். இப்பொழுது மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராய் இருந்து வருகிறார். எம்.ஏ ; எல்.டி ; எம்.ஓ.எல் முதலிய பட்டங்கள் பெற்றவர்.

**அருஞ்சொற் பொருள் :**

*கழனி - வயல். கச்சிநகர் - காஞ்சிபுரம். புறமதில் - வெளிமதில். திருமடை வளாகம்-சுற்றுப்புற மண்டபங்கள். திருச்சுற்று-கோவிலைச் சுற்றியுள்ள இடம். இறையிடம்-இறைவன் இருக்கும் இடம், (கர்ப்பக் கிருகம்.) கும்பம் - விமானம். அம்மை அப்பர் - பார்வதி தேவியோடு உள்ள சிவன். அரியணை - சிம்மாதனம். சோமாஸ் கந்தப் படிமம் - இறைவன் உமையோடும் குழந்தை வடிவில் உள்ள முருகனோடும் இருக்கும் உருவம். ஆழி - சக்கரம். நாமகள் - கலைமகள். திருமகள் - இலக்குமி. ஊர்த்துவத்தாண்டவம் - ஒற்றைக் காலை மேலுயர்த்தி ஆடுதல். கவர்ந்துசெல்லல்-எடுத்துக்கொண்டு போவது. புன்முறுவல் குறுஞ்சிரிப்பு. மாடவளாகம் - மாடத்தைச் சுற்றிலும் உள்ள இடங்கள். யாழ் - வீணை.*

வினாக்கள் :

1. கயிலாசநாதர் கோவில் எவ்விடத்தில் உள்ளது?
2. இப்பொழுது அக் கோவிற் பகுதிகளில் எவை காணப் படுகின்றன?
3. இராசசிம்மனைக் களிப்பித்த நடனம் எது? அதனை விளக்குக?
4. சிறு கோயில்கள் எனப்படும் மாடங்களில் எச் சிற்பங்கள் காணப்படுகின்றன?
5. அக் கோவிலில் உள்ள கல்வெட்டுக்கள் எந்த மன்னர் காலத்து வெட்டப்பட்டவை?
6. கன்னடக் கல்வெட்டுக் கூறுவது என்ன?
7. விபுலானந்த அடிகள் இக் கோவிலைப்பற்றி என்ன கூறி யுள்ளார்?
8. இக் கோவிலைக் கொண்டு இராசசிம்மனைப்பற்றி நாம் என்ன அறிகிறோம்?

## கசா. கடன் கோடல்

ஆசிரியர் : டி. எஸ். கந்தசாமி முதலியார் எம். ஏ. அவர்கள். சாத்தூர் வழக்கறிஞர்; தமிழ்நூல் ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி யவர்; சாத்தூரில் தமிழ்ச் சங்கத்தை வைத்து நடத்தித் தமிழ்த் தொண்டு புரிந்தவர். காலம். 1892—1954.

அருஞ்சொற் பொருள் :

கோடல் - கொள்ளுதல். கேடு - கெடுதி. அல்லற்கு + உட்பட்டு = அல்லற்குட்பட்டு - துன்பத்துக்குள்பட்டு. எண் + இறந்தவர் = எண் ணிறந்தவர். நிலக்கிழவர் - விளைநிலத்துக்கு உரிமையுடையவர். அரச வினைஞர் - அரசியல் அதிகாரிகள். மெய்ச்சாயல் - உடல் தன்மை. கடும்பற்றுள்ளம் - பேராசை. மதுகை - வலிமை. துய்த்தல் - அநுப வித்தல். ஐம்புலம் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து. நுகர்ச்சி - அநுபவித்தல். துகில் - ஆடை (இங்குப் புதிய ஆடை). அமிழ்து + அன்ன = அமிழ்தன்ன - அமிர்தம் போன்ற. அடிசில் - உணவு. ஏமாப்பர் - இன்பம் அடைவர். கொள்கலம் - இருப்பிடம். பேறு - மேன்மை. பிறங்க - விளங்க. தாள் ஆளன் - முயற்சியுடையவன். அறவும் - முழுவதும். ஆகு ஆறு - பொருள் வரும் வழி, போகு ஆறு - செலவு செய்யும் வழி. இட்டிது - சிறியது.

1. ஆங்கிலப் புலவர் ஒருவர் மக்களை எவ்வாறு பிரிக்கவேண்டும் என்று கூறுகின்றார்?
2. கடன் கொடுப்பவன் ஏன் கவலைப்படுகின்றான்?
3. "ஆகாறு அளவிட்டிது" —என்ற திருக்குறள் கூறும் கருத்து என்ன?
4. நம் நாட்டுமக்கள்—ஏன் கடன் வாங்குகின்றார்கள்?
5. பயிர்த் தொழில் சிலர்க்கு ஏன் இலாபம் தருவதில்லை?
6. கடன் வாங்குவதால் வரும் கெடுதிகள் எவை?

## கஎ. சமையற் கலை

ஆசிரியை: குமாரி பத்மாசினி அவர்கள் B. Sc., D. S. S. பட்டம் பெற்றவர். பெண்கள் முன்னேற்றத்துக்காக உழைக்கும் பெருமையுடையவர். தமிழ் ஆர்வம் உடையவர்; தமிழ்க் கட்டுரைகள் எழுதுவதில் வல்லவர். கலைக்கதிரில் இவர் கட்டுரைகள் பல காணலாம்.

**அருஞ்சொற் பொருள்:**

அடுப்பு + ஊதும் = அடுப்பூதும். விவிலிய நூல் - கிறித்துவ வேத நூல்.

**வினாக்கள்:**

1. உலக சமாதானம் பெண்கள் கையில் இருக்கிறது என்பது எவ்வாறு பொருந்தும்?
2. சீனர் எவ்வாறு சமைக்கக் கற்றுக் கொண்டனர்?
3. சமையற் கலையைப் பற்றிக் கல்லூரிகளில் படிப்பதால் வரும் நன்மை என்ன?
4. உணவை ஏன் சமைக்க வே ம்?
5. உலர் சமையல் முறையில் எத்தனை வகைகள் உண்டு?
6. உணவில் சத்துக் குறையாமல் இருக்க எப்படிச் சமைக்க வேண்டும்?
7. உணவுத் திட்டம் எவ்வாறு அமைய வேண்டும்?

## கஅ. நல்லமரமும் நச்சுமரமும்

ஆசிரியர்: டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராய் இருப்பவர்; பி, ஏ. பி. எல் பட்டம் பெற்றவர்; சுவையும் கருத்தும் உடைய தமிழ் நூல்கள் பல எழுதியுள்ளார். தமிழ் ஆராய்ச்சித் துறையில் வல்லவர்; மக்கள் உள்ளத்தைக் கவரும் முறையில் சொற்பொழிவு ஆற்றுபவர்.

**அருஞ்சொற் பொருள்:**

வேங்கை - புலி. வேழம் - யானை. அலக்கண் - துன்பம். திரை - அலை. பொய்கை - குளம். நன்மை + தாமரை = நற்றாமரை. கயம் - குளம். துயின்ற - தூங்கிய. தோடு + ஆர் + கமலம் = தோடு - இதழ். ஆர்-நிறைந்த. கமலம்-தாமரை. அ + வாவி = அவ்வாவி. வாவி-குளம். சேய் - குழந்தை. பசுமை + இலை = பாசிலை. கவின்பெற - அழகுபெற. மருங்கு - பக்கம். இலங்க - விளங்க. தண்மை - குளிர்ச்சி. தடாகம் - குளம். வரையாது - எல்லை இல்லாமல். ஊருணி - குளம். நச்சுக்கனி - விடத்தையுடைய பழம். நச்சப்படாதவன் - விரும்பப்படாதவன்.

**வினாக்கள்:**

1. இளைஞர் இருவரும் கண்ட குளம் எவ்வாறு இருந்தது?
2. இளைஞர் முதலில் மரத்தால் பெற்ற நன்மை என்ன?
3. அரசிளங்குமரன் தலைநோய் எவ்வாறு நீங்கியது?

4. ஊருணியும், பயன்மரமும் யாருக்கு உவமை? எவ்வாறு?
5. நச்சு மரத்தைப்பற்றி அவ்வூர் மனிதன் என்ன கூறினான்?
6. அறிவுடையவன் செல்வத்துக்கும், அறிவு இல்லாதவன் செல்வத்துக்கும் உள்ள வேறுபாடு என்ன?

## க௯. தென்னையின் செல்வம்

ஆசிரியர்: ஜனாப் P. A. முகம்மது இப்ராஹீம் அவர்கள், உதவி எண்ணெய் வித்து நிபுணர், அரசாங்க விவசாயத்துறை ஆராய்ச்சியாளர். தமிழ்க் கட்டுரை எழுதுவதில் வல்லவர். "மேழிச் செல்வம்" என்ற பத்திரிகையில் இவர் கட்டுரைகள் பல காணலாம். இ ஊர் பட்டுக்கோட்டை.

அருஞ்சொற் பொருள்:

நாற்றங்கால் - விதைகளை முளைக்கவைக்கும் நிலம். வீரியம் - வலிமை. நெற்று - முதிர்ந்த காய். உரம் - எரு

1. நம்நாட்டில் தேங்காய் எண்ணெய் எந்த அளவில் பற்றாக் குறையாக இருக்கிறது?
2. தென்னங்கன்றுகள் எவ்விடங்களில் விற்கப்படுகின்றன?
3. பொறுக்குத் தென்னங் கன்றுகளை ஏன் நடவேண்டும்?
4. தென்னங் கன்றுகளை எம்முறையில் நடுதல்வேண்டும்?
5. தென்னைக்கு எரு இடும் முறைபற்றி நாம் அறிவன யாவை?
6. இடைப்பயிர் செய்வதால் வரும் நன்மை என்ன?
7. தென்னையைத் தாக்கும் பூச்சிகளைப்பற்றியும் அவற்றை அழிக்கும் முறைகளையும் எழுது.

## உ௦. நான் கண்ட ஜப்பான்

ஆசிரியர்: திரு. சு. இராமசுவாமி நாயுடு அவர்கள். சென்னை நகர மேயராக இருந்தவர். ஜப்பான் ஆஸ்திரேலியா முதலிய நாடுகளைச் சுற்றிப்பார்த்தவர். திருத்தமான தமிழில் சொற்பொழிவாற்றவும், உரைநடை நூல்கள் எழுதவும் வல்லவர். இவர் எழுதிய 'நான் கண்ட ஜப்பான்' என்னும் நூலில் இருந்து எடுக்கப்பட்டது இக் கட்டுரை.

அருஞ்சொற் பொருள்:

எழுஞாயிறு - காலைச்சூரியன். கைபுனைந்து - கையினால் அலங்கரித்து. இயற்று - செய்யாத. கவின் - அழகு. முகில் - மேகம். கொண்டல் - மேகம். பொற்பு - அழகு. பொழில் - சோலை. உவப்பு ஊட்டி - மகிழ்ச்சி உண்டாக்கி. ஈர்க்கும் வண்ணம் - இழுக்கும் வண்ணம். அமரர் - தேவர். உய்க்கும் - கொண்டுபோய்ச் சேர்க்கும்.

1. ஜப்பான் என்பதற்குரிய மறுபெயர் என்ன ? அதன் பொருள் என்ன ?
2. ஜப்பான் நாட்டில் உள்ள அழகுடைய காட்சிகள் எவை ?
3. பூஜியாமா என்ற மலையைப்பற்றி நீ அறிந்தவைகளை எழுது.
4. ஜப்பானில் உள்ள சிறப்புடைய ஆறுகள் எவை? அவற்றின் சிறப்புக்கள் எவை ?
5. ஜப்பானில் கிடைக்கும் இயற்கைச் செல்வங்கள் எவை ?
6. ஜப்பானியர் கடலிலிருந்து பெறும் பொருள்கள் எவை ?
7. அந்நாட்டுப் பழங்குடி மக்களைப்பற்றி நீ அறிவன யாவை ?
8. அரசாங்கப் பொதுவிடுமுறை நாள் எது ? ஏன் அந்நாள் கொண்டாடப்படுகிறது ?

# மனப்பாடம் செய்தற்கு உரிய பகுதி

## I. வாழ்த்து

1. கடவுள் வாழ்த்து
   *செய்யுள் 1* — *வரிகள் 4*

2. தமிழ்த்தாய் வாழ்த்து
   *செய்யுள் 1* — ,, *4*

## II. அறவுரை

1. திருக்குறள்
   *செய்யுள் எண் 7, 9, 10, 12, 16, 17, 18, 20, 22, 25, 30, 31, 32, 37, 38, 40, 49, 61, 63, 80.* — *40*

2. நாலடியார்
   *செய்யுள் 2*

3. நீதிநெறி விளக்கம்
   *செய்யுள் 4*

## III. தொடர்நிலைச் செய்யுள்

1. நளவெண்பா
   *செய்யுள் எண் 5, 8, 9, 15, 16* — ,, *20*

2. திருவிளையாடற் புராணம்
   *செய்யுள் எண் 4, 5* — ,, *8*

3. பெரிய புராணம்
   *செய்யுள் எண் 3, 4* — ,, *8*

## IV. பல்சுவை

1. பல்சுவை : வருணனை
   *செய்யுள் 1* — ,, *4*

2. வழிபாட்டுப் பாடல்
   *செய்யுள் 2* — ,, *4*

ஆக வரிகள் *100*

